# க.அயோத்திதாஸப் பண்டிதர் சிந்தனைகள் - 1

# க.அயோத்திதாஸப் பண்டிதர் சிந்தனைகள் - 1

க.அயோத்திதாஸப் பண்டிதர் சிந்தனைகள் - 1

க.அயோத்திதாஸப் பண்டிதர்

மின்னூல் வெளியீடு : FreeTamilEbooks.com

உரிமை : CC0 கிரியேட்டிவ் காமன்ஸ். எல்லாரும் படிக்கலாம், பகிரலாம்.

அட்டைப்படம் - லெனின் குருசாமி - guruleninn@gmail.com

# க. அயோத்திதாஸப் பண்டிதர் சிந்தனைகள்

**தொகுதி : ஒன்று**




…

தலித் சாகித்ய அகாடமி

சென்னை

# பதிப்புரை

அண்ணல் அம்பேத்கர், பௌத்தத்தின் முக்கியத்துவத்தை உணர்வதற்கு காரணியாக இருந்தவரான அயோத்திதாஸப் பண்டிதர் கோவை மாவட்டத்தில் 1845-ஆம் ஆண்டு மே மாதம் இருபதாம் தேதி பிறந்தார். அவரது இயற்பெயர் காத்தவராயன். சித்த மருத்துவத்தில் தேர்ச்சி பெற்ற பின்னர் தனது குருவான அயோத்திதாஸ் கவிராஜ பண்டிதரின் பெயரையே தனக்கும் சூட்டிக்கொண்டார்.

தமிழில் மிகுந்த புலமை கொண்டிருந்த பண்டிதர், பாலி, சமஸ்கிருதம், ஆங்கிலம் முதலான மொழிகளிலும் தேர்ச்சி பெற்று விளங்கினார்.

1870 வாக்கில் நீலகிரியில் அத்வைதாநந்த சபையை நிறுவினார். 1891ல் திராவிட மகாஜன சபை அயோத்திதாஸப் பண்டிதரால்தான் நிறுவப்பட்டது. சிந்தனையாளர்கள் மதிக்கும் மேதமையோடு விளங்கிய பண்டிதர், ஒடுக்கப்பட்ட மக்களின் பால் பேரன்பு கொண்டவராயிருந்தார். அம்மக்களின் குழந்தைகளுக்கு கல்வி புகட்டப் பாடுபட்டார். சென்னையில் அந்தக் குழந்தைகளுக்காக இலவச பள்ளிக் கூடங்களை துவக்க உதவினார்.

1907-ஆம் ஆண்டு ஜூன் மாதம் 19-ந் தேதி “ஒரு பைசா தமிழன்” என்ற வாரப்பத்திரிகையை அவர் துவக்கினார். அயோத்திதாஸப் பண்டிதரால் உருவாக்கப்பட்ட சாக்கிய பௌத்தர்கள் சங்கம் தமிழ் சமுதாயத்தின் சமூக அரசியல் போக்கையே மாற்றியமைத்தது.

தமிழ் இலக்கியங்களைப்பற்றியும், சித்த மருத்துவம் குறித்தும் அயராது எழுதி வந்த பண்டிதர் அரிய தமிழ் நூல்களை பதிப்பித்தும்; தமிழ் இலக்கியங்களுக்கு குறிப்பாக வள்ளுவர், ஔவையார் ஆகியோர் படைப்புகளுக்கு பௌத்த மார்க்கத்தின் கோணத்திலிருந்து புதிய விளக்கங்களை எழுதியும் ஒரு மறுமலர்ச்சியை உண்டாக்கினார்.

தமிழில் அதுவரையிலும் புறக்கணிக்கப்பட்டிருந்த படைப்புகள் பல அவரால் புதுவிளக்கமும், கவனிப்பும் பெற்றன. இருபதுக்கும் மேற்பட்ட நூல்களை இயற்றிய அயோத்திதாஸ் பண்டிதர் கல்வியாளராக, சமூக, மத சீர்திருத்த வாதியாக, அரசியல் சிந்தனையாளராக, மருத்துவராக, படைப்பாளியாக, பத்திரிகை ஆசிரியராக பல தளங்களில் பங்களிப்பு செய்தவர்.

பெரியாருக்கும், அம்பேத்கருக்கும் சிந்தனையில் நடை முறையில் முன்னோடியாகத் திகழ்ந்தவர் அயோத்திதாஸப் பண்டிதராவார். சுயராச்சியமென்பது பார்ப்பனர்களின் நலன்களுக்கே உதவக்கூடியதாயிருக்கும் என்று பெரியாரும், அம்பேத்கரும்

சொல்வதற்கு முன்னதாகவே வலியுறுத்திக் கூறியவர் அயோத்திதாஸப் பண்டிதர். தர்க்கபூர்வமான பார்ப்பனீய எதிர்ப்பையும் முதன் முதலாக முன் வைத்த தமிழ் சிந்தனையாளர் அவரேயாவார்.

பிற்படுத்தப்பட்ட சாதியினரின் நலன்களின் நோக்கில் முன்வைக்கப்பட்ட பார்ப்பனீய எதிர்ப்பென்பது இன்று தனது ஆற்றலை இழந்துவிட்டது. இதை முன்னுணர்ந்திருந்த அம்பேத்கர் இது பற்றி 1944 ஆம் ஆண்டிலேயே பேசியிருக் கிறார். "….. பார்ப்பரைல்லாதார் இயக்கம் இந்நாட்டின் வரலாற்றின் ஓர் முக்கிய நிகழ்வாகும். அதேபோல அதன் வீழ்ச்சியும் மிகுந்த வருத்தத்துடன் நினைவில் கொள்ளப்பட வேண்டிய ஒன்றாகும்" எனக் குறிப்பிடும் அம்பேத்கர் அந்த வீழ்ச்சிக்கான காரணங்களையும் சுட்டிக்காட்டுகிறார். "இதன் வீழ்ச்சிக்குக் காரணங்களாக இரண்டு விஷயங்கள் எனக்குத் தோன்றுகின்றன. முதலில், பார்ப்பனர்களுக்கும் தமக்குமான உண்மையான வேறுபாடு என்னவென்பதை இவர்களால் உணர்ந்துகொள்ள முடியவில்லை. பார்ப்பனர்களை இவர்கள் கடுமையாக விமர்சித்து வந்தாலும் இவர்களுக்கிடையிலான கொள்கை ரீதியிலான வேறுபாட்டை இவர்களால் கூற முடிந்ததா? இவர்கள் பெருமளவிற்குப் பார்ப்பனீய வசப்பட்டிருந்தனர். இவர்கள் நாமம் இட்டுக்கொண்டு தங்களை இரண்டாந்தரப் பார்ப்பனர்களாகக் கருதிக்கொண்டனர். பார்ப்பனீய

கொள்கைகளைக் கைவிடுவதற்கு மாறாக அதை உறுதியாகப் பிடித்துக்கொண்டனர். மேலும், பார்ப்பனர்கள் மீது இவர்களுக்கு இருந்த கோபமெல்லாம் பார்ப்பனர்கள் தங்களை இரண்டாம் நிலையில் வைத்துள்ளனர் என்பதுதான்" என்று அம்பேத்கர் கூறினார். அம்பேத்கர் கூறியது இன்று மேலும் பொருத்தமானதாயிருக்கிறது.

பிற்பட்ட சாதியினரின் நலன்களை மட்டுமே மையமாக வைத்து கட்டப்பட்ட பார்ப்பானீய எதிர்ப்பு இயக்கம் கொஞ்சம் கொஞ்சமாக சமரசத்தை நோக்கி சரிந்தது. அதனால் தான் அயோத்திதாஸப் பண்டிதரின் சிந்தனைகளை அது புறக்கணித்தது. ஒரு நூற்றாண்டுக்குள்ளாகவே பண்டிதரின் பெயரும், சிந்தனைகளும், பங்களிப்பும் வரலாற்றிலிருந்து துடைக்கப்பட்டன. உள்ளீடற்ற பார்ப்பன எதிர்ப்பு தனது தர்க்க பூர்வமான முடிவுக்கு சென்று விட்ட இன்றைய சூழலில் இந்தியாவிலும், இலங்கையிலும் தாழ்த்தப்பட்ட மக்களை மையமாகக் கொண்ட பார்ப்பன எதிர்ப்பின் அவசியம், உணரப்பட்டுள்ளது. தமிழ் அடையாளம் என்பதும் இந்த மக்களை மையமாகக் கொண்டே கட்டமைக்கப்பட வேண்டுமென்ற புரிதல் இப்போது வந்துள்ளது. இது அயோத்திதாஸப் பண்டிதரின் சிந்தனைகளுக்கான முக்கியத்துவத்தை மீண்டும் உணர்த்தியுள்ளது. "தமிழன" என்ற பெயரில் பத்திரிகையை நடத்தி சுயமரியாதைமிக்க அடையாளத்தை உருவாக்கிய அயோத்திதாஸப்பண்டிதரின்

சிந்தனைகள் தமிழரின் வாழ்வுரிமைக்கான போராட்டத்தில் இன்று படைக்கலன்களாகின்றன.

பார்ப்பனர்களின் மோசடிகளை வேறு எவரைவிடவும் ஆதாரங்களோடு அம்பலப்படுத்தியவர் அயோத்திதாஸப் பண்டிதர். ஒரு அலுவலகத்தில் ஒரு பார்ப்பனர் வேலைக்கு சேர்ந்துவிட்டால் அவர் தனது உறவினர்களையெல்லாம் அங்கே கொண்டு வந்து சேர்த்து அதையொரு பார்ப்பனக் கூடாரமாக மாற்றிவிடுகிறார் எனப் பண்டிதர் குறிப்பிட்டார். “சுதேசமித்திரன்”, “இந்தியா” ஆகிய பத்திரிகைகளின் செய்தி வெளியிடும் முறையிலிருந்த சாதிக் கண்ணோட்டத்தை அயோத்திதாஸப் பண்டிதர் அம்பலப்படுத்தியுள்ளார்.

சுதேசி மற்றும் சுயராச்சிய இயக்கங்களின் உந்து சக்தியாக இருப்பது நான்கு வகைத் திமிர்கள் தான் என அயோத்திதாஸப் பண்டிதர் குறிப்பிட்டார். சாதித்திமிர், மதத்திமிர், அறிவுத்திமிர் மற்றும் பணத்திமிர் ஆகிய நான்கு திமிர்களே சுயராச்சிய போராட்டத்தை உந்திச் செல்கின்றன என்றார் பண்டிதர். அந்நியப் பொருட்களைவிடவும் சாதிப் பெருமையைப் புறக்கணிப்பதென்பதே முக்கியமானது எனக் குறிப்பிட்ட பண்டிதர், “பறைச்சேரி என்பது நீங்கள் குறிப்பிடும் தாய் நாட்டில் உள்ளதா?” என்று கேள்வி யெழுப்பினார்.

காங்கிரஸ்காரர்களின் போலித்தனங்களைச் சாடவும் பண்டிதர் தயங்கியதில்லை. தென்னாப்பிரிக்காவில் உள்ள இந்தியர்கள் மோசமாக நடத்தப்படுவது பற்றிக் கூக்குரலெழுப்பும் காங்கிரஸ்காரர்கள் பஞ்சமர்களைத் தாங்கள் மனிதத் தன்மையற்ற முறையில் நடத்துவதுப்பற்றி வாய் திறப்பதில்லையேயெனவும் சுட்டிக்காட்டினார்.

பார்ப்பனர்கள் அறிவாளிகள் என்று கூறப்படுவது பெரும் பொய் என்பதை அயோத்திதாஸப் பண்டிதர் நிரூபணம் செய்தார். பார்ப்பனர்களின் அறிவு பயனற்ற, நடைமுறைக்குதவாத அறிவாகும். அது நம்முடைய விவசாயத் தொழிலுக்கோ, நீர்ப்பாசனம், போக்குவரத்து போன்ற துறைகளுக்கோ பயன்படாது. எனவே தான் நம் நாடு இப்படி பின்தங்கிய நிலையில் உள்ளதென அவர் கூறினார்.

சுதேசி இயக்கத்தின் மீதான அவரது விமர்சனமும் எதிர்ப்பும் கண் மூடித்தனமாக எழுந்தவையல்ல. 1899-ல் அயோத்திதாஸப் பண்டிதரும் அவர் உருவாக்கிய திராவிட மகாஜன சங்கத்தைச் சேர்ந்த மற்றும் சிலரும் பறையர்களது நலன்கள் குறித்த கோரிக்கைகளை காங்கிரசிடம் முன் வைத்தனர். அவற்றை மெட்ராஸ் மகாஜன சபையிடம் வைக்குமாறு காங்கிரஸ் கூறிவிட்டது. அப்படி மெட்ராஸ் மகாஜன சபையிடம் முன்வைத்தபோது அங்கே அது உதாசீனப்படுத்தப் பட்டது. ஆலயங்களில் வழிபடும் உரிமை

பஞ்சமர்களுக்கு வேண்டுமென்ற அயோத்திதாஸரின் கோரிக்கையை தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த சிவராம சர்மா என்பவர் கேலி செய்தார்.

பஞ்சமர்களுக்கென்று மதுரை வீரன், காட்டேரிசாமி, கருப்பசாமி இருக்கும் போது சிவனையும், விஷ்ணுவையும் வழிபட அவர்கள் ஆசைப் படலாமா என்று ஏளனம் செய்தார். பஞ்சமரது குழந்தைகள் கல்வி பயிலும் உரிமை வேண்டும், புறம்போக்கு நிலங்களை பஞ்சமருக்கு உரிமையாக்கித் தரவேண்டுமென்ற பண்டிதரின் கோரிக்கைகளை அங்கு ஒருசிலரே ஆதரித்தனர். சுயராச்சியத்தின் நோக்கம் அதிகாரத்தைக் கைப்பற்றுவதாக மட்டுமே இருக்கக் கூடாது. சமூக பொருளாதார சுபிட்சத்தை உள்ளடக்கியதாக இருக்க வேண்டும். மக்களின் வாழ்க்கையில் மாற்றம் உண்டானாலொழிய நாடு முன்னேற முடியாது என்று பண்டிதர் கருதினார். அணுகுமுறையிலிருந்த அடிப்படையான இந்த வேறுபாடே சுயராச்சியம் பற்றிய அவரது விமர்சனங்களுக்குக் காரணமாய் அமைந்தது.

ஆதியில் பௌத்தர்களாயிருந்த மக்கள் பறையரெனவும் தீண்டாதாரெனவும் இழிவுபடுத்தப்பட பார்ப்பனர்களின் சூழ்ச்சியே காரணமென ஆய்ந்தறிந்த அயோத்திதாஸப் பண்டிதர் பார்ப்பனர்களின் பொய்மையை அம்பலப்படுத்தினார். பாலி,

சமஸ்கிருதம், ஆங்கிலம் முதலான மொழிகளிலும் தமிழிலக்கியங்களிலும் தமக்கிருந்த புலமையினால் பார்ப்பனரின் சதிகளை ஆதாரங்களோடு வெளிக்கொணர்வது அவருக்கு சாத்தியமாயிற்று.

இந்தத் தொகுப்பில் பார்ப்பனீயத்தை விமர்சித்து அயோத்திதாஸப் பண்டிதர் எழுதிய ஐந்து நூல்கள் தொகுக்கப் பட்டுள்ளன. வெவ்வேறு ஆண்டுகளில் தனித்தனி நூல்களாகப் பிரசுரிக்கப்பட்ட இந்த நூல்களை ஒரே தொகுப்பாக வைத்து வாசிக்கும் போது இவற்றின் ஆற்றல் மேலும் அதிகரிக்கிறது. அரிச்சந்திரன் பொய்கள் நூலில் மா. அரங்கசாமி பண்டிதர் எழுதிய ஒரு பகுதியும் சேர்க்கப் பட்டுள்ளது. சித்தார்த்தா புத்தகசாலையார் 1950-ல் வெளியிட்ட ஐந்தாம் பதிப்பில் இந்தப் பகுதியும் இடம்பெற்றிருந்தது. பொருத்தமும், முக்கியத்துவமும் கருதி அந்தப் பகுதி அப்படியே இந்தத் தொகுப்பிலும் சேர்க்கப்பட்டுள்ளது.

சந்தி பிரிப்பது முதல் எழுத்துக்கள் வரை பழைய வெளியீடுகளில் இருந்ததே இதிலும் பின்பற்றப் பட்டுள்ளது. எந்தப்பதிப்பிலிருந்து எடுக்கப்பட்டதென்னும் விவரம் தெரிய அந்தப் பதிப்புகளின் முதல் பக்கங்கள் அப்படியே வெளியிடப் பட்டுள்ளன. பெரும் நிறுவனங்கள் சிரத்தையோடு செய்ய வேண்டிய அரிய பணி இது.

பரவலான மக்களுக்குச் செல்ல வேண்டுமென்பதற்காகவே இப்படித் தொகுப்புகளாக வெளியிடுகிறோம்.

முதல் தொகுதியான இத்துடன், ஸ்ரீ அம்பிகையம்மன் அருளிச்செய்த திரிவாசகம், அம்பிகையம்மன் (ஔவை) வரலாறு ஆகியவை அடங்கிய இரண்டாவது தொகுதியும்; முருகக்கடவுள் வரலாறு, திரிக்குறள் கடவுள் வாழ்த்து, புத்தமார்க்க வினா - விடை, விவாக விளக்கம் ஆகியவை அடங்கிய மூன்றாவது தொகுதியும்; இந்திரர் தேச சரித்திரம் என்ற முழுநூல் நான்காவது தொகுதியாகவும் வெளியாகின்றன.

மத்திய அரசின் சார்பில் சென்னையில் ஏற்படுத்தப் பட்டுள்ள சித்த மருத்துவ ஆராய்ச்சி மையத்துக்கு அயோத்திதாஸப் பண்டிதரின் பெயர் மத்திய சுகாதாரத்துறை அமைச்சரான திரு.தலித் எழில்மலை அவர்களின் முயற்சியால் தற்போது சூட்டப்பட்டுள்ளது.

இந்தத் தொகுப்புகளில் இடம் பெற்றுள்ள படைப்புகளைப் பெறுவதில் உதவிய எஸ்.வி.ராசதுரை, கண்ணன்.எம் (புதுவை) ஆகியோருக்கும் இவை வெளிவருவதிலும், மெய்ப்புத் திருத்துவதிலும் உதவிய ரவிக்குமார், கு.மு.ஜவஹர், ஆசைத்தம்பி, சி.துரைக்கண்ணு, ஆகியோருக்கும் நன்றி.

இந்த விளைச்சலின் பலன் வெகுமக்களுக்கு உரித்தாகட்டும்.

# யதார்த்த பிராமண வேதாந்த விவரம்

** History of the real Brahmin**

** பிராமணன் என்பவன் யார்?**

வேத புத்தகங்களை வாசித்தவன் பிராமணனா? குரு மூலம் தீக்ஷைப் பெற்றவன் பிராமணனா? புராணேதிகாசங்களைப் படிக்கக் கேட்டவன் பிராமணனா? தெய்வ பக்தி மிகுந்து பைத்தியக்காரனைப் போன்றவன் பிராமணனா? பூஜை, ஆராதனை, அர்ச்சனை முதலியது செய்து பழகியவன் பிராமணனா? துறந்து அக்கினியை அடைக்காத்துக் கொண்டிருப்பவன் பிராமணனா? உலகம் மருவ பொய் உபதேசம் செய்து ஜீவிப்பவன் பிராமணனா? சிறிய நூல் போர்வைத் தெரிய உடம்பில் துணி அணியாதவன் பிராமணனா? பிரம்மாவை இகழ அவர் முகத்தில் பிறந்தேன் என்பவன் பிராமணனா? சுவாமியை எங்கள் பரம்பரையோர் வரப் பெற்றார்கள் என்பவன் பிராமணனா? ஓரிடத்தில் முதலில் பிறந்தவன் என்றும், மற்றோரிடத்தில் இரண்டாம் பிறப்பாளன் என்றுஞ் சொல்பவன் பிராமணனா? கோழி வயிற்றிலிருந்து முட்டையும், அதே முட்டையிலிருந்து கோழிக்குஞ்சும் பிறப்பது போல் பிறக்கிறேன்

என்பவன் பிராமணனா? கருப்பு (இந்தியா) மனிதர்களுக்கு நானே வேதம் போதிக்கிறவன் என்று பிதற்றுகிறவன் பிராமணனா? ஜாதிகளுக்கு ஆதியானவன் பிராமணனா? இந்தியர்களை அடக்கி அடிமைப்படுத்தியவன் பிராமணனா? வேத புளுகுகளைப் படிக்கக் கேட்ட சூத்திரனுக்கு, காய்ச்சிய ஈயத்தை காதில் ஊற்ற அரசர்களுக்குக் கற்பித்தவன் பிராமணனா? க்ஷத்திரிய வைசியர்களைக் கையகப்படுத்திக் கொண்டு, பூமி ஆள இச்சிப்பவன் பிராமணனா? நீதிமன்றத்தில் வக்கீல் வேலைப் பார்ப்பவன் பிராமணனா? தானே கடவுள், அல்லது தன்னைப்போலவே கடவுள் வருவார் என்பவன் பிராமணனா? செத்தவர்கள் பெயரில் அரிசி பருப்பு வாங்கி ஜீவிப்பவன் பிராமணனா? மூடமத சடங்காசாரங்களில் மூழ்கியவன் பிராமணனா? இல்லை, இல்லை, இல்லை. சர்வ பற்றுக்களுமற்று சமதர்மத்தில் நின்று உண்மையாக உலகத்தில் போதிப்பவன் எவனோ; அவனே பிராமணன், அவனே அறிவடைந்தவன். அவனே சத்தியவந்தன்.

** முகவுரை**

முற்காலம் இந்தியாவில் குடியேறி, தற்காலம் பிராமணர், வேதியர், அந்தணர், இருபிறப்பாளர், ஸாஸ்திரி, பூதேவர் என்று பலவித மரியாதைப் பெயர்களோடு, வழக்கி வாழ்ந்து வரும் ஒரு சிறு கூட்டத்தார்களாகிய பாரசீக தேச சோம்பேறிகளுக்கே

மறைமுகத்தோரென்று புகழ்ந்து, அவர்களின் பாதாரமே துணை என நம்பி மோசம் போய்க்கொண்டிருக்கிறார்கள். பிராமணர்களின் துர்போதனையால் எழுதப்பட்ட ஒவ்வொரு நூல்களும், தங்களையுயர்த்தி, இந்திய பூர்வக் குடிகளாகிய பவுத்தர்களைத் தாழ்த்திக் கூறிவைத்துள்ளது கற்றார்க்குக் கைக்கண்ணாடியாகும். எத்தேசத்திலாயினும் ஒரு பவுத்தன் தலை சிறந்து குடிகளிடத்து அன்பு பாராட்டி வருவானாயின், அதனையறிந்த பார்ப்பனர்கள் தங்கள் குலத்தவர்களை அல்லது காட்டு மனிதராகிய சூத்திரர்களை (இந்துக்களை) ஒருங்கே சேர்த்துவந்து (அவதாரஞ் செய்து) அவனைக் கெடுத்து, அந்நாட்டில் தங்களது பிராமண மதத்தைக் கைக்கொள்ளச் செய்து வருவார்கள். வந்துக்கொண்டிருக்கிறார்கள்.

இதை உற்றுணர்தற்கின்றி பார்ப்பன படுமோச புராண இதிகாசங்களில் கவனஞ் செலுத்தி, ஆரியர்கள் மெய்யான தேவர்களென்றும், பிராமணர்களென்றும் அவர்களுக்குப் பற்பல உபகாரங்களும், தங்கள் சகோதரர்களாகிய பவுத்தர்களே பார்ப்பனர்களின் பகைவரென்றும், ராக்ஷசரென்றும், இவர்களுக்கு கணக்கற்ற அபசாரங்களும் செய்துவருகின்றார்கள். உண்மையாக பிராமண நிலை இருந்தால், அதை எவனாவது ஏற்று அதின்படி சீலத்தில் நிலைத்து பிராமணனென்று வெளிவரப்படாதோ! அப்படி வந்தால் பிராமணனாகானோ? ஆகுவான் அப்படியிருக்க ஒரு குலத்தானே பிராமணன். மற்றவர்கள் இல்லை என்றால், வேதமோதுவதாலன்றி,

ஜாதியால் பிராமணன் உண்டாகுவானோ? இல்லையே. தங்கள் சகோதரர்களாகிய பௌத்தர்களைக் கொல்வதுதானோ? பிராமணமத பிராமணநிலை? பிரம்மாவின் முகத்திற் பிறந்தவனுக்கே இந்த மூட புத்தியுண்டானால், பிரம்மாவின் கை, துடை, கால் முதலிய பாகங்களில் பிறந்தவனுக்கு இன்னம் எவ்வளவு முட்டாள் புத்தியுண்டாகாமல் போகுமென்பதை வாசகர்கள் தெரிந்து கொள்ளலாம். இந்த முட்டாள்தனம் அதிகரித்திருப்பதினாலேயேதான், வெளிநாட்டானாகிய பார்ப்பானுக்கு அடிமைப்பட்டிருக்க நேர்த்துவிட்டது. இவ்வடிமையிலிருந்து விடுபட வேண்டுமென்று பேருழைப்பெடுத்து, நம் நாட்டு நியாயக்கடவுளாகிய பகவான் புத்தர் போதித்த சம தர்மத்தை எல்லாரும் எளிதில் அறிந்து, உண்மையான பிராமணன் யார்? அந்த பிராமணன் நமக்கென்னத்திற்கு? இந்தியர் கடைத்தேற வேண்டுமானால் பாரசீக தேசத்தான்தானா பிராமணன் என்று வரவேண்டும்? இந்தியாவில் பிறந்த கருப்பு மனிதர்கள் பிராமணராகாமல் போனதென்ன? அவர்கள் ராக்ஷசரானதற்கு யார் காரணம்? என்றறிவதோடு பாரசீகர்கள் பிராமண நிலை எதுவென்றும், இந்தியர்கள் பிராமண நிலை எதுவென்றும் இந்நூலில் தெரிந்து உண்மையைக் கைக்கொள்ளுமாறு வேண்டுகிறோம்.

ஸ்ரீ சித்தார்த்தா புத்தகசாலையார்.

கோலார் தங்கவயல், ஆண்டர்சன்பேட்டை,

புத்தம் 2475, ஆங்கீரச - ஹமாசி மீ.

** யதார்த்த பிராமண வேதாந்த விவரம்**

** வேதம்**

வேதமென்னும் வார்த்தையின் உற்பவத்தையும், சுருதியென்னும் வார்த்தையின் உற்பவத்தையும், அதன் தன் பொருட்களையும், அவைகளின் உற்பவத்திற்குக் காரணம் யாவரென்பதையும், முன்பு விசாரித்து பின்பு பிரம உற்பவத்தையும், பிராமணோற்பவத்தையும் விசாரிப்போமாக.

வேதமென்னுமொழி பேதமென்னுமொழியினின்று மாறியது. அதாவது - வடபாஷையில் பரதனென்பது வரதனென்றும், பைராக்கியென்பது வைராக்கியென்றும், பண்டியென்பது வண்டியென்றும், பாலவயதென்பது வாலவயதென்றும் வழங்குதல் போல், பேத வாக்கியங்களென்பதை வேதவாக்கியங்களென்றும் தமிழில் வழங்கி வருகின்றார்கள்.

அத்தகைய பேதவாக்கியங்கள் யாதென்பீரேல் ஜெகந் நாதனென்றும், ஜெகத்ரட்சகனென்றும், ஜெகத் குருவென்றும் வழங்கும் புத்தபிரானாலோதிய முப்பிடக மென்றும் திரிபீட வாங்கியங்களே திரிபேத வாக்கியங்களென வழங்கலாயிற்று. அப்பேத வாங்கியங்கள் யாதெனில் :-

ஸப்பபாபஸ்ஸ அகரணம்

குஸலஸ்ஸ உப ஸம்பதா

ஸச்சித்த பரியோதபனங்

(ஏதங் புத்தான ஸாஸனம்)

அதாவது :- பாபஞ் செய்யாதிருங்கள், நன்மைக் கடைபிடியுங்கள், உங்கள் இதயத்தை சுத்தி செய்யுங்கோளென்னும், மூன்று வாக்கியங்களும் மூன்று பேதமாயிருந்தபடியால் திரிபேத வாக்கியங்களென்றும், பகவன் மூன்று, வேத வாக்கியங்களை யோதுங்கால் அட்சரங்களுடைத்தாய வரிவடிவில்லாமல், ஒலிவடிவாம் மிகடபாஷையாகும் பாலி பாஷை வழங்கிவந்தபடியால், மேற்கூறியுள்ள மூன்று பேதவாக்கியங்களையும் ஒருவர் நாவினாலோதவும், மற்றோர் செவியினாற் கேட்கவுமிருந்தது கொண்டு அவற்றை சுருதி வாக்கியங்களென்றும் வழங்கி வந்தார்கள்.

சுரோத்திராதித்தே சுருதி

வரிவடிவாம் அட்சரபாஷையிராது ஒலிவடிவிலிருந்ததால் சுருதிவாக்கியங்களின் அந்தரார்த்தம் விளங்காது, மறைந்திருந்தது, மறைகொண்டு மறையென்றும் வழங்கி வந்தார்கள்.

இம்மூன்று பேதவாக்கியங்களின் உட்பொருளாம், பாபஞ் செய்யாமலிருங்கோளென்பதை கர்மபாகையென்றும், நன்மைக் கடைபிடியுங்களென்பதை அர்த்தபாகையென்றும், இதயத்தை சுத்தி செய்யுங்கோளென்பதை ஞானபாகையென்றும் வழங்கி வந்தார்கள்.

இம்முப்பாகையும் தன் தேகத்துள் நிகழ்வனவாதலின் இவற்றை அறம், பொருள், இன்பமென்றும் மெய்யறம், மெய்ப்பொருள், மெய்யின்பமென்றும் வழங்கி வந்தார்கள்.

** சீவகசிந்தாமணி செய். 1242**

ஆதிவேதம் பயந்தோய் நீ யலர்பெய்மாரி யமர்ந்தோய்
நீதிநெறியை யுரைத்தோய் நீ நிகரில் காட்சிக்கிரையோய் நீ
நாதனென்னப்படுவோய் நீ நவைசெய் பிறவிக்கடலகத்துன்
பாதகமலர் தொழுவெங்கள் பசையாப்பவிழப் பணியாயே.

** திருக்கலம்பகம் செய். 78**

ஒதாதுலகிற் பொருளனைத்து முடனே
யுணர்ந்தா லுணர்ந்தவற்றை
வேதாகமங்களா றேழால்
விரித்தான் விமலன் விரித்தளவே
கோதார் நெஞ்சத்தவர் பிறழக்
கொண்டேதாமே கண்டார்போற்

பேதா, பேதம், பேதமெனப்
பிணங்கா நின்றார் பிரமித்தே

** மணிமேகலை காதை 30 வரி 258**

சுருதி சிந்தனா பாவனா தரிசனா

** திருக்கலம்பகம். செய்.84**

போற்றுமிது வென்கொல் பொய்ந்நூல் களைப்புலவீர்
சாற்று மனந்த சதுட்டயத்தா - னேற்றுந்
துளகப் படாத சுருதியா லல்லா
லளக்கப் படுமோ வறம்.

பாபஞ் செய்யாம லிருங்கோளென்பது ஓர்வகையும், நன்மைக் கடைபிடியுங்கோளென்பது ஓர்வகையும், இதயத்தை சுத்தி செய்யுங்கோளென்பது ஓர்வகையுமாக, மூன்றுவகை வாக்கியங்களானது கொண்டு, மூன்று பேதவாக்கியங்களென்றும், திரிவேதவாக்கியங்களென்றும் வழங்கலாயிற்று.

இவ்வாக்கியங்களையொருவர் போதிக்கவும், மற்றவர் கேட்டுக்கொள்ளும் சுருதிவாக்கியங்களாயிருந்தபடியால், அவைகள் மறதிக்கு வந்துவிடுமென்றெண்ணிய அவலோகித ராம் புத்தபிரான், வடமொழியென வழங்கும் சகடபாஷையை விரிவாக இயற்றி

பாணினியாருக்கும், தென்மொழியென வழங்கும் திராவிட பாஷையை விரிவாக இயற்றி அகஸ்தியர் வசமுமளித்து, சுருதி வாக்கியங்களென்னும் திரிபேத வாக்கியங்களையும் அதன் பிரிவுகளாம், அதனதன் அந்தரார்த்த விரிவுகளையும் தாம் வரிந்துக் கொடுத்த வரிவடிவாம் அட்சரங்களிற் பதிவுப்படப் பரவச்செய்தார்.

** சிவஞான யோகீஸ்வரர் ஞானத்திரட்டு வீரசோழியம் பதிப்புரை பக்கம் 3**

திடமுடய மும்மொழியாந் திரிபிடக நிறைவிற்காய்த
வடமொழியை பாணினுக்கு வகுத்தருளி யதற்கிணையாய்
தொடர்புடைய தென்மொழியை யுலகமெலாந் தொழுதேத்த
குடமுநிக்கு வற்புறுத்தார் கொல்லாற்று பாகர்.

** வீரசோழியம் கிரியாதபடலம் செய். 13**

மதத்திற் பொலியும் வடசொற் கிடப்புந் தமிழ்மரபும்
முதத்திற் பொலியேழை சொற்களின் குற்றமு மோங்குவினைப்
பதத்திற் சிதைவும் பறிந்தே முடிக்கப் பன்னூறாயிரம்
விதத்திற் பொலியும் புகழவலோகிதன் மெய்த்தமிழே

** ஷை பாயிரம் செய்.2**

ஆயுங் குணத்தவ லோகிதன் பக்க லகத்தியன்கேட்
டேயும் புவனிக் கியம்பிய தண்டமிழீங்குரைக்க
நீயு முளையோ வெனிற் கருடன் சென்ற நீள்விசும்பி
லீயும் பறக்கு மிதற்கென்கொலோ சொல்லு மேந்திழையே

** சிலப்பதிகாரம் காட்சிக்காதை 25, வரி66**

தண்டமிழாசான் சாத்தனஃதுரைக்குந்

சகல விலக்கணங்களிலும் சாற்றுதற்குரிய சாத்தன் வந்தான். சாத்தன் சென்றானென்னும் இலக்கண உதாரண வாக்கியங்களைக் காணலாம்.

** சிவஞான யோகீஸ்வரர் ஞானத்திரட்டு(வீர பதிப்புரை பக் 4)**

இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவ ரியல்வாய்ப்ப
இருமொழியும் வழிப்படுத்தார் முநிவேந்த ரிசைபரப்பும்
இருமொழியு மான்றவரே தழீஇனா ரென்றாலிங்
கிருமொழியு நிகரென்று மிதற்கைய முளதெயோ.

சகடபாஷையாம் சமஸ்திகிருதத்தையும், திராவிட பாஷையாந் தமிழையும், புத்தபிரான் இயற்றி பாணினியார் வசமும் அகஸ்தியர் வசமுமளித்து, திரிபீடவாக்கியம் திரிபேத வாக்கியமென வழங்கிவந்த சுருதி வாக்கியங்களரம் ஒலி வடிவை வரிவடிவில், பதித்து, சகலர் மனதிலும் பதியச் செய்தார். ஞானபாகையாம், இதய

சுத்தத்தால் மெய்யறம், மெய்ப்பொருள், மெய்யின்பந் தோன்றி பரிநிருவாணமுறும் வீடு பேற்றை நான்காவது பேதமொழியாகக் கொண்டு நான்கு மறைமொழியென்றும். நான்கு வேதவாக்கியங்களென்றும் வழங்கலாயினர்.

முதன் மும்மொழியையே முதன் மொழியென்றும் வரையாக் கேள்வியென்றும் வழங்கி, வரிவடிவாம் அட்சரங்களேற்பட்ட போது அவற்றை ஆதிபீடமென்றும், ஆதிநூலென்றும், ஆதிவேதமென்றும் வழங்கலாயினர்.

** சூடாமணி நிகண்டு தொகுதி 10. செய் 21, 22.**

ஆதி நூலெழுதாக் கேள்வி யாரண மொத்துசாகை
யேதமில் சுருதிதன்னோடிருக்கிவை யேழும் வேதம்
வேதநூற் பொருளினாமம் விதித்திடு ஞானபாகை
ஆதியாங் கரும்பாகை அர்த்த பாகையுமாமென்ப

** ஷை நூல்.**

மெய்தெரி யாரணந்தான் வேதத்தின் ஞானபாகை
மையலுட் பொருளினாம மற்றுப நிடதமென்ப
வைதிக வேதமுற்ற மார்க்கமே பார்க்குங்காலை
பையமாலிருக்கினோடு பிடகமே யாதி வேதம்.

பாபஞ் செய்யாதிருங்கோளென்னும் வேதவாக்கியத்தின் உட்பொருளே! கன்மபாகையென்றும், அவையே மெய்யற விசாரமும், நன்மைக் கடைபிடியுங்கோளென்னும் வேதவாக்கியத்தின் உட்பொருளே அர்த்தபாகையென்றும், அவையே மெய்ப்பொருள் நிலையும், இதயத்தை சுத்தி செய்யுங்கோளென்னும் வேதவாக்கியத்தினுட் பொருளே ஞான பாகையென்றும், அவையே மெய்யின்ப சுகமாதலின் வீடுபேறென்றும், பேரின்ப நிலையென்றும், முத்தியென்றும், சாந்தி யென்றும், நிருவாண மென்றும் வகுத்திருக்கின்றார்கள்.

கன்மபாகை, அர்த்தபாகை, ஞானபாகையாம் வேதத் தினுட் பொருளை விளக்குவான் வேண்டி, அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு பேதவாக்கியங்களாக வரைந்து அவற்றையே நான்கு வேதவாக்கியங்களென்றும் நான்மறையென்றும் வழங்கலாயினர்.

திரிபீடமென்றும், சதுர்மறையென்றும், பாலி பாஷையிலும், சமஸ்கிருதத்திலும் வழங்கியுள்ள முதனூலுக்கு, திராவிட பாஷையில் திருவள்ளுவ தேவரியற்றிய வழிநூலாந் திரிக் குறளுக்கு தமிழ் வேதமென்னும் பெயரையுமளித்துள்ளார்கள்.

நான்கு பேதவாக்கியங்களும் மேலுமேலும் தெளிந்துக் கொள்வதற்கு, உட்பொருளாம் உபநிட்சயார்த்தங்களை பேத வாக்கியம் ஒன்றுக்கு எட்டு உபநிட்சயார்த்தங்களாக, நான்கு பேதவாக்கியங்களுக்கும்

முப்பத்திரண்டு உபநிட்சயார்த்தங்களை வகுத்துள்ளார்கள். அவைகளுக்கே பாலி பாஷையில் உபநிடதங்களென்றும், உபநிஷத்துக்களென்றும், திராவிட பாஷையில் உபநிட்சய அருத்தங்களென்றும் வகுத்திருக்கின்றார்கள்.

புத்தபிரானோதிய மும்மொழி விளக்கத்தை முதனூலென்றும், ஆதிநூலென்றும் வழங்கி வந்தார்கள்.

**நன்நூல் பாயிரம் செய்.6**

விளையினீங்கி விளங்கிய வறிவின்
முனைவன் கண்டது முதனூலாகும்.

ஆதிநூலென்றும் முதனூலென்றும் வழங்கிய திரிபீட வாக்கியங்களையே வேதநூலென்றும் வழங்கி வந்தார்கள்.

திவாகரம் ஒலிபற்றிய பெயர்தொகுதி

ஆதிநூலென்பது - வேதநூற் பெயரே.

**உபநிடதம்**

இத்தகைய வேத நூலின் உட்பொருணுட்பங்களை விளக்கிக் காட்டும் வாக்கியங்களுக்கு உபநிடதங்களென்று வழங்கலாயினர்.

**திவாகரம் ஒலிபற்றிய பெயர் தொகுதி**

உபநிடதம் வேதத்தினுட் பொருணுட்பம்

வேதவாக்கியம் ஒன்றுக்கு எட்டு உபநிடத உட்பொருணுட்பங்களைக் கூறி, நான்குவகை பேதவாக்கியங்களுக்கும் முப்பத்திரண்டு உபநிடத உட்பொருணுட்பங்களைக் கூறியுள்ளார்கள்.

** 1வது கன்ம பாகை அஷ்டகம்.**

1. அன்னிய சீவப்பிராணிகளை வீண் கொலைச் செய்தலாலுண்டாகும் கேடுகளை விளக்கிக்காட்டும் வாக்கியங்களுக்கு மௌண்டரீக உபநிடதமென்றும்,

2. அன்னியப் பிராணிகளின் மீது வீண் கோபங் கொண்டு அவைகளைத் துன்பஞ் செய்தலால் உண்டாகுங் கெடுதிகளை விளக்கிக்காட்டும் வாக்கியங்களுக்கு காலாக்கினி உபநிடதமென்றும்,

3. அன்னியரைக் கெடுக்கவேண்டு மென்று தீங்கு நினைத்தலால் தனக்குண்டாகும் கேடுகளை விளக்கிக் காட்டும் வாக்கியங்களுக்கு முண்டிர உபநிடதமென்றும்,

4. அன்னியர் மனம் புண்பட வீண் வார்த்தைப் பேசுதலாலுண்டாகும் கேடுகளை விளக்கிக் காட்டும் வாக்கியங்களுக்கு சுரோர்த்தாக்கினிய உபநிடதமென்றும்,

5. அன்னியர் பொருட்களை அவர்களனுமதியின்றியபகரித்தலால் உண்டாகுங் கெடுதிகளை விளக்கிக்காட்டும் வாக்கியங்களுக்கு காத்தியாயன உபநிடதமென்றும்,

6. அன்னியர் தாரத்தை அபகரித்தலால் உண்டாகும் கேடுகளை விளக்கிக்காட்டும் வாக்கியங்களுக்கு ஆர்ணிக பகுவு பஞ்சக உபநிடதமென்றும்,

7. அன்னியர்களை வஞ்சித்துத் துன்பப்படுத்தலாலுண்டாகும் கேடுகளை விளக்கிக் காட்டும் வாக்கியங்களுக்கு பாராக உபநிடதமென்றும்,

8. அன்னியர்களறிவை மதுவூட்டி மயங்கச்செய்தலாலுண்டாகும் கேடுகளை விளக்கிக்காட்டும் வாக்கியங்களுக்கு சுராபாநீய உபநிடதமென்றும் எட்டு உட்பொருளை விளக்கியுள்ளார்கள்.

** 2வது அர்த்த பாகை அஷ்டகம்**

1. அன்னியர்களுக்குண்டாகுந் துன்பங்களையகற்றி தண்மையடையச் செய்தலாலுண்டாகும் நன்மைகளை விளக்கிக் காட்டும் வாக்கியங்களுக்கு நாராயண உபநிடதமென்றும்,

2. அன்னியருக்கில்லா பொருளீந்து ஆதரித்துத் தன்னைப் போல் சுகம் பெறக் கருதிச் செய்யும் நன்மையாலுண்டாகும் சுகத்தை

விளக்கிக்காட்டும் வாக்கியங்களுக்கு பிரசபிந்து உபநிடதமென்றும்,

3. அன்னியர்களைத் தன்னைப்போல் நேசித்து ஆதரிக்குஞ் செயலால் உண்டாகும் நன்மைகளை விளக்கிக்காட்டும் வாக்கியங்களுக்கு தேஜோபிந்து உபநிடதமென்றும்.

4. தானே தோன்றுவதும் கெடுவதுமாகிய பிறப்பிறப்பு மனதைத் தோன்றாமலும் கெடாமலும் அலையற்ற கடல்போல் அமர்ந்த நிருவாண சுகத்தை விளக்கிக்காட்டும் வாக்கியங் களுக்கு பாஷீகர உபநிடதமென்றும்,

5. தனக்குள்ளெழும் மரணபயம் ஜநநபயமற்று கலங்காமல் நிற்கும் அசைவற்ற தீப நிருவாண சுகத்தை விளக்கிக்காட்டும் வாக்கியங்களுக்கு சௌனகீய உபநிடதமென்றும்,

6. தன்னுள் தானாய் திரளும், சாந்தம், ஈகை, அன்பென்னும் உண்மை உருவின் பேரின்ப நிருவாண சுகத்தை விளக்கிக் காட்டும் வாக்கியங்களுக்கு கிபுரோட்சய உபநிடத மென்றும்,

7. தானே தானே தசநாதமுற்று சுயம்பிரகாச உருவ அகண்ட பர்வையாம் சதாநித்திய சித்தின் நிருவாண சுகத்தை விளக்கிக்காட்டும் வாக்கியங்களுக்கு சிரவாண உபநிடத மென்றும் எட்டு உட்பொருளை விளக்கியுள்ளார்கள்.

** பிடகம்**

உலகிலுள்ள துக்கங்களைக்கண்டு சகியாதவராய், சர்வ ஜீவர்களின் மீதும் அன்பு கொண்டு தர்ம மோதியவர் பகவன் புத்தரே! ஆதலால்தான் அவர் நூலை பிடகமென்று போற்றி வந்தார்கள்.

** திவாகரம் ஒலிபற்றிய பெயர் தொகுதி**

** நூலின் பெயர்**

** பிடகந் தந்திரம் - நூலின் பெயரே**

புத்தவிரா னருளிய பிடகத்தையே நூலென்று வகுத்துள் ளார்கள். அந்நூல் ஆதியில் போதிக்கப்பட்டதாதலின் அதனை முதநூலென்றும், ஆதி நூலென்றும் வழங்கி வந்தார்கள். பிடகமென்னும் மொழி தோன்றிய காரணம் யாதென்பீரேல், முப்பேத வாக்கியங்களாகும் ஸப்பபாபஸ்ஸ அகரணம், குஸலஸ்ஸ உபஸம்பதா, ஸச்சித்த பரியோதபனங், ஏதங் புத்தானஸாஸன மென்னும் பாபஞ் செய்யாதிருங்கள் நன்மைக் கடைபிடியுங்கள், உங்களிதயத்தை சுத்தி செய்யுங்கோளென்பவை. இத்தேசப் பிராகிருத பாலி பாஷை வரிவடிவாம் அட்சரங்களின்றி ஒலிவடிவ சுருதியாய் உலக சீர்திருத்த ஆதிபீட வாக்கியமாயிருந்து கொண்டு அவைகளை பிடக வாக்கியங்களென்றும், புத்தர் வீற்றிருந்த கல்லால பீடத்திற்கு பீடிகையென்றும் வழங்கி வந்தார்கள்.

இத்தகைய ஆதி பீடமாகும் முதனூலாம் வேதத்தின் உட்பொருளினுட்பத்தையும், அதனந்தத்தையும் விளக்கிக் காட்டும் வாக்கியங்களுக்கு உபநிடத வாக்கியங்களென்றும், வேத அந்த வாக்கியங்களென்றும் வழங்கலாயினர்.

இவ்வேதவாக்கியங்களையும், வேதாந்த வாக்கியங்களையும், ஆராய்ந்து அருள் பெற வேண்டியவர்கள் காட்டிற்கும், நாட்டிற்கும் மத்தியில் இந்திர வியாரங்களைக் கட்டுவித்து இல்லறந்துறந்த மேன்மக்களாகும் அரஹத்துக்கள், பிராமணர், அந்தணரென்னும் விவேகமிகுந்த ஞானிகளிடம் பொன்னிற வாடையும் கரபோலு மேந்தி சீலந்தாங்கி சித்திபெறல் வேண்டும்.

இந்திர வியாரமாகும் புத்த சங்கத்திற் சேர்ந்து மகடபாஷையில் சமணரென்றும், சகடபாஷையில் சிரமண ரென்றும், திராவிட பாஷையில் தென்புலத்தாரென்றும், புலன் தென்பட்டவர்களென்றும், வழங்கும்படியான விசாரணைப் புருஷர்கள் மகட பாஷையில் பஞ்சஸ்கந்தமென்றும், திராவிட பாஷையில் ஐம்புலனென்னும் படுத்தல், எழுதல், நடத்தல், அணிதல், தூய்த்தலாம், ஐங்கூறினுள், நினைத்தல், மறத்தல். அறிதல், அன்பு, ஆசை, பயம், மரணம், நிறை, பொறை, ஓர்ப்பு, மையல், கடைப்பிடி, வெறுப்பு, விருப்பு, உவப்பு, இரக்கம், நாணம், பயம், முநிவு, அழுக்காறு, அருள், பீடை, இன்பம், துன்பம், இளமை, முதுமை, இகல், வெற்றி, பொய்க்காப்பு, ஊக்கம்,

மறம், மதம் எனும் முப்பத்திரண்டு செயலுடைத்தாய உருவத்தை மகடபாஷையில் ஆன்மமென்றும், ஆத்மமென்றும், சகடபாஷையில் புருஷனென்றும், திராவிட பாஷையில் மனிதனென்றும், வழங்கி வந்தார்கள்.

இத்தகைய ஒருமை உருவகம் ஒன்றாகத் தோன்றினும் செயலால் உண்மெய்யும் தோற்றத்தால் புறமெய்யுமாக உடலுயிர் இரண்டென வகுத்துள்ளார்கள்.

இவ்விரண்டினுள் உருவகத்தோற்றச் செயல்களாகும் தோன்றல், மறைதல், வளர்தல், சுருங்கல், நீங்கள், அடைதல், நடுங்கல், இசைத்தல், ஈதலென்னுமித்தொழிலாகுந் தோற்றத்தையே உயிருடல் இரண்டிற்கும் ஒத்தகுணமென்று வகுத்துள்ளார்கள்.

உயிரில்லா பொருட்குணமாகும் இருகோணம், முக்கோணம், வட்டம், சதுரமென்னும் வடிவங்களையும், துற்கந்தம், நற்கந்தமென்னும் நாற்றங்களையும்; வெண்மை, கருமை, செம்மை, பொன்மை, பசுமை என்னும் ஐவகை வருணங்களையும், கைப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு, இனிப்பு என்னும் அறுசுவைகளையும்; வெம்மை, தண்மை, மென்மை, வன்மை, தின்மை, நொய்மை, சீர்மை, இழிமை என்னுமெட்டு ஊறுகளையும் உயிரில் பொருட்குணமென வகுத்துள்ளார்கள்.

உடலுயிரென்னு மிரண்டினுள் உயிரென்னும் செயலற்ற விடத்து உடலசையாமலும், உடல் தோற்றியசையாவிடத்து உயிரென்னும் பெயரற்றுப்போவதால் ஒற்றுமை நயத்தால் ஒன்றென்றும், வேற்றுமை நயத்தால் இரண்டென்றும் வழங்கிய உருவக மனிதனை ஆன்மமென்றும், புருஷனென்றும், பொதுப்பெயரால் வழங்கி வந்தார்கள்.

பஞ்சஸ்கந்தங்களாலமைந்துள்ள புருஷனுக்கே ஆன்மனென்றும், ஆத்துமனென்னும் பெயருண்டாயிற்று. மனுட வுரூவக தோற்றமுண்டாயவிடத்து ஆன்மமென்னும் பெயருண்டாயதன்றி தோற்ற முண்டாகாவிடத்து ஆன்மமென்னும் பெயரில்லை.

இத்தகைய உடலுயிரென்பவற்றுள் தான் கற்றவைகளையும், கண்டவைகளையும் சிலகாற் சென்று சிந்தித்தபோது கொடுக்குங் குணத்திற்கு உள்ளமென்றும், அவ்வுள்ளமே விரிதலும், மறைதலுமாகிய குணத்திற்கு மனமென்றும், அவ்வகையால் விரியும் மனதை சற்று தடுத்தாளுங் குணத்திற்கு மதியென்றும், அம்மதியைப் பெருக்கி இஃது நன்கு தீதென்று தெளிந்து தேறுங் குணத்திற்கு அறிவென்றும், அவ்வறிவின் பெருக்கத்தால் உடலுயிர் இரண்டிற்கும் நிகழும் பிணி மூப்புச் சாக்காட்டினாலுண்டாகும் துக்கம், துக்கோற்பவம், துக்கோற்பவகாரணம், துக்க நிவாரணமாகும் நான்கு வாய்மைகளையுணர்ந்து வந்துள்ளார்கள்.

** காக்கை பாடியம்**

உடலுயிர் பொருந்தா லுள்ளந் தோன்றி
கடலுள் விரிவே மனமென வாய்ந்து
வடவிரி மனமாள் மதியெனப் பெருகி
திடம் பெறு வறிவாற் றேவராகினரே.

நல்வாய்மை, நற்காட்சி, நல்லூக்கம், நற்செய்கை, நல் வாழ்க்கை, நன்முயற்சி, நற்கடைபிடி, நல்லுள்ளமாம் அஷ்டாங்க மார்க்கத்திற் சென்று ஞானவாசிரியராகும் அரஹத்துவையடுத்து உபநயனமென்னும் உதவி விழியாம் ஞானக்கண் பெற்று ஊனக்கண்ணற்று உள்விழி பார்வையால், கழிமுனைக் கணலேறி ஜாக்கிரத்தில் சுழுப்தியாயபோது தசநாதமுண்டாகி தானே தானே சுயம்பி ரகாச உண்மெய்யனாகின்றான். இந்நிலையையே மெய்கண்டோனென்றும், மெய்யனென்றும் கூறப்படும். இம்மொழியையே பாலி பாஷையில், தானே தானே சுயம்பாதலை ததாகதமென்றும், மெய்யனை புத்தரென்றும், அழைக்கலாயினர். மெய்கண்டவுடன் பஞ்சஸ்கந்த விவகார ஆன்மபற்றற்று புளியம் பழத்தினோடு போல் உடலுயிரென்னும் பெயரற்று அநித்திய அனாத்தும நிருவாணநிலையடைகின்றான் என்று பெரியோர்களால் வரைந்து வைத்துள்ளது.

** உபநயனம்**

தாயினது கருப்பையில் குழவி கட்டுப்பட்டிருக்குங்கால் அது முட்டுவதும், உலாவுவதும் சகலருக்குத் தெரிந்த விஷயம். அவ்வகையுலாவும் குழவிக்கு அதன் மூச்சானது உள்ளுக்கே யோடிக்கொண்டிருப்ப தியல்பாம்.

அஃதெவ்வகையா யுள்ளுக்கே யோடிக்கொண்டிருப்ப தென்பீரேல் உந்தியாகும் கொப்பூழை ஆதாரமாகக் கொண்டு இடதுபுற மார்பின் உள்ளுக்கே மேலேறி இருகண்களின் மத்திய நாசிமுனையைத் தாவி சிரசின் உச்சியைக் கடந்து பிடரி வழியிலிறங்கி வலது முதுகின் புறமிழிந்து கொப்பூழென்னும் உந்தியிற் கலந்து நிற்குமென்றும் அந்நாடிக்குக் குண்டலியென்றும் அதன் குழலுக்கு பிரம்மரந்ரமென்றும் எழுதி வைத்திருக்கின்றார்கள்.

குண்டலியென்னும் பெயர் வாய்த்தக் காரணம் யாதென்பீரேல், குழவி கருப்பையிலடங்கியிருக்குங்கால் உள்மார்பிற்கும், முதுகிற்கும் ஓடிக்கொண்டிருந்த மூச்சானது கருப்பையை விட்டுக் குழவி வெளிவந்து விழுந்தவுடன் வாய்திறந்து கா கூவென்று கூச்சலிடுங்கால் நாசியுந் திறந்து உள்ளுக்குள் ஓடிக்கொண்டிருந்த மூச்சு உள்ளுக்கும் வெளிக்கும் ஓடும்படி யாரம்பித்துக்கொள்ளுகின்றது. அவ்வாரம்பத்தால் முன்பு உள்ளுக்கோடும் வழி கொடுத்திருந்த நாடியானது குளிர்ச்சியால் மண்டலமிட்டு சுருண்ட பாம்பு போல் உந்தியினிடமாக வளைந்து

அவ்வழியையடைத்து விடுகின்றது. கருப்பையில் நீண்டோடிக்கொண்டிருந்த நாடி குழவி வெளிவந்து விழுந்தவுடன் சுருண்டு அவ்வழியடைத்தபடியால் அதற்கு குண்டலி நாடியென்று பெயரிட்டார்கள் முன்னோர்.

அக்குழலுக்கு பிரம்மரந்திரமென்னும் பெயர்வந்த காரணம் யாதென்பீரேல், அக்குழலின் வழியே மூச்சை மறுபடியும் திருப்பிக் கொண்டவனுக்கு, மாளாப்பிறவி உள்ளுக்குந் துக்கமற்று நிருவாண சுகமுண்டாகிறபடியால் அதின் நற்செயலுக்காய் அக்குழலுக்கு பிரம்மரந்திரமென்னும் பெயரையளித்துள்ளார்கள் முன்னோர்.

அப்பிரம்மரந்திரக் குழலுள்ள நாடி இடது மார்பிற்கும், வலது முதுகிற்கும் சுற்றி நிற்கின்றபடியால் அப்புலனைத் தெரிந்துக்கொள்ளும் உபநயனமாம் உள்விழி கண்ட சாதனனென்று உலகோரறிவதற்காக, மதாணி பூணுநூ லென்னும் முப்புரிநூலை இடது மார்பிற்கும் வலது முதுகிற்குமாக அணைத்துக் கொள்ளும்படிச் செய்து அவனை இல்லற வாசிகளுக்குக் காண்பித்து இந்நூல் அணைந்த வடையாளம் பெற்றவன் ஐம்புலனடக்குந் தென்புலத்தானாதலின் நீங்கள் யாவரும் அவனிடம் பகுத்தறிவு உதவி பெற்று கடைத்தேறுங்கள். உயர்ந்தோனால் உலகமுங்கடைத்தேறும் என்றார்கள். ஆதலின் மதாணிப் பூணூல் மார்பிலணைந்துள்ள ஒவ்வொரு ஞான சாதகர்கள் தங்கியிருக்கும்

வியாரங்களுக்குச் சென்று இல்வாழ் மக்கள் வேண் நல்லறிவு பெற்று வந்தார்கள்.

மண்டலமிட்ட குண்டலநாடி யறிந்தோனென்று மக்களறிந்து கொள்ளுமாறு மதாணி பூணூல் மார்பிலணையுமோர் அடையாளமிட்டுள்ளதைக் கவிகளால் தெரிந்து கொள்ளலாம். எவ்வித அடையாளமிட்டிருந்தாலும் அறிவடைந்தவன் என்ற பொருள்தானிதிலிருக்கின்றது. இவர்களே ஞானசாதகர்களா வார்கள்.

** சூடாமணி நிகண்டு தொகுதி 12 செய்.139**

காப்புக்கு முன்னெடுக்குங்
கடவுடான் மாலேயாகும்
பூப்புனை மலரின் செல்வி
புனைபவ னாதலானும்
காப்பவ னாதலானுங்
கதிர்முடி கடகத்தோளில்
வாய்ப்பதா மதாணி பூணூல்
வரிசையிற் புனைதலானும்

** மணிமேகலை காதை 17 வரி 27**

புரிநூன் மார்பிற் றிரிபுற வார்சடை
மரவுரி யாடையன் விருட்சிக னென்போன்.

இத்தகையப் பூணுநூலுக் காதாரமாகும் குண்டலியென்றும், பிரம்மந்திரமென்றும் வழங்கும் நாடியின் மகத்துவத்தை அடியிற் குறித்துள்ள பாடலாற் காணலாம்.

** சிவவாக்கியர்**

உருதரித்த நாடிதன்னி லோடுகின்ற வாயுவை
கருத்தினாலிறுத்தியே கபாலமேற்ற வல்லிரேல்
விருத்தர்களும் பாலராவர் மேனியுஞ் சிவந்திடும்
அருள்தரித்த நாதனாணை அம்மையாணை யுண்மையே.

ஞானாசிரியரா லருளப்பெற்ற உபநயனமென்னும் உதவி விழியாகும் ஞானக்கண் பெற்று புருவமத்திய சுழிமுனை நாடியையழுத்தி சதா விழித்து சருவ பாசபந்தங்களையு மொழித்து நனவினிற் சுழித்தியாகி தூங்காமற் தூங்குங்கால் தசநாடிகளின் தொழிலொடுங்கி குண்டலிநாடி நிமிர்ந்து தசதாதங்கள் தோன்றி கலங்கச் செய்யும்.

** பத்திரகிரியார்**

ஆங்கார முள்ளடக்கி ஐம்புலனை சுட்டறுத்து
தூங்காமற்றூங்கி சுகம் பெருவ தெக்காலம்

** திரிமந்திரம்**

அற்றார் பிறவி யவரிருகண்களை
வைத்தார் புருவத்திடையே நோக்கி

ஒத்தேயிருக்க வுலகெலாந் தெரியும்
ஏத்தாலுஞ் சாவில்லை இறையவனாமே.

** அகஸ்தியர் ஞானம்**

விழித்து மிகுபார்த்திடவே பொறிதான் வீசும்
முச்சந்தி வீதியிலே தீபந்தோன்றும்
சுழித்தியிலே போகாமல் ஒருமனதாய் நின்றால்
சுத்தமென்னு நாதவொலி காதிற் கேழ்க்கும்
இழுத்ததென்று நீகூடத் தொடர்ந்தாயானால்
எண்ணொண்ணா பிறப்பிறப் பெய்தும்பாரு
அழுத்திமனக் கேசரத்தினின்று மைந்தா
அப்பனே லலாடத்தில் தூங்குவாயே.

** பாம்பாட்டி சித்தர்**

ஓங்காரக்கம்பத்தின் உச்சிமேலே
உள்ளும் புறம்பையும் அறியவேண்டும்
ஆங்காரகோபத்தை யடக்கிவிட்டே
ஆனந்த வெள்ளத்தைத் தாக்கிக்கொண்டே
போங்காலஞ்சாங்காலம் ரண்டுமறவே
புருவமைய சுழிமுனைதனிலே

தூங்காமற்றூங்கியே சுகம் பெறவே
தொந்தோம் தொந்தொ மென்றாடாய் பாம்பே.

** அகஸ்தியர் - பரிபாஷை**

அமுதமிழியோகமது செய்யவென்றால்
அப்பனே கால்நீட்டி படுத்துக்கொண்டு
மமதையில்லாவலக்கையை முடிமேல்வைத்து
வழுத்துப்பூரணத்தை சுழிமுனையைமேவி
சமரசமாக வாசியை நீ யிழுத்துக்கொண்டு
சமர்த்தாகக் கேசரத்தில் மனதைவைத்தே
அமதியொடு பராபரத்தை தரிசித்தேதான்
அப்பனே லலாடத்தில் தூங்குவாயே.

**தாயுமானவர் பைங்கிளியே செய்.30**

தூங்கிவிழித் தென்ன பலன்
தூங்காமல் துங்கினிற்கும்
பாங்குகண்டா லன்றோ
பலன் காண்பேன் பைங்கிளியே

** தேவநிலை**

நனவினிற் சுழுத்தியாகி நன்மகன் பேறுபெற்றான் என்னும் மனத்தின்கண் சொற்பக் களங்கமேனு மணுகா வண்ணம் ஜாக்கிரா ஜாக்கிரத்தினின்று சாந்தம், ஈகை, அன் பென்னுஞ் செயல்களே பெருகி ஜாக்கிரா சொற்பனத்திலுமது வாய் சதா உள்விழியாம உபநயன பார்வையால் சுழிமுனையை விழித்து நோக்கி ஜாக்கிரா சுழித்தியடைந்த போது தசநாதங்களும் எழுந்தடங்கி சுயம்பிரகாச உண்மெய்யனாகின்றான்.

அச்சுயம்பு ஒளியாய் தேயுவின் அகமே இராகத்து வேஷ மோகங்கள் சூடு கொண்டழிப்பது தவிர்ந்த சாந்தம், ஈகை, அன்பென்னும் பெருக்கத்தினால் தேயுவின் அகங் குளிர்ந்து தன்னை யுணர்ந்து புளியம்பழம் போலும் ஓடும் போலும் பிரிந்து மனிதனென்னும் பெயரற்று குளிர்ந்த தேய்வகமாம் தெய்வ மென்னும் ஏழாவது தோற்றப் பெயர் பெறுகின்றான். பூமியிலிருந்து புற்பூண்டுகள் தோன்றி, புற்பூண்டுகளினின்று புழுக்கீடாதிகள் தோன்றி புழுக்கீடாதிகளினின்று மட்சம் பட்சிகள் தோன்றி மட்சம் பட்சிகளினின்று மிருகாதிகள் தோன்றி, மிருகாதிகளினின்று மக்களாம் மனுக்கள் தோன்றி, மனுக்களினின்று தேவர்களாகத் தோன்றும் ஏழாவது தோற்றத்தியல்பு இதுவேயாகும்.

மனிதனுக்குள்ள தேயுவின் அக்கினியாம் துர்ச்செயல்கள் யாவையுமகற்றி, நற்செயலாந் தேயு குளிர்ந்து, சாந்தம் நிறைந்த

விடத்து தேவனென்னும் பெயரும், சருவசீவர்களின்மீது அன்பு பாராட்டி யாதரிக்கும் குளிர்ந்த நிலையடைந்தவிடத்து அந்தணனென்னும் பெயரும் பெறுகின்றான் - பெற்றிருந்தான்.

** திரிக்குறள் செய் 30.**

அந்தணரென்போ ரறவோர் மற்றெவ் வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டோழு கலான்.

பாபஞ் செய்யாதிருங்கள், நன்மைக்கடைபிடியுங்கள், உங்களிதயத்தைச் சுத்திச் செய்யுங்கள் எனும் மும்மொழிகளே திரிபேத வாக்கியங்களென வழங்கும், இம்மொழி மூன்றையும் சிரமேற்கொண்டு தங்களுக்குள் உள்ளப் பாபச்செயல்களையும், குணங்களையும் பற்றறவறுத்தும், இனி சேரும் பாபச் செயல்களை யும், பாபகுணங்களையும் சேரவிடாமலகற்றியும், தங்களுக்குள் உள்ள நன்மைச் செயல்களையும், நன்மைக்குணங் களையும், நாளுக்குநாள் விருத்தி செய்தும் இனி சேரும், நன்மைக் குணங்களையும், செயல்களையும் நாளுக்குநாள் சேர்த்தும், தங்களுள்ளமாம் இதயத்திலுள்ளக்களங்கங்களை யகற்றி நாளுக்கு நாள் சுத்தி செய்து கொண்டும், இதில் இதயத்துள் வந்தணுகும் களங்கங்களை அணுகவிடாமல் அகற்றிக்கொண்டும் வரும்படி யான சாதனங்களையே இடைவிடாது சாதிப்பதினால், கண்ணினாற் பார்த்த வஸ்துக்களை மனம் நாடிச் செல்லுவதும், நாவினால் உருசித்த

பதார்த்தங்களை மனம் நாடிச் செல்லுதலும், செவியானது இனிதாகக் கேட்ட வார்த்தையை மனம் நாடிச் செல்லுதலும், நாசியால் முகர்ந்த சுகந்தத்தை மனம் நாடிச் செல்லுதலுமாகிய, வைம்புலச் செயல்களற்று பொறிவாயல் முதல் ஐந்தவித்த பலனே வேதமொழியின் மார்க்க பலன்களென்னப்படும்.

** திரிக்குறள் செய்.27**

சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகை தெரிவான் கட்கே யுலகு.

பேதவாக்கியங்களாகும் மூன்று அருமையான பாதையில் நடந்து ஐயிந்திரியங்களை வென்று பெண்ணிச்சையற்றுக் காமத்தை ஜயிக்கின்றான்.

** சீவகசிந்தாமணி செய் 3121**

ஆசையார்வமோ டையமின்றியே
யோசை போயுல குண்ண நோற்றபி
னேசுபெண்ணொழித் திந்திரர்களாய்
தூயஞானமாய்த் துறக்கமெய்தினார்.

இத்தகைய பற்றுக்களற்று உபநயனமாம் உள்விழியால் புருவமத்திய சுழிமுனையை நாடிய நிலைக்கே வேத முடிவென் றும், வேத அந்தமென்றும் கூறப்படும்.

சுத்தவிதயத்தினின்று தன்னைப் பார்க்குங்கால் உனதென தென்னும் பின்ன பாபங்களற்று சர்வ வுயிர்களையும் தன்னுயிர் போல் பாதுகாக்கவும் உயிர்களால் யாதொருதுன்பம் தனக்கணுகினும் அவற்றிற்கு பிரதிதுன்பமளிக்காது காக்கும் குணத்திற்கு பிரம்மமென்று பெயர்.

பூமியை ஓர் மனிதன் கொத்திப் புழுதியாக்கி பண்ணையங் கலைக்கிய போதும், அஃது கொடுக்கும் பலனைக் கொடுத்து வருவதுபோல், மனிதனுள் பலரால் துன்பப்படினும் அவர்களுக்கு நற்பலனளித்தே வருவானாயின் அந்த சிரேஷ்ட செயலுக்கு பிரம்மனென்னும் பெயரையளித்திருக்கின்றார்கள்.

** மச்சழனியார் ஞானம்**

நித்தமுநீ சுத்மதாய் நின்று பார்த்தால்
நின்தேகம் பிரம்ம மடா நீ தான் காண்பாய்
சுத்தமுடன் சோதிமனக் கண்ணாலந்த
சுருதிமுடி வான சுடரொளியைக் கண்டால்
பத்தியுள்ள தேகமது சுத்தமாச்சு
பாலகனே யவமிருந்து பறந்து போச்சு
வெற்றியுள்ள வஷ்டசித்துங் கைக்குள்ளாச்சு
வேதாந்த புருவமதை மேவி நில்லே.

மூன்று அருமொழிகளாம் பேதவாக்கியங்களின் பலனாகும் சுழிநிலையிற் காணும், சுயஞ்சோதியாம் தோற்றத்திற்கே சுருதி முடிவென்றும், வேதமுடிவென்றும், வேத அந்தமென்றும் கூறியுள்ளார்கள். இதுவே யதார்த்த வேதாந்தமாகும். இத்தகைய சாதனமுற்றவனை யமகாதகனென்றும், காலகாலனென்றும், மரணத்தை ஜயித்தோனென்றும் கூறியுள்ளார்கள்.

** பாம்பாட்டி சித்தர்.**

வேதப்பொருளின்னதென்றும் வேதங்கடந்த
மெய்ப்பொருளைக் கண்டு மனமேவி விரும்பி
போதப் பொருளின்னதென்று போதனை செய்யும்
பூரணசற்குருதான் கண்டாடாய்பாம்பே.

திரிபேத வாக்கியங்களாகும் மூவருமொழியாம் பாபஞ் செய்யாதிருங்கள், நன்மைக்கடைபிடியுங்கள், உங்களிதயத்தை சுத்தி செய்யுங்கோளென்னும் மும்மொழிகளுள் பாயஞ் செய்யா திருங்களென்னுமோர் மொழியைக் கடைபிடித்தொழுகு வானாயினும் பாபத்தை ஜயிப்பான்.

நன்மைக் கடைபிடியுங்கோ ளென்னுமோர் மொழியைக் கடைபிடித்தொழுகுவானாயினும் பாபத்தை ஜயிப்பான். இதயத்தை சுத்தி செய்யுங்கோளென்னுமோர் மொழியைக் கடைபிடித்தொழுகுவானாயினும் பாபத்தை ஜயிப்பான்.

** தாயுமானவர் செய்.58**

சந்ததமும் வேதமொழி யாது வொன்றை
பற்றின் அதுதான் வந்து முற்றும் எனலால்
ஜகமீதிருந்தாலு மரண முண்டென்பது
சதாநிஷ்டர் நினைவதில்லை.

** இடைகாட்டுசித்தர் நெஞ்சொடு கிளத்தல்**

சாகாதிருப்பதற்குத் தான் கற்குங் கல்வியன்றோ
வாகான மெய்க்கல்வி வகுத்தறி நீ கன்மனமே.

** அகப்பேய்சித்தர்**

பாவந்தீரவென்றால் அகப்பேய்
பற்றற நில்லுமடி
சாவதுமில்லையடி யகப்பேய்
சற்குருபோத நிலை.

** ஔவை ஞானக்குறள் அங்கியிற்பஞ்சு செய் 218**

துரியங்கடந்த சுடரொளியைக் கண்டால்
மரணம் பிறப்பில்லை வீடு.

** கடுவெளிசித்தர்.**

மெய்ஞ்ஞான பதையிலேறு, சுத்த
வேதாந்த வெட்டவெளி தனைத்தேறு
அஞ்ஞான மார்க்கத்தைத் தூறு, உன்னை
அண்டினோர்க் கானந்தமா மறங்கூறு.

பேதவாக்கிய மார்க்கத்தில் நடந்து பேத அந்தமாம் வேதாந்தத்தினிலைத்தவன், தன்னையறியும் உண்மையுற்று திரிகாலங்களையு முணர்ந்து பிரம்மணமாம் நற்செயல்வீசி சருவ சீவர்களுக்கும் உபகாரியாய் விளங்கி அரஹத்தென்றும், பிராமமணனென்றும், அந்தணனென்றும், விவேகிகளாலழைக்கப்பெற்று, சருவசீவர்களுந் தேவனென்று வணங்கத் தக்க ஏழாவது தோற்றத்திருந்து, தனது சங்கத்தோர் யாவரையுமழைத்து தான் பரிநிருவாணமடையுங் காலத்தை விளக்கி புளியம் ஓடுபோலும், பழம் போலும் புழுக்களினின்று விட்டில் வெளிவருதல் போலும், பயிரங்கமாம் தேகத்தினின்று அந்தர அங்கமாம் உண்மையொளியாய் வெளிவந்து விடுவான்.

தாயின் வயிற்றி நின்று பயிரங்கமாய் பிறந்த பிறப் பொன்றும், பயிரங்கமாந் தேகத்தினின்று அந்தரங்கமாக சோதிமயமாய் அறிவுருவோடு பிறந்த பிறப்பொன்றும் ஆக இருபிறப்பானது கொண்டு, பிராமணர் அந்தணரென்னு மகா ஞானிகளை இருபிறப்பாளரென்று வழங்கிவந்தார்கள்.

இதுவே புத்தசங்க அரஹத்துக்களிடம் பெற்ற உபநயனமாம் உள்விழிபெற்ற பயனும், சுருதிமுடிவின் பயனும், வேத அந்தத்தின் பயனுமாகும்.

** பட்டினத்தார்.**

நீற்றைப்புனைந்தென்ன நீராடப்போயென்ன நீ மனமே
மாற்றிப் பிறக்க வகையறிந்தாயில்லை மாமறைநூல்
ஏற்றிக்கிடக்கு தெழுகோடி மந்திரம் என்னகண்டாய்
ஆற்றிற்கிடந்துந் துறை தெரியாம லலைகின்றாயே.

** நெஞ்சறி விளக்கம். செய்.11**

காட்டினில் மேவுகின்ற கனபுழுவெல்லாம் பார்த்து
வேட்டுவ னெடுத்து வந்து விரும்பிய கிருமி தன்னை
கூட்டினி லடைத்து வைத்து குளவிதன் னுருவாய்செய்யும்
நாட்டினி னீதா நாகை நாதரை வணங்கு நெஞ்சே.

** தேவர்கள்**

இத்தகைய தேகத்திலிருப்பதை யறுவெறுத்து புறமெய் வேறு, அகமெய்வேறாகக் கழட்டிக் கொள்ளுவோர்களை சீவன் முத்தர்களென்று கூறப்படும். இஃதை யநுசரித்தே பட்டினத்தார் தனது

சற்குருவாகும் புத்தபிரான் அரசனாக விருந்து குருவாகத் தோன்றி விளக்கிய மகத்துவத்தைப் போதிக்கின்றார்.

** பட்டினத்தார்.**

மானார் விழியைக் கடந்தேறி வந்தனன் வான் குருவும்
கோனாகி
என்னை குடியேற்றுக்கொண்டனன் குற்றமில்லை
போனாலும் பேரிருந்தாலு நற்பேரிது பொய்யன்றுகா
ணானுலு மிந்த வுடம்போ டிருப்ப தறுவெறுப்பே.

இத்தகைய அரஹத்துக்கள் ஆதியாகிய குருநாதனைப்போல் புறமெய் யகற்றி உண்மெய் ஒளியாய் அகண்டத்துலாவி நட்சேத்திரம் பெற்றிருக்கின்றார்கள்.

** அகஸ்தியர் நன் மாணாக்கனுக்கு**

** சுழி முனையாம் வேத அந்தத்தில் உபநயனமளித்து**

** சாதனத்தை**

** போதித்த பாடல்**

பண்ணினால் ஜடம் போகா தெத்தனை நாளாய்
பலவாக மௌனத்தை விரித்துச் சொல்வேன்.
ஒண்ணினால் மௌனத்தில் ரவியைப்பாரு
உருகி யல்லோவகண்டத்தின் வெளியைக் காட்டும்

கண்ணினால் ஜடங்காணும் பிடிக்கப் பொய்யாம்
        கற்பூர தீபம் போல் ஒளியாய் நிற்கும்
தண்ணினால் சாய்கையில்லை யகண்டமாவாய்
        சச்சிதானந்தமென்ற தேகமாமே

** சீவகசிந்தாமணி தேய்வககதி செய் 2800**

** இதுவே தெய்வகதி என்னப்படும்**

திருவிற் பொற்குலார் தேர்ந்தார் தேவர்தன் தண்மைச் செப்பிற்
கருவத்து சென்று தோன்றார் கானிலந் தோய்தல் செல்லா
ருருவமே லெழுதலாகா வொளியுமிழ்ந் திலங்குமேனி
பரிதியி னியன்ற தொக்கும் பன்மலர் கண்ணிவாடா.

** மச்சழனியார் ஞானம்**

கேட்டறிந்துக் கொள்வீடென்ன காடென்ன
        கெட்டிப்பட்ட மௌனத்திலே நின்று
மாட்டறிந்துக்கொள் வஸ்துவை யுண்டுநீ
        மனதைத்தாண்டி யறிவுக்குள்ளேச் செல்லப்
பூட்டறிந்துக்கொள் பொன் போல தேகமாம்
        புத்தியோடு மகண்டத் துலாவலாம்
ஆட்டறிந்து கொள் கற்பூர தேகமாம்
        அகண்ட சோதியும் சித்தியுமாச்சுதே

** பாம்பாட்டி சித்தர் செய் 19.**

வச்சிரத்திற் கோர்பழுது வாய்க்கு மாயினும்
வல்லுடம்புக் கோர்குறைவு வாய்த்திடாது
மெச்சுஜட முள்ள வெங்கள் வேதகுருவின்
மெல்லடி துதித்துநின் றாடாய் பாம்பே.

** ஔவையார் ஞானக்குறள். செய்.22**

வெள்ளி பொன்மேனியதொக்கும் வினையகன்ற
உள்ளுடம்பினாய வொளி.

புத்த சங்கத்தோருள் சமணநிலை கடந்து அரஹத்துக் களென்னும் அந்தண நிலையடைந்து இருபிறப் புண்டாய் சுயம்பிரகாசமா யந்தரத் துலாவுகின்றார்கள். இவர்களையே சீவன் முத்தர்களென்றும், சீவகர்களென்றுங் கூறப்படும்.

** சிலப்பதிகாரம் 27.நீர்ப்படைக்காதை. வரி 92**

தண்ணலம் பெருந்தவத்தாசீவகர்முன்
புண்ணியதானம் புரிந்தறங்கொள்ளவும்.

சுருதி முடி வென்றும், மறைமுடி வென்றும், வேத அந்தமென்றும் வழங்கும் வேதாந்தத்திற்கும், அஷ்ட சித்துக் களின் அந்தமாம்

சித்தாந்தத்திற்கும் மத்தியில் தேகத்துடன் அந்தரத் துலாவுவோர்களே சித்தர்களென்றும், சாரணர்க ளென்றும் அழைக்கப்பெற்றார்கள்.

இதைய நுசரித்தே தாயுமானவர் சித்தர்களை தியானிக்குங்கால் “வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலை பெற்ற வித்தகச் சித்தர்கணமே” என்றுங் கூறியுள்ளார்.

இத்தகைய வேதாந்திகளும், சித்தாந்திகளும், தற்காலமெங்கேனு முளரோ வென்று சாவுவாறு முண்டு. அவர்கள் உண்டு இல்லை என்பதை சாந்தம், ஈகை, அன்பெனும் காருண்ய முகத்தினின்று உபநயனமாம் உள்விழிப் பார்வையால் அறிந்து கொள்ளலாம்.

** தாயுமானவர். செய்.48**

ஞானகருணாகர முகங்கண்டபோதிலோ நவ
நாதசித்தர்களு முன்
னட்பினை விரும்புவார் சுகர்வாம தேவர் முதன்
ஞானிகளு முனை மெச்சுவார்.

இதய சுத்தத்தாலும், வேதாந்தமாம் உபநயன பார்வையாலும், காமனையும், காலனையும் வென்று பாபத்தை ஜயித்து அரஹத்து, பிராமணர், அந்தணரென்னும் பெயர் பெற்று புளியம்பழம் போலும், ஒடு போலும் தேகத்தினின்று, மறுபிறப்படைகின்றவர்களெவரோ,

அவர்களே இருபிறப்பாள ரென்னும் யதார்த்த பிராமண வேதாந்திகளாவர். அவர்களே தேவர்கள்.

** ஆதி தேவன்.**

இத்தியாதி சத்திய தன்மங்களைத் தெள்ளற விளக்கி உலக சீர்திருத்தத்திற் காதியாகவும், மக்களின் தெய்வத் தோற்றத்திற் காதியாகவும், மனவமைதியால் பாபத்தை ஜயிக்கும் மார்க்கத்திற் காதியாகவும் சாந்த நிலையமைதியால் அந்தணர்களென்று பெயர்பெற்றவர்களுக் காதியாகவும், நல்லொழுக்கத்தி லுண்டாகும் சகல சித்துக்களினுட் பொருட் காதியாகவும், விளங்கி ஆதி தேவனென்றும், ஆதி கடவுளென்றும், ஆதி வேதனென்றும், ஆதி நாதனென்றும் பெயர்பெற்றவர் ஜகத்குருவாம் புத்தபிரானேயாகும். சக்கிரவர்த்தித் திருமகனாகும் சாக்கைய முனிவர் உலகெங்குஞ் சுற்றி பேரானந்த சத்திய தன்மத்தை வூட்டி
சீர்திருத்தியு மிருக்கின்றார்.

** மணிமேகலை காதை 26 வரி52**

எண்ணருஞ் சக்கரவாள மெங்கணும்
அண்ணலறக் கதிர் விரிக்குங்காலை

** சிலப்பதிகாரம் காதை 4 வரி!**

விரிகதிர் பரப்பி யுலகமுழுதாண்ட
வொருதனித் திகிரி யுரவோற்காணேன்.

சூளாமணி துறவுச்சருக்கம் செய்.68

தெருளாமையால் வினவற்பால தொன்றுண்டு
திருவடிகள் செம்பொனாரறவிந்த மேத்த
விருளாழி யேழுலகுஞ் சூழொளியின் மூழ்க
விமையாத செங்கண்ணினிமையோர் வந்தேத்த
வுருளாழியானு மொளிமணி முடிமேற்கை வைத்
தொருபாலில் வரவுலக நின்னுழையதாக
வருளாழி முன்செல்லப்பின் செல்வதென்னோ
வடிபடாதாய் நின்ற வகன்ஞாலமுண்டோ

** சூடாதமணி நிகண்டு தொகுதி6 காப்பு**

உலகமெலா மிறைஞ்சி யேத்த
உலகெலா முணர்ந்த மூர்த்தி.

இவ்வகையாய் புத்தபிரான் உலகெங்குஞ் சுற்றி சத்திய தன்மத்தை மக்களுக்கு விளக்கினாரென்னும் சரித்திராதாரங் களுள்ளதோடு அவரது வுருவத்தைக் காட்டுஞ்சிலைகளும், அவர் சின்மய முத்திரை முதலிய பதினாறு முத்திரைகளைக் காட்டிய உருவச்சிலைகளும், நிருவாணமடைந்த அறப்பள்ளி உருவம் போன்றச் சிலைகளும், உலகெங்கும் காணப்படுவதை அந்தந்த தேச மீயூஜியங்களிலும், ஆர்க்கலாஜிகல் சர்வே புத்தகங்களாலும் தெரிந்துக் கொள்ளலாம்.

இருபிறப்பாளராகிய அந்தணர்கள் யாவருக்குந் தந்தையும் ஆதி அந்தணருமாக விளங்கியவரும் புத்தபிரானேயாம்.

** திரிக்குறள் கடவுள் வாழ்த்து**

அறவாழி யந்தணன்றாள் சேர்ந்தார்க் கல்லார்
பிறவாழி நீத்த லரிது.

** சீவகசிந்தாமணி செய்.2561.**

திருமறுமார்பினை திலகமுக்குடையினை
யருமறை தாங்கிய வந்தணர் தாதையை
யருமறை தாங்கிய வந்தணர் தாதைநின்
நெரிபுரை மலைமலரிணையடி தொழுதும்.

** சீவகசிந்தாமணி செய். 366**

சாதிப்பைம் பொன்றன் னொளி வெளவித் தகைகுன்றா
நீதிச்செல்வம் மேன் மேனீந்தி நிறைவெய்தி
போகிச்செல்வம் பூண்டவரேத்தும் பொலி வினால்
ஆதிக்காலத் தந்தணன் காதன் மகனொத்தான்.

சருவ வுயிர்களையுந் தன்னுயிர்போல் கார்த்து சாந்தனிறை வால் ஆதியந்தணராகவும், அந்தணர்களுக்குத் தாதையாயது மன்றி உலக சீர்திருத்தக்காரருள் ஆதியாக விளங்கினவரும் புத்தபிரானேயாம்.

** மணிமேகலை காதை 6 வரி!**

ஆதி முதல்வன் அறவாழி யாள்வோன்
பாத பீடிகை பணிந்தன ளேத்தி

** விரசோழியம்**

போதிநிழலிற் புநிதன் பொலங்கழல்
ஆதி யுலகிற்காம்.

** சிலப்பதிகாரம் காதை 11, வரி-3**

கோதைதாழ் பிண்டி கொழுநிழலிருந்த
ஆதியில் தோற்றத் தறிவனை வணங்கி.

ஒவ்வோர் மக்களும் நான்கு வாய்மையுணர்ந்து நீதி நெறியின் ஒழுக்கங்களால் தீவினையை அகற்றினோர்கள் யாரோ அவர்களையே தேவர்களென்றழைக்கப்படும்.

** சீவகசிந்தாமணி செய்.249.**

யாவராயினும் நால்வரைப் பின்னிடில்
தேவரென்பது தேறுமிவ்வையகங்
காவன் மன்னவர் காய்வன சிந்தியார்
நாவினும் முரையார் நவையஞ்சுவார்.

** வேறு செய். 951**

கற்றவைப்பதங்கணீராக்
    கருவினைக் கழுவப்பட்டு
மற்றவன், தேவனாகி
    வானிடு சிலையிற்றோன்றி
யிற்றதனுடம்புமின்னா
    விடரொழித் தினியனாகி
யுற்றவனிலையுமெல்லா
    மோதியி னுணர்ந்து கண்டான்.

இத்தகைய தேவராகவேண்டிய செயலுள் மனிதனென் னும் பெயரற்று ஏழாவது தோற்றமாகி ஆதிதேவனாக விளங்கியவரும், ஆதிதேவனெனப் போற்றப் பெற்றவரும் புத்தபிரானேயாம்.

** சூடாமணி நிகண்டு தொகுதி.1 செய். 17**

தருமராஜன் முன்னிந்திரன் சினன் பஞ்சதாரைவிட்டே
அருள்சுரந்தவுணர் கூட்டுந் ததாகதன் ஆதிதேவன்.

தேகத்தாலுண்டாகுந் தீவினைகள் மூன்றும், வாக்காலுண்டாகுந் தீவினைகள் நான்கும், மனதாலுண்டாகுந் தீவினைகள் மூன்றையு மொழித்து. சீலந்தாங்கி நிற்பவர்களே தேவர்களென்றும், மக்களென்றும், பிரமரென்றும் கூறியுள்ளவைகளில்,

** மணிமேகலை காதை 30. வரி 77**

சொல்லிய பத்தின் தொகுதியு நீத்து
சீலந்தாங்கி தானந்தலைநின்று
மேலென் வகுத்த வொரு மூன்று திரத்து
தேவரும் மக்களும் பிரமருமாகி
மேவிய மகிழ்ச்சி வினைப்பயனுகர்வர்

ஆதியந்தணரென்றும், ஆதிதேவரென்றும் புத்தபிரானைக் கொண்டாடியது போலவே பிரமமென்றும் அவரையே துதித்திருக்கின்றார்கள்.

** மணிமேகலை காதை 21. வரி 49.**

மருளுடை மாக்கள் மனமாசு கழுவும்
பிரம தருமனை பேணினராகி.

மக்களுள் நன்மெய்க் கடைபிடித் தொழுகுஞ் சாதனத்தால் கடவுளென்னும் பெயரைப் பெறுகின்றார்கள்.

** சூடாமணி நிகண்டு தொகுதி 11 செய். 3**

ககனம் விண்படை காடென்ப
கடவுடே முநிநன் மைப்பேர்

**சீவகசிந்தாமணி செய்.2887**

தணக்கிற பறித்தபோதுந் தானளை விடுத்தல் செல்லா
நிணப்புடை யுடும்பினாரை யாதினா ணீக்கலாகா
மணப்புடை மாலைமார்ப னொரு சொலே யேதுவாகக்
கணைக்கவினழித்தகண்ணார் துறந்து போய்க் கடவுளானான்

இத்தகைய மக்களே கடவுளென்னும் பெயர் பெற்றிருந் ஆதிதும், கடவுளாகப் போற்றப் பெற்றவரும் புத்தபிரானேயாம்.

** சூளாமணிசுருக்கம் 4. செய். 96.**

ஆதியங் கடவுளை யருமறை பயந்தனை
போதியங் கிழவனை பூமிசை யொதிங்கினை
போதியங் கிழவனை பூமிசை யொதிங்கிய
சேதியென் செல்வநின் றிருவடி வணங்கினம்.

** மணிமேகலை காதை 11 வரி 54.**

கடவுள் பீடிகை தொழுதனளேத்தி.

** சீவகசிந்தாமணிசெய் 2713.**

காதிக்கண்ணறிந்து வென்ற வுலகுணர் கடவுள் காலத்
தாதிக்கண் மரங்கள் போன்ற வஞ்சொலீரிதனினுங்கள்

காதலிற் காணலுற்ற விடமெலாங் காண்மினென்றா
னீதிக்கணின்ற செங்கோனிலவுவீற்றிருந்த பூமான்.

இவைகளுக்கு முதலாதரவாகத் திருவள்ளுவ நாயனார் தானியற்றியுள்ள திரிக்குறள் பாயிரத்தில் கடவுள் வாழ்த்தென்று கூறி, அப்பத்து பாடலிலும் புத்தபிரானையே ஞான சூரியனாக சிந்தித்திருக்கின்றார்.

மக்களுள் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றமென்னு மைம் பொறிகளை யவித்து, காமனை வென்றார்களென்னும் பெண்ணிச்சையை யொழித்தவர்களை ஐந்திரரென்றும், இந்திரரென்றும் அழைக்கப்பெற்றார்கள்.

** சீவக சிந்தாமணி செய். 3121**

ஆசையார்வ மோடைய மின்றியே
யோசைபோ யுலகுண்ண நோற்றிபி
னேசுபெண்ணொழித் திந்திரர்களாய்
தூயஞானமாய்த் துறக்கமெய்தினார்.

மக்களுள் ஆதியாய் இந்திரியங்களை வென்றவரும், ஐந்தவித்த வல்லபத்தால் ஆதி இந்திரரென்னும் பெயர் பெற்று, அவர் ஞானவருள் பெற்ற தேவர்களால் வானவர் கோமானாகக் கொண்டாடப் பெற்றவரும் புத்தபிரானேயாம்.

** திரிக்குறள் செய்.25**

ஐந்தவித்தானாற்ற லகல்விசும்பு ளார்க்கோமான்
இந்திரனே சாலுங் கரி.

** அருங்கலச் செப்பு**

இந்தியத்தை வென்றான் தொடர் பாட்டோடாரம்ப
முந்தி துறந்தான் முநி.

** மணிமேகலை**

இந்திரரெனப்படு மிறைவகம் மிறைவன்
றந்த நூற் பிடகந் தாய முன் முதலா.

** சீவகசிந்தாமணி செய்.3094**

ஏத்தரிய பல்குணங்கட் கெல்லை வரம்பாகி
நீத்தவருளிந்திரனை நின்று தொழுதமரர்
நாத்தழும்ப வேத்திதவ நங்கையவர் நண்ணித்
தோத்திரங்களோதி துகண்மாசு துணிகின்றார்.

** சூளாமணி சுருக்கம் - 11 செய்.80**

மந்திரமாந்தர் மொழிதலும் வானிடை
யந்தரம்வாழு மமரர் வழிபடுந்

தந்திரஞான்ற தவத்திற் கரசனா
மிந்திர னன்னாற் கெடுத்துரைக்கின்றான்.

மனுக்களுள் காம, வெகுளி, மயக்கங்களாம் முக்குற்றங் களையுமகற்றி, அன்பை பெருக்கி, உண்மை நிலையாகும் நிருவாணத்தை யடைகின்றார்களோ, அவர்களையே சிவனென்றும், மக்கள் கதியிற் சிறந்து தேவகதியாம் சிவகதியடைந்தோ ரென்றுங் கூறியுள்ளார்கள்.

** திருமூலநாயனார் திரிமந்திரம்.**

அன்பும் சிவமும் இரண்டென்பரறிவிலார்
அன்பே சிவமாவ தியாருமறிகிலார்
அன்பே சிவமாவ தியாருமறிந்தபின்
அன்பே சிவமா யமர்ந்திருப்பாரே.

** சிவயோகசாரம்**

தானோவகத்தல்ல வென்றறிந்தாற் றாரணியி
லேனோ பிழைத்திடுவா னேழைதான் - றானே
யிறவாவதுணீகாணிற்கவருளின்
மறவாதிரு சிவமாவை.

** சீவகசிந்தாமணி செய்.605**

அவம்புரிந்துடம்பு நீங்கா தருந்தவ மூயன்மின் யாருஞ்
சிவம்புரி நெறியைச் சேர செப்பமிப் பொருளுங்கேண்மின்.

** காசிக்கலம்பகம் செய். 48**

வல்லாண்டமண்டத் தெம்மாதிப் பிரான்வி முத்தத்திலே
சில்லாண்டிருந்து சிவமாய் செலுஞ்சில செந்துக்களே.

இத்தகைய வன்பின் மிகுதியால் ஆதிசிவனென்றும் சகலருக்கும் நிருவாண மார்க்கத்தை யூட்டியவராதலால், சிவகதி நாயகனென்றும், ஆதியிற் கொண்டாடப் பெற்றவரும் புத்தபிரானேயாம்.

** அறநெறிச்சாரம் செய்.225**

அவன் கொலிவன்கொ லென்றையப்படாதே
சிவன்கண்ணே செய்மின்கள் சிந்தை - சிவன்றானும்
நின்றுக்கால் சீக்கு நிழறிகழும் பிண்டிக்கீழ்
வென்றிச்சீர் முக்குடையான் வேந்து.

** சீவகசிந்தாமணி செய்.3105**

இன்பமற்றென்னும் பேரானெழுந்து புற்கற்றைத் தீற்றித் துன்பத்தைச் சுரக்கு நான்குகதியெனுந் தொழுவிற் சேர்த்து நின்றபற்றார்வநீக்கி நிருமலன் பாதஞ் சேரினன்பு விற்றுண்டு போகிச் சிவகதி யடையலாமே.

** சூளாமணி சருக்கம். 12 செய். 6**

மணிமலர்ந்து மிழொளி வனப்புஞ்சந்தனத்
துணிமலர்ந்து மிழ்ந்தருந் தண்மைத் தோற்றமு
நணிமலர் நாற்றமு மென்ன வன்னதா
லணிவரு சிவகதி யாவதின்பமே.

ஆசியா கண்ட முழுவதும் புத்ததன்மம் பரவியிருந்த காலத்தில், புத்தபிரானை சிவனென்றும், சிவகதிநாயகனென்றுங் கொண்டாடி, வந்தது மன்றி, அவரையே மாலென்றும், திருமாலென்றும், செங்கணெடுமாலென்றுஞ் சிந்தித்து வந்தார்கள்.

பாலிபாஷையில் மால் என்னு மொழிக்கு வட்டம் சக்கிரவாளமென்னும் பொருளைக் குறித்திருக்கின்றார்கள்.

மணிமேகலையிற் கூறியுள்ளவாறு “எண்ணருஞ் சக்கிர வாளமெங்கணும் அண்ணலறக்கதிர் விரிக்குங்காலை” உலகெங் குஞ் சுற்றி தருமத்தை நிறப்பினவராதலின் நெடு மாலென்றும், ஞான விழியால் சகலமு முணர்ந்தவ ராதலின் ஞான நேடுமாலென்றும், பெருங்கூட்டங்களில் நிறைந்திந்த ஒவ்வோர் மநுக்க ளுள்ளங்களிலுமுள்ள சங்கைகளை நிவர்த்தி செய்து வந்தவராதலின் சகலமு முணர்ந்தவரென்றும், ஆயிரங்கண்ண னென்றும், தாமரைக்கண்ணனென்றும், வழங்கிவந்தார்கள்.

தேவர்களுக்குள் சிறந்தவராகவும், ஆதிதேவனாகவும் விளங்கியவர் புத்தபிரானாதலின் திருவள்ளுவ நாயனா ரியற்றியுள்ள திரிக்குறளுக்கு சாற்றுக்கவி கொடுத்துள்ள

** கவிசாகரப் பெருந்தேவனார் திரிக்குறள் சாற்றுக்கவி**

பூவிற்குத் தாமரையே பொன்னுக்கு சாம்புனத
மாவிற் கருமுனியா யானைக் - கமரரும்ப
றேவிற் திருமாலெனச் சிறந்ததென்பவே
பாவிற் வள்ளுவர் வென்பா.

**எண்ணூற்காப்பு**

நெடுமாற் றிருமருகானித்தான் முதலாய்

பாலிபாஷையில், சக்கிரவாள மெங்குமுருட்டிய வரென் னும் பொருளையும், தமிழ்பாஷையில் மயக்கமென்னும் பொருளை யுந்தழுவி, மேற்குறித்த வெண்பாவை முடித்திருக்கின்றார்கள். ஒவ்வோர் நூற்களின் முகப்பிலுமுள்ள, காப்பு செய்யுட் களில் புத்தபிரானாகும் மாலையே சிந்திக்கும்படியாய் சூத்திரமும் விதித்துள்ளார்கள்.

** சூடாமணி நிகண்டு தொகுதி.12 செய்.139**

காப்புக்கு முன்னெடுக்குங் கடவுள்தான் மாலேயாகும்
பூப்புனை மலரின் செவ்வி புனைபவனாதலானும்

காப்பவ னாதலானுங் கதிர்முடி கடகத்தோடு

வாய்ப்பதா மதாணி பூனூல் வரிசையிற் புனைதலானும்.

ஞானவிழியாற் சகலமுமறியக் கூடியவர்களை மூன கண்ணரென்றும் சமண முனிவர்கள் வகுத்திருக்கின்றார்கள்.

** சூளாமணிசருக்கம். 11 செய்.96.**

கருமாலை வெவ்வினைகள் காறளர நூறிக்

கடையிலா வொண்ஞானக் கதிர் விரித்தாயென்று

மருமாலை நன்னெறியை முன்பயந்தாயென்று

மடியே முன்னடி பரவுமா றறிவதல்லாற்

றிருமாலே தேனாரு மறவிந்த மேந்துந்

திருவணங்கு சேவடியாய் தேவாதிதேவ

பெருமானே நின்பெருமைநன்

குணர - மாட்டார்

பிணங்குவார்தம் மெய்வினைப் பிணக்

கொழிக்கலாமே.

** சூளாமணி சருக்கம். 11 செய்.73**

செங்கணெடுமாலே செறித்திலங்கு சோதித்

திருமுயங்கு மூர்த்தியாய் செய்யதாமரையி

னங்கணடி வைத்தருளு மாதியா யாழி

யறவரசேயென்று நின்னடிபணிவதல்லா

லெங்கணிட ரகலுமாறிந் நிலைமையெய்தி

யிருளுலக நீக்கும் அருடளுக நீயென்று

வெங்கணிருவினையை யறவென்றாய் முடோன்னின்று

விண்ணப்பஞ் செய்யும் விழுத்தகமையுண்டோ

** சீவகசிந்தாமணி செய் 1549.**

மட்டார்பூம் பிண்டிவளங்கெழு முக்குடைக் கீழ்மாலே - கண்டீர்

முட்டாத வின்பக் கதிதிறக்குந் தாளுடைய மூர்த்திபாதம்.

** சூடாமணி நிகண்டு தொகுதி.1 செய். 18**

மாயிரு ஞாலத் தரசுதலை யீண்டு

ஆயிரங் கண்ணோன் விழாக்கோல் கொள்கென

** திரிக்குறள் செய் 1113**

தாம்வீழ்வார் மென்றொடுயிலினினிதுகோ

றாமரைக் கண்ணோனுலகு -

(தாமரைக்கண்ணோன் - தன்தாளில் தாமரை ரேகையுள் ளோன்.)

** விரசோழியம் உபகாரப்படலம்**

புத்தன் காரணப்பெயர் - கண்ணன் காரியப்பெயர்
புத்தன் கண்ணனை உய்வித்தான்
என்புழிக் கருதா கிரியைக்குக்கா
ரணமாய் நிற்றலிற்காரண கருத்தாவாயிற்று (செ.45 உதாரணம்)

இத்தகைய மாலென்றும், திருமாலென்றும், செங்கணெடு மாலென்றும் வழங்கிய புத்தபிரானே உலகெங் குஞ்சுற்றி கன்ம சக்கிரமாம் அறவாழியை யுருட்டி சங்கங்களை நிறப்பி வந்தபடியால் அவரையே உலகளந்தோ னென்றும் படியளந்த பெருமாளென்றும் சங்க சக்கிரத்தா னென்றும் வழங்கி வந்தார்கள்.

** சீவகசிந்தாமணி செய். 1559.**

ஓங்குமால்வரை வரையாடுழக்கலினுடைந்துகு பெருந்தேன்
றாங்குசந்தனந் தளரத்தழுவி வீழ்வனதகைசா
லாங்கண்மா லுலகனந்தானாழி சங்கமோடேந்தி
தேங்கொண்மார் பிடைத்திளைக்குஞ் செம்பொனார்
மொத்தனவே.

சங்க சக்கரத்தான், அறவாழியான், உலகளந்தானென்றும் புத்தபிரானைக் கொண்டாடியது மன்றி, சகல மக்களின் எண்ணங்களை யறிந்து சொல்வதும், பலதேச சங்கதிகளை உள்ளுக்குள் ளறிந்து போதிப்பதுமாகிய, கியான திருஷ்டியின்

செயலைக்கண்டு, உலகத்தையே உண்டு உமிழ்கின்றவரென்றும் உலகுண்டோனென்றும் புகழ்ந்து எழுதியுள்ளார்கள்.

** சீவகசிந்தாமணி செய்.3093**

முழங்கு கடனெற்றி முனைத்தெழுந்த சுடரேபோ
லழுங்கல் வினையலற நிமிர்ந் தாங்குலக மூன்றும்
விழுங்கி யுமிழாது குணம் வித்திலிருந்தோய் நின்
னிழுங்கில் குணச் சேவடிக ளேத்தித் தொழுதும் யாம்.

கடவுளென்றும், பிரமமென்றும், சிவனென்றும், தேவ னென்றும், திருமாலென்றும், புத்தபிரானையே கொண்டாடி வந்ததுமன்றி சுவாமீ சாமியென்றும் அவரையே சிந்தித்து வந்தார்கள்.

** சீவகசிந்தாமணி செய். 3113**

பான்மிடை யமிர்தம் போன்று பருகலாம் பயத்தலாகி
வானிடை முழக்கிற் கூறி வாலற வமுதமூட்டித்
தேனுடை மலர்கள் சிந்தித் திசைதொழச் சென்றபின்னாட்
டானுடை யுகலங்கொள்ளச் சாமி நாட்சார்ந்ததன்றே.

கமல சூத்திரத்தில் “சகஸ்திரநாம பகவனென்றும்,” மணிமேகலையில் “ஆயிரநாமத்தாழியன் திருவடி” யென்றுங் கொண்டாடப்பெற்ற புத்தபிரானுக்கு வாயிரத்திற்கு மேற்பட்ட நாமங்களளித்து ஆனந்தங் கொண்டாடியக் காரணங்கள் யாதென் பீரேல் :-

பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடென்னும் நான்கு துன்பங்களையுந் தன்னிற்றானே ஓதாமலுணர்ந்து தனது அதி தீவரபக்குவத்தால் காமனையுங் காலனையுஞ் ஜயித்து நிருவாணத் தைத் தானடைந்ததுமன்றி, ஏனைய மக்களையும் ஈடேற்றுவான் வேண்டி உலகெங்குஞ் சுற்றி சத்திய தன்மத்தை யூட்டித் தன்னைப் போல், மற்ற மக்களுங் காமனையுங் காலனையும் வென்று நிருவாணமடையும்படிச் செய்தபடியால், அப் பேரின்பத்தை யனுபவித்தவர்களும், நித்தியானந்தத்தைக் கொண்டவர்களும், சித்தின் நிலையைக் கண்டவர்களும், தங்களுக்குள்ளெழு மானந்தக் கிளர்ச்சியால் ஜகத்குருவை அனந்தானந்தப் பெயர் களாலழைக்கலானார்கள்.

** மணிமேகலை காதை 30 வரி167**

பிறப்பே பிணியே மூப்பே சாவென
மொழிந்திடு துன்பமெனவிவை.

** ஷை காதை 11 வரி61.**

மாரனை வெல்லும் வீரனின்னடி.

** ஷை காதை 5 வரி102**

காமற்கடந்த யேமமாயோய்

** சூளாமணிசருக்கம்.4 செய்.97**

காமனைக் கடிந்தனை காலனைக் காய்ந்தனை
தேமலர் மாரியை திருமறு மார்பனை
தேமலர் மாரியை திருமறு மார்பனை
மாமலர் வண்ண நின் மலரடி வணங்கினம்.

** சீவகசிந்தாமணி செய்.3091**

சுறவுக்கொடிக் கடவுளோடு காலற்றொலைத்தோயம்
பிறவியறுகென்று பிறசிந்தையிலராகி
நறவுமலர் வேய்ந்து நறுஞ்சாந்து நிலமெழுகித்
துறவுநெறிக் கடவுளடி தூமமொடு தொழுதார்.

புத்தபிரான் காமனையுங் காலனையுஞ் ஜயித்து நிருவாண மடைந்தது மன்றி மற்றவர்களது மரணத்துக்கத்தையுஞ் ஜயிக்குந் தன்மத்தை யூட்டியிருக்கின்றார்.

** மணிமேகலை காதை 5 வரி69**

சாதுயர்நீக்கிய தலைவன் றவமுநி
சங்க தருமன் றாமெனக் கருளிய.

** சீவகசிந்தாமணி செய். 1494**

கோதையுங் குழலும் பொங்கக் குவிமுலைக் குழங்கன்மாலைப்
போதுகப் பொருது பூணும் பொருகடன் முந்து மூழ்க
காதலுங் களிப்பு மிக்குங் கங்குலும் பகலும் விள்ளார்
சாதலும் பிறப்புமில்லாத் தன்மை பெற்றவர்களொத்தார்.

இயமகாதகனென்றும், இயமனை வென்றோனென்றும் காலகாலனென்றும் மரணத்தை ஜயித்தோனென்றுங் கொண் டாடப்பெற்ற புத்தபிரானையும், அவரோதியுள்ள முதனூலாகும் சத்தியதன்ம ஆதி வேதத்தையும், உணர்ந்தவர்கள் எவரோ அவரே பாபத்தை யறுத்து மரணத்தை ஜயித்து நிருவாண மடைவார்களென்று மகாஞானிகளும், சித்தர்களும் வற்புறுத்திக் கூறியிருக்கின்றார்கள்.

** சித்தாந்தக் கொத்துமணி காதை 30 வரி10**

** உரைமேற்கோள்.**

அருணெறியாற் பாரமிதை யாறைந்து முடன டக்கிப்
பொருள் முழுதும் போதிநிழ னன்குணர்ந்த முநிவரன்ற
னருள்மொழியா நல்வாய்மை யறிந்தவரே பிறப்பறுப்பார்
மருணெறியாற் பிறநூலு மயக்கறுக்கு மாறுளதோ.

** இடைக்காட்டு சித்தர்.**

ஆதிபகவனையே பசுவே யன்பாய் துதிப்பாயேல்
சோதி பரகதிதான் பசுவே சொந்தம் தாகாதோ.

** வீரசோழியம் யாப்புப்படலம், உதாரணச் செய்.3**

தோடாரிலங்கு மலர்கோதிவண்டு வரிபாடுநீடு துணர்சேர்
வாடாதபோதி நெறிநிழன் மேய வரதன் பயந்த வறநூல்
கோடாதசீல விதமேவி வாய்மை குணனாக நாளுமுயல்வார்
வீடாதவின்ப நெறிசேர்வந்துன்ப வினைசேர்த நாளுமிலரே.

** சீவகசிந்தாமணி செய். 1467**

வீங்கோத வண்ணன் விரைத்தும்பு பூம்பிண்டித்
தேங்கோத முக்குடைக்கீழ் வேதர் பெருமானைத்
தேவர் பெருமானைத் தேனார்மலர் சிதறி
நாவின விற்றாதார் வீட்டுலக நண்ணாரே.

இத்தகைய பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடென்னும் நான்கு துன்பத்திற் காளாகாது மரணத்தை ஜயித்த யமகாதகனெவனோ அவனையே யதார்த்த பிராமண னெனப்படும்.

** தெளிதல்.**

மேற்குறித்த வேதம், உபநிடதம், பிடசம், உபநயனம், தேவநிலை, தேவர்கள் முதலிய பகுதிகளை நன்கறிதல் மானிடராய் ஒவ்வொருவருடைய கடன் என்பது நமக்கு நன்றாகத் தெரியும். ஒன்றைப் பரியாலோசியாமல் அங்கீகரித்தல் மூட மதியாகும். மனிதரென்பா ரொவ்வொருவருக்கும், அறிவு உண்டு. அவ்வறிவைச்

சிறுக சிறுக விசாலப்படுத்திப்பார்த்தால் தான், நமது, மானிடரென்ற பெயருக்கு ஒருவித மதிப்புண்டாகும். இல்லா விட்டால் சொன்னதைச் சொல்லும் கிள்ளைப்போலும், காட்டிய கைபக்கம் குலைக்கும் நாயைப் போலுந்தான் நம் நாட்டில் நாம் விளங்குவோம் என்பது திண்ணம்.

சில்லாண்டுகட்கு முன்னர், நமது இந்தியாவில் பல வேதக்காரர்கள் தோன்றினார்கள். அவர்களுள் பல வாதங்களேற்பட்டிருந்தது. அவர்கள் மதத்தின் நிமித்தம் பல அரசர்களைப் படைத்தார்கள். ஒருவருண்டாக்கிய மதத்தை மற்றொரு அரசாங்கத்தார் அழித்தார்கள். ஒருவர் கடவுளை, மதத்தை, குருக்களை, கோவில்களை, அரசாங்கத்தை, பிரஜைகளை இன்னொரு கூட்டத்தார்கள் தொலைத்தார்கள். இப்படியே எப்போதும் மதச்சண்டையும், கடவுள் சண்டையும், கோவில், குருக்கள் சண்டையும், அரசர், குடிகள் சண்டையும், நீடித்திருந்தது. இவைகளுக்கு காரணம், தற்காலம் “நாங்களே! யதார்த்த பிராமணர்” என்று பொய் சொல்லி இந்திய பைத்தியக்காரர்களை வசப்படுத்தி ஆண்டு அடிமையாக்கி வைத்துக்கொண்டுள்ள பாரசீக ஆரியர்களென்னும் பார்ப்பாரப் படுபாவிகளேயாகும்.

இப்பாரசீகர்களாகிய ஆரியர்கள், பிராமணர்களாக இருக்கின்றார்கள் என்று சத்தியஞ்செய்ய, அக்கினி மதத்தாருக்கு ஆத்திரம்

அதிகரித்திருக்கின்றது. பூர்வ பவுத்தர்களெல்லாம் ராக்ஷசர்களென்று உரக்கக்கூற இந்துக்களுக்குப் பகைமை இருக்கின்றது. இந்துக்களெல்லாம் கருங்குரங்குகளென்று நிக்ஷயமாகச் சொல்ல, பார்ப்பார்களுக்கு அதிகாரமும், அறிவும் இருக்கின்றது. இவ்விதமான பொறாமை யுரைந்த இந்தியாவில் ‘யதார்த்த பிராமணன்’ இருக்கின்றா னென்றால் அவனது லக்ஷணம் இன்னதென்று நமக்குத் தெரியவேண்டுமல்லவா? நாமெல்லாம் வேதத்தின் சிற்சில விதிகளைப் படித்திருந்தாலல்லவா கயிறு மாட்டிக்கொண்டிருப்பவன் பிராமணன். கத்தி வைத்துள்ள கசாயி அரசன். படி வைத்துள்ளவன் வாணியன், புல் சுமை தூக்கியவன் சூத்திரன் என்று நமக்குத் தெரியும். படித்தறிவதற் கில்லாமல் ஒருவன் சொல்லுவதில் நம்பிக்கை வைப்பதால்தான், அன்னம் சமைப்பவனையும், அன்னம் பரிமாறுகிறவனையும் (கூக், பட்லர்) பிராமணனென்றும், மது பானக் கடைகளில் எச்சில் பாத்திரம் எடுப்பவனை வைசிய னென்றும் தோல் தைப்பவனையும், மலமெடுப்பவனையும் சூத்திரனென்றும், அரபியா தேசத்து மதக்காரர்களை சகோதரர்ளென்றும் இந்தியாவில் உடன் பிறந்த சொந்த பவுத்த சகோதரர்களைப் பகைவர்களென்றும் நம்பிக்கைக் கொண்டிருக்கின்றோம்.

இவ்வித மோச மூட கேவல புத்தியுள்ள நமது தேகம் ஒரு உண்மையில் நின்று, ஒரு மனமாக எதையும் ஆலோசிக்க முடியாமலிருக்கின்றது. அதின் காரணம் இது தானென்று

தெரிந்துகொள்ள, நமக்கு நமது இந்தியாவின் சொந்த இரத்தம் நமது தேகத்தில் ஓடிக்கொண்டிருக்கவில்லை. ஒரு பக்கம் பார்ப்பார தந்தையின் விந்துவால் உண்டான இரத்தமும், இன்னொரு பக்கம் இந்திய தாயால் உண்டான இரத்தமும் ஓடிக் கொண்டிருக்கின்றன. அவை ஒன்றோடொன்று சண்டித்து விட்டால் கருங்குரங்குகளாகியவர்களுக்கு கோபம் பெருகி விடு கிறது. அக்கோபம் தணிய பவுத்தர்களை அழிக்க நேரிடுகின்றது. இந்த நிலைமை நமக்கிருக்குமட்டும் அதெப்படி பிராமணனைக் கண்டுக்கொள்ள முடியுமென்பது பெருஞ் சங்கையேயாகும்.

இந்தியாவில் இருக்கும், வேதங்கள் ஒன்றுக்கொன்று ஊசியைப் போலும் உதவக்கூடியதே யாகும். ஒரு மனிதன் வயிறு நிறைய புசித்தால், அடுத்த மனிதன் அடையும் பலன் என்ன? ஒன்றுமில்லை. தேவர்கள் :- மனிதர் கண்களுக்குத் தெரியாமல் இருக்கும் ஒரு கூட்டத்தார்களுக்கும் பூலோகத்தில் நம்மை ஏமாற்றி வாயடைத்து நமது தன தான்யத்தை உண்டு வளர்பவர்களாகிய பிராமணர்களுக்கும் பெயராகும். நமது கண்களுக்குத் தோன்றா தேவர்களுக்கு மேலுலக தேவர்களென்றும், நமக்குத் தோன்றும் தேவர் (பிராமணர்களுக்கு பூலோக தேவர்களென்றும் சொல்லப்படும். தன்னை, ஒருவன் பிராமணன் என்று சொல்லிக் கொள்வதற்கு, தான் எவ்வகையான பொய் நியாயங்களைக் காட்ட வேண்டுமோ, அத்தனையும் அவன் காண்பித்தே தீருவான். அப்படிப்போலவே

முற்காலத்தில் இருந்த சிற்சில பெரியோர்கள் தன்னையறியாத மூட பிராமணர்களிடத்தில் தீக்ஷைப்பெற்று உபநயனக் கயிற்றைத் தாங்கி தெய்வநிலையை யடைந்து தேவர்களாய் இருக்கின்றோம் என்று கொடி கட்டி தெருவெல்லாஞ் சுற்றி தன்னை யறிவித்து ஏழைக்குடிகளை பலாத்காரமாய் வணங்கச் செய்தார்கள். அவர்கள் சாகுங்காலங் களிலே சமாஜத்தில் சேருவார்கள். அப்படிச் சேருபவர்களுக்கு சமாஜி என்றும் சமாதி என்றும் சொல்லி வைத்தார்கள்.

முற்கால பிராமணர்களிடத்தில் உபநயனம் பெற்றுத் தெய்வ நிலை யடைந்து தேவர்களாக இருந்து சமாதியடைதலே பிராமணர்களின் அல்லது தேவர்களின் முடி பாகையால், அத்தேவர்கள் செத்து சேரும் இடங்களுக்கு மோக்ஷமென்று வழங்கினார்கள். இந்த மோக்ஷமும், சிவமதம், நாராயணன் மதம், பிரமன் மதம் என்ற மததேவதாஸ்தலங்களாக பாவிக்கப் பட்டிருக்கின்றது. இதில் பவுத்தமென்பதும் ஒரு மதமென நினைத்து பார்ப்பார்மத மோக்ஷத்தில் ஒன்றாகக் கணக்குக்கூட்டி காட்டி வைத்திருக்கிறார்கள்.

** திவாகரம் 3வது இடப்பெயர் தொகுதி**

** மோக்கத்தின் பெயர்**

அமுதங் கேவலம் பருவம் வீடு
சிவங்கை வல்லியஞ் சித்திமீ ளாகதி

பரகதி யோடுமெய் முத்தியஞ் சமகதி
நிருவாண மோக்க மெனநிகழ்த் தினரே.

இதில் முதலிலுள்ள ஆறு பெயர்கள் சிவ மதத்தையும், ஏழாவது எட்டாவது, விஷ்ணு மதத்தையும், ஒன்பதாவது, பத்தாவது, பிரம்ம மதத்தையும், பதினொன்றாவது, பன்னிரண்டா வது பெயர்கள் ஜைன மதத்தையும், நிருவாணமென்ற கடைசி பெயர் பவுத்தத்தையும் குறிப்பிட்டிருக்கின்றார்கள்.

மண்டல புருடன் சூடாமணி நிகண்டு பதினோராவது அதிகாரத்துள், சிவன், விஷ்ணு, பிரம்மன், ஜினன், புத்தன் என்று முற்கால தேவர்களை முறைபடி வகுத்து வைக்கப் பட்டிருக்கின்றது. முதற் குறித்த நான்கு தேவர்கள் சரித்திரங் களையும் அவர்கள் காலத்தில் வழங்கி வந்துள்ள நான்கு வகை பிராமணர்கள் நிலைமைகளையும் அப்பிராமணர்கள் என்னும் தேவர்கள் அடையும் மோக்கங்களையும் அப்பிராமண தேவர்களின் தொழுபவர்களாகிய பொய்ப்புலவர்கள் முதற் காட்டிய நான்கு மதப்பித்து தேவர்களோடு, பகவன் புத்தரையும் ஒரு மாயாரூபி என நம்பி சேர்த்துக்கொண்டிருப்பதையும் விவேகிசள் அவசியம் அறிய வேண்டும்.

** சூடாமணி 11-வது நிகண்டு**

**பகவனே யீசன் மாயோன் பங்கயன் ஜினனே புத்தன்**

என்று குறிப்பிடுவதால், பகவன் புத்தருக்கு முந்தி பிறந்த தேவர்களெல்லாம் நியாய ரஹிதர்களென்று சொல்லலாம் அவர்களுடைய மேரை மரியாதைக ளெல்லாம் புராண குப்பைகளில் தெள்ளி எடுக்கலாம். அவர்களுக்கு அணியப் பட்டுள்ள அலங்காரங்க ளெல்லாம் நம்மை வருத்தியதேயாகும். நம்மை ஒரு புழுக்கூட்டங்களாக நடத்தி யிருக்கின்றார்கள். தேவர்களென்ற பெரியார்களே முறையின்றி நடந்துள்ளார்கள். நன்றாகச் சொல்லவேண்டுமானால் மிருகத்தைவிட கேவலமாக இருந்தார்கள். நான்கு தேவர்களில் சிறந்து பிராமணன் என்று அழைக்கப்பெற்றவர் சிவன். இவருக்கு ஆபரணம் பாம்புகள். மேற்போர்வை யானைத்தோல், கீழுடை புலித்தோல், ஒரு கரத்தில் சூலம், ஒரு கரத்தில் உடுக்கை, ஒரு கரத்தில் அக்கினி பாத்திரம், ஒரு கரத்தில் மான், பூசுவது சாம்பல், ஏறுவது மாடு, வசிப்பது சுடுகாடு, புத்திர பேறு யானைக் குட்டி, நடக்கை நாவு கூச்சுகின்றது. ரூபம் கண்களை மூடிக்கொள்ளச் செய்கிறது. இத்தகைய தெய்வம் அல்லது தேவர்கள் தான் உலகத்தில் சிறந்தவர்களாம். இவர்களைக் காண்பதுதான் மோக்ஷ பாக்கிய மென்றும் நித்திய ரூபம் என்றும் எழுதப்பட்டிருக்கிறது. இவர்கள் பெயரால் தான் உபநயனம் பெற்று உயிர் உள்ள மட்டும் பூலோகதேவராகவும், உயிர் துறந்து வானுலக தேவர்களாகவும் மாறி விடுகிறார்களாம். உலகத்தில் ஜீவித்துள்ள மட்டும் பார்ப்பானென்பானுக்கு அவன் அடிமைகள் விலாப் புடைக்க

தானம் செய்ய வேண்டுமாம், பிராமணன் மரித்து விட்டால் அவன் பெயரால் ஆலயங்கள் கட்டிவைத்து அதில் ஒரு பிராமணனை பூஜாலியாக நியமித்து சாமிக்கு ஆராதனை என்று சொல்லி அவனிடம் எல்லாம் கொடுக்க வேண்டுமாம். எப்போதும் பிராமணன் வாங்கவும் அடிமைகள் கொடுக்கவுந் தான் விதியுள்ளதாம்.

இவ்விதமான மனிதன் ஜாதி பிராமணனா? அல்லது வேத பிராமணனா? என்று படிப்பவர்களே! நிதானித்துப் பாருங்கள். இந்த பிராமணர்களா லல்லவா? இராமன் ஒரு சூத்திரனை வெட்டினான். இந்த பிராமணனா லல்லவா ? பிரகலாதனன் தன் தந்தையை இழந்தான், இந்த பிராமணனாலல்லவா ? விபூஷணன் தன் சகோதரனுக்கு சூது விளைவித்தான். இந்த பிராமணர்களால் தற்காலம் இந்தியாபடும் பாட்டையாவது பார்த்ததில்லையா?

யாராவது ஒருவன் பிராமணனாகலாம். அவன் தன்னிற்றானே தோன்றும் சிற்றின்ப துற்செயல் விருத்தியால் தேசங்கெட்டு சதா துக்கத்தில் அழுந்தி அழிவுபடாமல் தன்னிற்றானே தோன்றும் பேரின்ப நற்செயல் விருத்தியால் உண்மையுணர்ந்து சதானந்தத்தில் லயிக்கின்றான். தானடைந்த நன்னிலையை ஏனைய மக்களுக்கூட்டி பகுத்தறிவை பெருக்கச் செய்கிறான். அவன் சதா குடிகளிடத்தில் அன்பு கொண்டிருக் கின்றான். தனக்கெட்டிய மூடக்கொள்கைகளையும் ஆபாச சாஸ்திர சாங்கியங்களையும்

அறுவெறுக்க அடிக்கடி போதிக் கின்றான். உலகம் சமதர்மத்தில் லயிக்க பாடுபடுகிறான். மக்களுக்கு ஒரு வெளிச்சமாக இருக்கின்றான். அன்பு, ஈகை, சாந்தம் மூன்றையும் பெருக்கி யதார்த்த பிராமணனாக உலகத்தில் வாழ்கின்றான். இவனே பகவன் புத்தர் கூறும் அறிவுரு பிராமணன். இப்பிராமணன்தான் இக்காலத்தில் நமக்குத் தேவை.

குடுமி, பூணு நூல், விபூதி அணிந்த பிராமணன் வேண்டாம். சமரசம், சன்மார்க்கம், நியாயவாதம். சகோதரத்வம் நிறைந்த பிராமணன் தான் இக்காலத்தில் நமக்குத் தேவை. முதற்குறித்த நான்கு தேவர்களும் அவர்களின் பிராமணர்களும், ஆதியிற் பிறந்தவர்கள் தான். பிறக்கும் போதே கூட இருந்தது காதுகளாகும். பிறகு உண்டானது கொம்புகள். காதுகளால் சண்டைச் செய்ய முடியுமா? அல்லது கொம்புகளால் வெற்றி யடைய முடியுமா என்பதை சொந்த புத்தியோடு கவனித்துப் பாருங்கள். பின்னே பிறந்த பவுத்தத்தின் வெற்றியும் அதின் நியாயமும் அதின் ஜனத்தொகையும் நூற்களில் வாசித்தறியுங் கள். அப்போதுங்கள் மனம் செம்மைப்பட்டு சாத்தியத்தை நாடி வாழ்வீர்கள். அதுவே நமது இந்தியா தேச சொந்த யதார்த்த தெய்வமாகிய பகவன் புத்தர் கூறும் யதார்த்த பிராமண நிலையாகும். அந்நிலையை அறிந்தவன் தான் சத்தியவந்தன். அவனே பகவன் புத்தர்கூறும் பிராமணன்.

** காக்கைப்பாடியம்**

ஆதிகாலத் தந்தண னறவோன்
போதி வேந்தன் புகன்ற மெஞ்ஞான
நீதி நெறியாம் வாய்மையி னின்றோர்
சோதி யுன்மைத் தொடருவ ரன்றோ.

என்று அறிவு மிகுந்தவனையே பிராமணனென்று நூற் கூறுவதால், அன்புடைய சகோதரர்களே பொய்மையை விலக்கி உண்மையில் அறிவை வளர்த்தி வாழ்ந்துவர சுதேச தெய்வசமதர்ம தூதர்கள் வேண்டுகின்றோம்.

# வேஷ பிராமண வேதாந்த விவரம்

வேஷ பிராமண

வேதாந்த விவரம்

திரு.க. அயோத்திதாஸ் பண்டிதர் எழுதியது.

ஸ்ரீ சித்தார்த்தா புத்தகசாலைப்

பிரசுரம்.

கோலார் தங்கவயல், ஆண்டர்சன்பேட்டை,

ஸ்ரீ சித்தார்த்தா அச்சுக்கூடத்தில் பதிப்பித்தது.

பு. 2475) [கி. 1932.

** History of the False Brahmin.**

** பிராமண மதமே படுகுழி.**

சகோதர ஐக்கியத்தைத் தடுப்பது பார்ப்பனர் மதம். இந்தியருக்குள் ஜாதியை புகுத்தியது பிராமணர் சூழ்ச்சி. இந்தியரைத் தாழ்த்தி தாங்கள் உயர்ந்தவர்களென்று படாடோபங் காட்டி வைத்தது ஆரியர் வேதம், சில நீச்ச வம்ஸத்தார்கள் இந்துக்களானார்களென்று எழுதி வைத்தது வேதியர் கர்வம். ஒரு பெரிய குலத்தினரைத் தங்களுள் சேர்த்துக் கொள்ளாமல் ஒதுக்கியிருப்பது பிராமணீய குருட்டுத்தனம்.

எல்லா இடங்களிலும் நேரங்களிலும், அவர்கள் உயர்ந்தவர்களென்று நாமஞ் சாற்றுவது வேதியர் மார்க்கம். ஜீவகாருண்யமற்று மனிதர்களை வதைப்பது இரு பிறப்பாளர் முறைமை. பெண்களைத் தலை எடுக்காமல் நசிப்பது பாரசீகர் கட்டளை. இந்தியாவில் கோவில்களைக் கட்டி அவைகள் மூலம் விபசாரம் உண்டாக்குவது பிர்ம மதம். கல்சாமியைக் கும்பிட லஞ்சம் வாங்குதல் பார்ப்பனர் கடமை. காணமுடியாத சாமியைக் கண்டு வந்தவர் போல் செய்து வைத்தது வேஷ பிராமணர் கொள்கை. மோக்ஷ கபாடத்திற்கு அதிபதிகளென்போர் வேஷ பிராமணர்கள். செத்தவர்களுக்கு தானியங் கொண்டு போகின்றோமென்று ஏமாற்றுகிறவர்கள் வேஷ பிராமணர்கள். இந்திய தேச நியாயவாதிகளாகிய பவுத்தர்களை கழுவிலேற்றிக் கொன்றது வேஷ பிராமணீயம். இந்தியர்களை வதைத்து பிராமணர்களை வளர்க்கச் செய்பவர் வேஷ பிராமணர்கள். கடவுள் பார்ப்பான் ரூபமாக வருவார் என்றுரைப்போர் வேஷபிராமணர்கள். நாங்களே இந்தியாவுக்கு தெய்வமென்போர் வேஷபிராமணர்கள். அவசியமற்ற வேதியர்களை இந்தியாவுக்கு வேண்டு மென்போர் வேஷ பிராமணர்களே! வேஷ பிராமணீயத்தாலேயே இந்திய மக்கள் நசுங்குண்டு வருகின்றார்கள். ஆகையால் பகுத்தறிவை வளர்த்திப் பாருங்கள்.

** முகவுரை**

ஆதிகாலத்திய யதார்த்த பிராமணர்களென்போர்களைப் பற்றி சொல்லிவைத்த சிற்சில விஷயங்களைச் செவ்வென தெளிந்தோர், இவ்வேஷ பிராமண வேதாந்த விவரத்தையும் பூரணமாக படித்தறிந்தாலன்றி உண்மைப் புலனாகாது. ஒவ்வொரு மதத்தோர்களும் பிராமணன் உண்டு. அவன் மூவகை மனிதர்களுக்குங் கடவுள். அவனை ஒருவருங் குறைக் கூறக்கூடாது அவனை ஒவ்வொருவரும் வணங்கி வழிபட வேண்டும். இல்லையேல் எரிநரகம் வாய்க்குமென்று பெரும்பாலும் பயமுறுத்தி வைத்துவிட்டார்கள். அதினாலேயே நாம் எந்த ஆராய்ச்சியிலிறங்கினாலும், இந்த பிராமண ஆராய்ச்சியில் கவனங்கொள்ளற் கில்லாமற் போய்விட்டது. அப்படியாக கொஞ்சம் நினைவிற்கு வந்தாலும், தெய்வ வம்ஸமாச்சுதே! பிராமணப்பழி நம்குலத்தை வேரறுத்து விடுமே! என்ற எண்ணமுந் தொடர்ந்து நிற்கின்றது. பாரசீக தேசத்தார்களாகிய ஆரிய வேஷபிராமணர்கள் உண்டாக்கிய பிராமணத்துவத்திற்கு ஆதாரமாக இருப்பது அவர்களது முழு மோசடி யென்பது வெளிப்படை, எப்படி எனின் குலமும், அதற்குமேல் வம்ஸமும், அதற்குமேல் ஜாதியும், அதற்குமேல் ஆசாரமும், அதற்கு மேல் பிராமணத்துவமுமாக கட்டப் பட்டிருக்கும் குருட்டு வழியே வேஷபிராமண வேதாந்த கோட்டைக்கு ஒரு பாதமாகும். மற்றும் சாங்கியம், சடங்கு, ஜோஷியம், எக்கியம், பஞ்ச பு முதலிய சாஸ்திரக் குப்பைகள் சேர்ந்த இதிகாசங்கள், புராணங்கள்,

ஸ்மிருதிகள், ஆகமங்கள், வேதங்கள், மோக்ஷம், நரகம், சதுர்பதவிகள், அம்மை, இம்மை, மறுமை ஆகிய ஜன்மங்கள், இன்னுமற்ற பொய்களும் திரண்டுருவாகிய மற்றொருபாதமும் இக்கோட்டைக்கு உண்டு.

இக்கோட்டைக்குள் நுழைந்து, நாங்கள் இந்துக்களென்றும், இக்கோட்டை நிழலில் ஒதுங்கி நாங்கள் இந்து ஆதிதிராவிடர்களென்றும் புகலும் வல்லவர்கள் கோட்டையின் நிலைமையைப் பற்றி சிறிதும் ஆராய்தற்கின்றி அதை சாஸ்வதமாக எண்ணி காலங்கழித்து வருகின்றார்கள். இவர்களில் சிலர் கோட்டைக் கட்டடத்திற்கு உள் நுழைந்து பார்த்து இதில் உறுதியில்லை என்று முஹமதியர்களாகவும், சிலர் கோட்டையின் வெளிப்புறத்தையே உற்று நோக்கி கிருஸ்துவர்களாகவும் மாறிவிட்டார்கள். இன்னமும் மாறிக்கொண்டும் வருகின்றார்கள். சிலரோ; இக்கோட்டைக்கு உள்ளும் வெளியுமாக இருந்து காவல் காத்து வருகின்றார்கள். இக்கோட்டையை ஆராய்வதற்கு இடங்கொடாமல் இருக்கின்றார்கள். கோட்டைக்கு சொந்தக் காரர்களாகிய பார்ப்பனர்களின் தேகம் வளையாமல் இருக்க இந்துக்கள் பூஜிக்கின்றார்கள். இவ்வித பூஜையை ஏற்று சுகஜீவியாக வாழ்ந்திருப்பவன் தான் பிராமணனாம். இந்த பிராமணனைத்தான் நாம் வேஷ பிராமணன் என்றும், அவனுடைய கோட்டையை வேஷ பிராமண வேதாந்த மென்றும் சொல்கிறோம். பிராமணன் என்போன் பிறரை வருத்தாமலும்

தன்னிற்றான் புத்தி தெளிதல் பெற்று, உலகோபகாரியாகவும், சகோதரத்வம் நிறைந்தவனாகவும், பஞ்சமா பாதகங்கள் அற்றவனாகவும், அன்பு ஈகை சாந்தம் என்னும் பீடத்தை ஆசனமாகக் கொண்டவனுமாக இருக்க வேண்டும். இவனையே சகல மக்களும் அணுகி நற்புத்தி கற்றுக் கொள்வார்கள்.

இவ்வித நற்கருத்துக்களின்றி ஒரு தேயத்தார்களை ஸூத்திரரென்றும், தாஸரென்றும், அடிமைக்குட்படுத்தி வைத்து, சதா இம்ஸிப்பது என்ன மரியாதையை உண்டாக்கும்? இந்தியரை பிராமணர், உண்மையில் வென்றாரா? பாரசீக ஆரியர் உண்மையில் பிராமணரா? ஆரியர் இந்திய நாட்டு பூர்வகுடிகளா? இல்லை, இவர்கள்தான் நம் மூதாதைகளை பூர்வகாலத்தில் ஏமாற்றி நம்மை கட்டு படுத்தி அடக்கி வைத்துவிட்டு தாங்கள் மாத்திரம் பார்ப்பார், பார்ப்பார் என்று சொல்லி உயர்ந்துவிட்டார்கள். இவ்வேஷ பிராமணர்கள் நமக்கிட்டுள்ள பெருவிலங்கை இந்நூலிலறிந்து, அதனையுடைத்து வெளிவந்து உலகோபகாரிகளாக நிற்க சுதேச தெய்வ தூதர்கள் வேண்டுகின்றோம்.

ஆண்டர்சன் பேட்டை,

ஆங்கீரஸ - ளூ மாசி - மீ

ஸ்ரீ சித்தார்த்தா புத்தகசாலையார்.

கோலார் தங்கவயல்

** வேஷபிராமண வேதாந்த விபரம்**

சகோதரர்களே! வேஷப் பிராமணன் என்றபோதே அவன் உண்மையான பிராமணன் அல்ல என்பது அதின் பொருளாம் என்பதுங்களுக்குத் தெரியும். அதாவது ஓர் தேயத்தைக் குடிபடையமைச்சுடன் ஆண்டு வரும் அரசனை மன்னனென்றும், இறைவனென்றுங் கொண்டாடி குடி படைகள் யாவும் அவனடைக்கலத்திலு மடங்கினிற்கும் அவனே யதார்த்த ராஜனாவன். ஓர் எளிய குடும்பத்தோன், அவ்வரசனைப்போல் நடையுடை பாவனைக் காட்டி, அரசனென்று சொல்லி நடிப்பானாயின், அவனை வேஷராஜனென்று கூறுவர்.
இலட்சம் பொன்னுக்கு மேற்பட்ட திரவிய முடையவளை இலட்சுமியென்றால் அவள் இலட்மியே யாவாள். உடுக்கக் கந்தையும் குடிக்கக் கூழுமில்லாதாள் இலட்சுமி யென்றழைக்கப் படுவாளே யாயின், அவள் நாமலட்சுமி யேயாவாள்.

அதுபோல் நீதியும், நெறியும், வாய்மையும், தண்மையு நிறைந்த ஒருவனை, மற்றும் விவேகிகள் பிராமண னென்றழைப் பார்களன்றி, அப்பிராமணன் தன்னைத்தானே பிராமண னென்று சொல்லித் திரியமாட்டான்.

பிராமணர் செயலோ, தன்னைப்போல் சருவ உயிர்களை யும் பாதுகாத்தலும், சாந்தகுண பெருக்கமுற்று சகல பற்றுகளு மற்று,

சமதர்ம நிலையில் நின்று சருவசீவர்களுக்கும் உபகாரியாக விளங்குவார்கள். இவர்களையே யதார்த்த பிராமணரென்று கூறப்படும்.

இந்நியாயர்களை மகடபாஷையில் பிம்மணரென்றும், சகடபாஷையில் பிராமணரென்றும், திராவிட பாஷையில் அந்தணரென்று மழைத்தார்கள்.

சேர்த்துக்கொள்ள வேண்டும். ஒரு க்ஷத்திரியன் முத்துசாமி யென்னும் பெயர் வைத்துக்கொண்டிருப்பானாயின், அவனை க்ஷத்திரியனென்று மற்றவரறிய முத்துசாமி வர்மா வென்னுந் தொடர்மொழியை சேர்த்துக்கொள்ளல் வேண்டும். ஒரு வைசியன் பொன்னுசாமி யென்னும் பெயரை வைத்துக் கொண்டிருப்பானாயின், அவனை வைசியனென்று மற்றவரறிய பொன்னுசாமி பூதியென்னுந் தொடர்மொழியைச் சேர்த்துக் கொள்ளல் வேண்டும். ஈதன்றி 44-ம் வசனத்தில் இவர்கள் வருணாசிரம விதிப்படி பிராமணன் பஞ்சு நூலினாலும் க்ஷத்திரியன் சணப்ப நூலினாலும், வைசியன் வெள்ளாட்டு மயிரினாலுந் திரித்த பூணூலணைதல் வேண்டும்.

(மநு) மாமிஷத்தின் விதிவிலக்கு 39-வது வசனம்.

பிராமணன் செய்யும் எக்கியத்திற்கே பசுக்களை பிரம்மா உண்டு செய்திருக்கின்றார்.

(மநு) அநத்தியயனம் 99-வது வசனம்.

சூத்திரன் சமீபத்திலிருக்கும் போது வேதத்தை வாசிக்கப் படாது.

(மநு) ஆகிதாக்கினி விஷயம் 79-ம் வசனம்

ஒரு பிராமணன் பதிதர், சண்டாளர், புழுக்கையர் வண்ணார், செம்படவர் இவர்களுடன் ஒரு மரத்தடியிலேனும் வாசஞ்செய்யப்படாது.

(மநு) சங்கரசாதியா னுற்பத்தி 4-ம் வசனம்.

பிராமணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன் என்னும் நான்கு வருணந்தவிர ஐந்தாவது வருணங்கிடையாது.

(மநு) உதாஹரணம் 122-ம் வசனம்.

ஒரு சூத்திரன் மோட்சம் வேண்டுமானாலும் பிராமண னையே தொழுது வரவேண்டும். ஜீவனம் வேண்டுமானாலும் பிராமணனையே தொழுதுக்கொண்டு வரவேண்டும்.

பராச ஸ்மிருதி முதலத்தியாயம் 22-ம் வசனம்.

எக்கியத்திற்காகப் பசுக்களைக் கொல்லலாம்.

பராச ஸ்மிருதி முதலத்தியாம் 177-ம் வசனம்.

பிராமணரென்றும் வேதியரென்றும் அழைக்கப் பெற்றோரைக் கடவுள் வேள்வி செய்வதற்கே படைத்தார்.

பராச ஸ்மிருதி ஆசாரகாண்ட ம், 164-ம் வசனம்.

எந்த பிராமணனாயினும் வேதத்தை யோதாமல் வேறு நூற்களைப் போதிக்கின்றானோ, அவன் சூத்திரனுக் கொப்பாவான்.
இத்தகைய மநுஸ்மிருதி கட்டளைகளையும் பராசஸ்மிருதி கட்டளைகளையுங் குறிக்க வேண்டிய காரணம் யாதென்பீரேல் : பவுத்த தன்ம சாஸ்திரிகள் ஏற்படுத்தியிருந்த தொழிற் பெயர்கள் யாவையும் மேல்ஜாதி கீழ்ஜாதி யென்றேற் படுத்தி, அவர்கள் சொல்லி வந்த பிராமணர்கள் செய்கைக்கு மாறுபாடு டையோரை வேஷப்பிராமணரென்று சொன்னோம். இக்கீழ் ஜாதி யென்னும் ஜாதிகளுக்காதாரமாக யேற்படுத்திக்கொண்ட மநுஸ்மிருதி, பராசஸ்மிருதி இவ்விரண்டிலும் வரைந்துள்ள படிக்கேனும் இவர்கள் வேஷப்பிராமணர்களா? அன்றேல் யதார்த்த பிராமணர்களா வென்பதை வாசகர்களே உணருங்கள்.

(மநு) பத்தாவது அத்தியாயம் 86, 87, 88, 89, 92.

பிராமணன் இரச வஸ்துக்கள், சமைத்த அன்னம், எள்ளு, செம்புக்கல், உப்பு, மனிதர், பசுக்கள், சிவந்த நூல், வஸ்திரம், சணப்பு, பட்டு, கம்பளம், பழம், கிழங்கு, மருந்து, ஜலம், ஆயுதம், விஷம், மாம்ஸம்,

கற்பூரம், வாசனா திரவியம், பால், தேன், தயிர், எண்ணெய், மது, வெல்லம், தருப்பை, யானை, குதிரை, சிங்கம், பட்சி, சாராயம், அவுரி, அரக்கு இவைகளில் ஒன்றையேனும் விற்கப்படாது.

அங்ஙனம் மாம்ஸம், அரக்கு, உப்பு விற்பவன் பதிதனாக மாறிவிடுவது மன்றி, பால் விற்பவன் மூன்று தினத்தில் சூத்திரனாகிவிடுகின்றான் என்று யேற்படுத்தியிருக்கும் இவர்கள் மநுதர்ம சாஸ்திரத்தின்படி யாவரேனும் நடப்பதுண்டா? இல்லை.

பிராமணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரனென்னும் நான்கு ஜாதிகளுக்குமேல் ஐந்தாவது ஜாதி வேறு கிடையாதென்று கூறியுள்ள சாஸ்திரத்துள் சங்கரஜாதி, அநுலோமஜாதி, பிரிதிலோமஜாதி, அபோகஜாதி, க்ஷத்தாஜாதி, உக்கிரஜாதி, வைதேகஜாதி, அந்தராளஜாதி, அபீர்ஜாதி, திக்குவணஜாதி, மாகதஜாதி, சூதஜாதி, புல்கசஜாதி, குக்குடஜாதி, வேணஜாதி, விராத்தியிஜாதி, வாடாதானஜாதி, புஷ்பதன்ஜாதி, சைகன்ஜாதி, நிச்சுவிஜாதி, நடனஜாதி, கரணன்ஜாதி, கஸன்ஜாதி, காரூ சஜாதி, விஜன்மாஜாதி, மைத்திரஜாதி, பாகியஜாதி, தகியுஜாதி, சையிந்திரியஜாதி, மைத்திரேயனஜாதி, மார்க்கவஜாதி, காருவாரஜாதி, வைதேகஜாதி, பாண்டு ஜாதி, சோபாகஜாதி, ஆகிண்டி ஜாதி, அந்தியாவஜாதி என்னும் முப்பத்தியேழு ஜாதிப் பெயர்களைக் குறித்திருக்கின்றார்கள்.

ஆயினும் பவுத்தர்கள் தொழில்களுக்கென்று வகுத்திருந்த பெயர்களே, தற்காலம் வழங்கி வருகிறதன்றி இந்நூதன மநு சாஸ்திரத்தில் ஏற்படுத்தியுள்ள மேற்கூறிய ஜாதிகள் ஏதேனுந் தற்காலம் வழங்கி வருகின்றதா? அதுவுமில்லை.

மநு ஸ்மிருதியினுள்ளும் பராசஸ்மிருதியினுள்ளும் பிராமணரென்றும் வேதியரென்றும் வழங்கும்படியானவர் களை, கடவுள் வேள்வி செய்வதற்கே உண்டு செய்தாராம். அங்ஙனம் வேள்வி செய்துவரும் பிராமணர்கள் தற்கால முண்டோ ? அதுவுமில்லை.

எந்த பிராமணன் வேதத்தை யோதாமல் வேறு நூல்களை யோதுகின்றானோ! அவனை சூத்திரனென்றழைக்கக் குறிப் பிட்டிருக்கின்றது. ஆதலின் வேதத்தை யோதிக் கொண்டிருக்கும் பிராமணர்களுண்டோ ? அதுவுமில்லை.

பிரமா பசுக்களை எக்கியத்திற்காகவே சிருட்டித்ததாகக் குறிப்பிட்டிருக்கின்றார்கள்.

அதன் ஆதரவைக்கொண்டு தற்கால பிராமணர்கள் பசுக்களைச் சுட்டுத் தின்றுவருகின்றார்களா? அதுவுமில்லை.

ஓர் சூத்திரனுக்கு மோட்சமாயினும், ஜீவனமாயினும் வேண்டுமானால், பிராமணனையே தொழுது வரவேண்டு மெனக்

குறிப்பிட்டிருக்கின்றது. அதுபோல் சூத்திரர்கள் பிராமணரையே தொழுது கொண்டு வருகின்றார்களா? அதுவுமில்லை.

பிராமணர்கள் செம்படவர்களுடன் ஓர் மரத்தடியி லேனும் வாசஞ்செய்யப்படாதென்று குறித்திருக்கின்றார்கள். அதுபோல் செம்படவர்களுக்கு அருகே வாசஞ்செய்யாம லிருக்கின்றார்களோ? அதுவுமில்லை.

சூத்திரன் அருகிலிருக்கும் போது வேதத்தை போதிக் கலாகாதென்று குறிப்பிட்டிருக்கின்றார்கள். அதுபோல் சூத்திரர்கள் அருகே வேதத்தைப் போதிக்காமலிருக்கின்றார் களோ? அதுவுமில்லை. பிராமணனுக்கு சர்மாவென்றும், க்ஷத்திரியனுக்கு வர்மாவென்றும், வைசியனுக்கு பூதியென்றும் அவரவர்கள் பெயர்களினீற்றில் இத்தொடர்மொழிகளை சேர்த்து வழங்கி வரவேண்டுமென்று ஏற்படுத்தியிருக்கின்றார்கள். அவ்வகை யேனும் பெரும்பாலும் வழங்கி வருகின்றனரோ? அதுவுமில்லை.

பிராமணனுக்கு பருத்தி நூலும், க்ஷத்திரியனுக்கு சணப்ப நூலும், வைசியனுக்கு வெள்ளாட்டு மயிரினால் திரித்த நூலும் அணிந்துக்கொள்ள வேண்டுமென்று குறித்திருக்கின்றார்கள். அது போல் க்ஷத்திரியர்கள் சணப்பநூலையும், வைசியர்கள் வெள்ளாட்டு மயிரையும் பூணூலாகவணிவு துண்டோ ? அதுவுமில்லை.

மநுதருமசாஸ்திரம் முதலத்தியாயம் 11-வது வசனம்.

87 வசனங்களில் பரமாத்துமா பிரம்மாவை சிருஷ்டித்தார். பிர்மா தன் முகத்திலிருந்து பிராமணரை சிருஷ்டித்தாரென்றும் வரைந்திருக்கின்றார்கள்.
பிர்மா முகத்திற் பிறந்தபடியால் பிராமணரென்று சொல்ல ஆதார மிருந்த போதினும், தற்கால பிறப்பு மாறுபட் டுள்ள துமன்றி, பிராமணத்தி பிறந்த வழியே தெரியாததினால், மனுசாஸ்திரத்தின்படி யதார்த்த பிராமணன் இல்லை யென்றே விளங்குகின்றதல்லவா? ஆம்.

தொழிற் பெயர் செயற்பெயர் யாவையும் ஜாதிகளாக ஏற்படுத்தி அதற்காதரவாக மதுசாஸ்திரமென்பதை நூதனமாக வேற்படுத்தி வகுத்துள்ளக் கட்டளைப்படிக்கு, செயலுந் தொழிலும் பொருந்தாம லகன்றுள்ளது கொண்டு, அவ்வாதரவாலும் யதார்த்த பிராமணரில்லை என்பது துணிபு.

விவேகமிகுதியாலும், ஞான மகத்துவத்தினாலும் புத்த பிரானை " ஆதிகாலத் தந்தணரென்று" காவியங்களிற் கூறியுள்ள வாறு, விவேக மிகுதியும், அன்பின் மிகுதியும், சாந்த மிகுதியு முற்று, சர்வ மக்களையுந் தன்னுயிர்போல் காத்து அரஹத்துக் களென்றும், பிராமணர்களென்றும் அந்தணர்க ளென்றும் பெயர்பெற்ற மகாஞானிகளாகும் மேன்மக்கள் ஒருவரேனு மிவ்விந்து தேசத்திலில்லையென்பது திண்ணம் திண்ணமேயாம்.

இவ்விடம் யாதார்த்த பிராமணரையும், வேஷப் பிராமணரையும், விசாரித்துணருங் காரணம் யாதென்பீரேல் : சகல ஜாதியோரிலுந் தங்களை உயர்ந்த ஜாதி பிராமணர் களென்று ஏற்படுத்திக்கொண்டு இத்தேச பூர்வ பவுத்த குடிகளை முன்னேறவிடாமல் புறங்கூறி பலவகைத் துன்பங்களைச் செய்து பதிகுலைத்ததுமன்றி, இவ்விடம் நூதனமாகக் குடியேறுகிறவர் களுக்கும் போதித்து அவர்களாலுமிழிவடையச் செய்கிற படியால் வேஷப் பிராமணர் எவ்வகையால் உயர்ந்த ஜாதிகளா யினரென்றும் பவுத்தர்கள் எவ்வகையால் தாழ்ந்தவர்களாயினரென்றும் விளக்கு வதற்கேயாம். தங்களுக்குத் தாங்களே பிராமணரென்று சொல்லித் திரிவோர்களை விசாரித்தோம். இனியவர்களின் வேதோற் பவங்களையும், அதன் பலன்களையும் விசாரிப்போமாக.

நான்கு வேதத்தின் பாயிரத்துள் கடவுள் பிரம்மாவுக்குப் போதித்து பிரம்மா முனிவருக்குப் போதித்ததாகக் கூறியிருக் கின்றது.

மநுதர்மசாஸ்திரம் முதலத்தியாயம் 23-வது வசனம்.

பிரம்மா அநாதியான வேதத்தை அக்கினி, வாயு, சூரியன் இம்மூவர்களிடத்தினின்று வெளிப்படுத்தியதாகக் கூறியிருக் கின்றது. மற்றோரிடத்தில் நாயின் வயிற்றிலும், நரியின் வயிற்றிலும், கழுதையின் வயிற்றிலும், பசுவின் வயிற்றிலும், தவளையின்

வயிற்றிலும் மனிதர்கள் பிறந்து வேதங்களை எழுதியதாக வரைந்திருக்கின்றது.

இருக்குவேதம் 2,3,3,4-வது வாக்கியங்கள்.

வேதங்களை சில ரிஷிகளும், சில அரசர்களும் எழுதிய தாகக் குறிப்பிட்டிருக்கிறது.

இந்நான்கு வகை வேதோற்பவத்தில் எவை மெய்யென் றும், எவை பொய்யென்று மேற்பது?

இத்தகைய வேதங்களை வாசிப்பதால் மனுக்கள் சீரடை வார்களா? சீர்கெடுவார்களா? வென்பதை யாலோசிப் போமாக.

யசுர்வேதம் 117- வது வசனம்

அதர்வணவேதம் 160 - வது வசனம்

எக்கியமாகிய நெருப்பிற் சுட்டுத்தின்பதற்கு ஆயிரம் பசுக்களை தாநஞ் செய்யவேண்டுமென்றும், தனக்கு சாத்துருவாக யார் தோன்றுகிறார்களோ அவர்கள் யாவரையும் அழிப்பதற்கு குசப்புல்லுக்கு மந்திரஞ் சொல்லப்பட்டிருக்கிறது.

இஃது அன்னியர்களையும், அன்னிய சீவப் பிராணிகளை யும் இம்சை செய்யலாமென்னுங் கொலைப்பாதக சீர்கேட்டின் முதற்படியேயாம்.

இருக்குவேதம் 20-வது வசனம்.

வசிஷ்டர் வருணன் வீட்டில் தானியந் திருடுவதற்குப் போனதினால் அவ்விடமிருந்த நாய் கடிக்க வரவும் அதைத் தூங்கும்படி மந்திரஞ் செய்திருக்கின்றார்.

இஃது அன்னியன் பொருளை அஞ்சாமற்றிருடலா மென்னும் சீர்கேட்டின் இரண்டாம் படியேயாம்.

இருக்கு வேதம் 24-வது வசனம்.

இயபனென்பவன் தன் புத்திரி யமுனாவென்பவளை கற்பழிக்க வெத்தனித்தபோது அவள் மதி கூறல்.

யஜூர்வேதம் 95-வது வசனம்.

முதல் மநு தன் புத்திரியை மணந்திருக்கின்றான். இவை அன்னியர் தாரங்களையும், முறைமையை மீறியும் ஆனந்தமாக யிச்சிக்கலாமென்னும் சீர்கேட்டின் மூன்றாம் படியேயாம்.

யசுர்வேதம் 72-வது வசனம்.

இருக்கு வேதம் 5-வது வசனம் இதர மனிதர்களும், விரங்கர் என்னும் அரசனுடைய ஐந்து பிள்ளைகளும் வேதத்தின் கிரந்தகர்தர்களா யிருந்ததாய் குறிப்பிட்டிருக்கின்றது. அதே யசுர்வேதம் 112-வது

வசனத்தில் இவ்வேதமெழுதியவர்களில் நரமநுஷியராகிய கிரந்தகர்த்தாக்களில்லையென்று கூறியிருக் கின்றது.

இஃது கண்ணைக் கேட்டால் மூக்கைக் காட்டுவதும், காதைக் கேட்டால் வாயைக் காட்டுவதுமாகி, சகலமுந் தேகந்தானே யென்பது போல சமயத்திற்குத் தக்க மாறு கோட்களால் வேறுபட பேசற்கு பொய்யாம் சீர்கேட்டின் நான்காம்படியேயாம்.

யஜூர்வேதம் 111 - வது வசனம்.

சோமபானஞ் சுராபானமென்னும் மயக்க வஸ்துக்களை யுண்டு செய்யும் பாகங்களையும் அதை யுட்கொள்ளும் பாகங்க ளையுங் கூறுகின்றது.

இஃது மனிதன் சுயபுத்தியிலிருக்குங் காலத்திலேயே அனந்த கேட்டுக்குள்ளாகி அவத்தைப்படுகின்றான். அவ்வகை யவத்தையுள்ளோன் தன்னை மயக்கத்தக்க மதுபானங்களை யருந்தி இன்னும் மயங்குங்கோளென்னும் சீர்கேட்டின் ஐந்தாம் படியேயாம்.

இத்தகைய கொலை களவு முதலிய பஞ்சபாதகங்களை தினே தினே செய்யினும் பாதகமில்லையாகும். வேதத்தின் நீதி போதத்தை விசாரித்தோம். இனி யிவ்வேதம் யாவரால் எக்காலத்தில் எவ்விடத்தில் தோன்றியதென்பதையும் விசாரிப் போமாக.

இருக்கு, எஜூர், சாமம், அதர்வணம் என்னுமின்னான்கு வேதங்களைச் சங்கராச்சாரியேனும் பூர்த்தியாக வைத்திருந்து, இன்ன கண் காட்சி சபையில் சேர்த்திருந்தாரென்னும் ஓர் சரித்திராதாரங் கிடையாது.

இந்நான்கு வேதங்களையும் இராமாநுஜாச்சாரியேனும் பூர்த்தியாக வைத்திருந்து, இன்ன கண்காட்சி சபையில் சேர்த்திருந்தாரென்னும் ஓர் சரித்திராதாரங் கிடையாது.

மாத்வாச்சாரியேனு மிவ்வேதங்கள் முழுவதும் வைத்திருந்து இன்ன மடத்திற் கிடைத்ததென்றேனும் ஓர் சரித்திரதாரமுங் கிடையாது.

இந்நான்கு வேதமும் இன்னின்ன வம்மிஷ வரிசை யோரால் இன்னின்ன மடங்களில் இருந்துள்ளதாகு மென்று, செப்பேடுகளேனுஞ் சிலாசாசனங்களேனும் ஏதொன்றுங் கிடையாது.

மற்றும், எவ்வகையால், யாவரால், எப்பாஷையில் வெளிவந்ததென் பீரேல் - பிரிட்டிஷ் துரைத்தனத்தார் இத்தேசத்தில் வந்து குடியேறிய சில காலங்களுக்குப் பின், சகல ஜாதியோருக்கும் நாங்களே பெரிய ஜாதிகளென்று சொல்லித் திரியுஞ் சில வேஷப்பிராமணர்களை, சில ஐரோப்பியர்கள் தருவித்து உங்களுக்கு வேதமுண்டா, அவற்றைப் பார்க்க வேண்டுமென்று கேட்டிருக்கின்றார்கள்.
அதினால் தற்காலமுள்ள வேதத்தின் அரைபாகத்தை அக்கினியைத்

தெய்வமாகத்தொழும் பாரீசு ஜாதியோருள் ஒருவராகிய தாராஷ்கோ வென்பவர் பாரீசு பாஷையில் கொண்டுவந்து கொடுத்திருக்கின்றார்.

இப்பாரீசு ஜாதியாரால் பாரீசு பாஷையில் தற்காலமுள்ள வேதத்தின் பாதிபாகம் முதலாவது வெளிவந்து கல்கத்தா கண்காட்சி சாலையில் வைக்கப்பட்டது.

இவ்வேதங்களிலுள்ளப் பெரும்பாகங்களையும் பாரீசு ஜாதியார் வேதமாகும் ஜின்டவிஸ்டாவென்னும் நூலிலுள்ள வைகளையும், ஒத்திட்டுப் பார்ப்போமாயின், இவர்கள் அக்கினியின் தொழுகைகளும் மந்திரங்களும் பிரமாணங்களும் பொருந்தக் காணலாம்.

பாரீசு ஜாதியார் என்னும் சொராஷ்டர் தர்ராஷ்கோ வென்பவரால் வந்த பாதி வேதக் கதைகளுடன் பவுத்த தருமச் சரித்திரங்களிற் சிலதையும் நீதிநெறி ஒழுக்கங்களிற் சிலதையும் வேஷப்பிராமணாள் கிரகித்து, கர்னல் போலிய ரவர்களிடத்திற் சிலரும் ஸர். ராபர்ட் சேம்பர்ஸ் அவர்களிடத்திற் சிலரும், ஜெனரல் மார்ட்டீன் அவர்களிடத்திற் சிலரும், ஸர் உல்லியம் ஜொன்ஸ் அவர்களிடத்திற் சிலரும், மிஸ்டர் கோல் புரூக் அவர்களிடத்திற் சிலருங் கொண்டு போய்க் கொடுக்க அத்துரை மக்கள் இவர்கள் கொடுத்த கையேட்டுப் பிரிதிகள் யாவையும் மொழிபெயர்த்து ஒன்று சேர்த்து அச்சிட்டுப் பெரும் புத்தக மாக்கி இந்துக்கள் வேதமென்று சொல்லும் படியான

ஓர் உருவமாக்கிவிட்டார்கள். அக்குப்பைக் கூளங்கள் தான் இக்காலத்தில் இந்துமத நூல்களாக இருக்கின்றன.

புத்ததர்ம வாக்கியங்களும் அதன் சரித்திரங்களும் அதில் எவ்வகையிற் சேர்ந்துள்ள தென்னில், புத்தபிரான் அரச மரத்தடியிலுட்கார்ந்து ஐந்திந்திரியங்களை வென்றபடியால் ஐயிந்திரரென்றும், இந்திரரென்றும் அவருக்கோர் பெயருண் டாயிற்று. அப்பெயரைக் காரணமில்லாமல் இவர்கள் நூதன வேதத்தில் சேர்த்துக்கொண்டிருக்கிறார்கள்.

புத்தபிரானாகும் இந்திரர், தேவர்களில் ஆதியாகத் தோன்றி, மற்ற மக்களுக்குந் தேவராகும் வழிகளை விளக்கி விவேகிகளாய் உலாவும்படிச் செய்தவராதலின் பவுத்த சரித்திரங்களில் அவரை வானவர்க் கரசனென்றும், வானவர் கோனென்றும் தேவேந்திரனென்றும், இராஜேந்திரனென்றும் வரைந்திருக்கின்றார்கள்.

வானவர்க்கரசன் இந்திரனென்றும் அவர் சரித்திரத் தையும் மற்றும் பவுத்த மார்க்க வரசர்களிற் சிலருடைய பெயர்களையும் அரஹத்துக்களுடைய பெயர்களையும் இவர்கள் நூதன வேதத்தில் வரைந்து வைத்திருக்கின்றார்கள். இன்னும் புத்த மார்க்கத்தைத் தழுவிய அனந்தம் பெயர்களையும் சரித்திரங் களையும் அதிற் காணலாம்.

சரித்திரக்காரர்கள் எழுதியுள்ள ஆதாரங்களின் படிக்கு கிறிஸ்து பிறப்பதற்கு அறுநூறு வருஷங்களுக்கு முன்பும் புத்தர் பிறந்த எழுநூறு வருஷங்களுக்குப் பின்பும் இந்தியாதேச முழுவதும் புத்தரது திவ்ய சரித்திரங்களும் அவருடைய சத்திய தருமங்களும் நிறைந்திருந்த தன்றி வேறு மதஸ்தர் வேதங்களேனும் மார்க்கங்களேனும், மதங்களேனும் முழு உருவுடன் இருந்த தென்னுஞ் சரித்திரங்களுஞ் சிலாசாசனங்களும் கிடையாது.

கிறிஸ்து பிறந்து எழுநூறு வருஷங்களுக்குப் பின்பு பிராமண மதந்தோன்றியுள்ள தென்றும் அதன் பின் திரிமூர்த்தி மதங்களாகும் விஷ்ணுமதம் சிவ மதங்கள் தோன்றியதென்னுஞ் சரித்திரதாரங்களுமுண்டு. அம்மதங்கள் புத்த மார்க்க சரித்திரங் களையுந் தன்மங்களையும் ஆதாரமாகக் கொண்டே தோன்றிய தென்னும் பாகுபாடுகளுமுண்டு.

இவ்வேஷ பிராமணர்கள் புத்தர் காலத்திலேயே இருந்ததாக, பிரமஜால, சூத்திர முதலிய பவுத்த நூற்கள் கூறுகிற தென்று நடிப்பார்கள். அது விசாரணையற்ற நடிப்பேயாகும். ஏனெனில் புத்தருக்கு பிறகு அவர் நூற்களில் பல ஒவ்வாத, அவர் கூறத்துணியாத, அவர் செய்யாத விஷயங்களும் நுழைந்திருக்கின்றன. அதோடல்லாமல், இந்துக்களும் பல கதைகளெழுதி எங்கள் மதத்தில், எங்கள் சாமி புத்தராக அவதாரஞ்

செய்தார். அந்த தர்மம் எங்கள் இந்து மதத்திலிருந்து வந்தது, எங்கள் மதத்திற்கு முந்தி வேறு மதங்கள் கிடையாது. இந்தியாவில் எந்த மதம் எப்போது உண்டானாலும் அது எங்கள் இந்து வேதத்திலிருந்து வந்ததேயாகும். என்று எப்படி எழுதி மெய்ப்படுத்திவிட்டார்களோ! அப்படிப் போலவே இப்பார்ப் பார்கள் பரதேசிகளாகையால், தாங்கள் இந்திரர் தேசத்திற்கு சுதந்திரமுடையவர்கள், எங்களில் சிலர் பவுத்த ரானார்கள் பூர்வ பிராமணர்கள்தான் என்று தங்களையும் தங்கள் மதத்தையும், புத்தருக்கு முற்படுத்திக் கொள்கின்றார் களன்றி வேறில்லை.

புத்தருக்கு முந்தி இந்து மதமென்ற பெயரோடு ஒரு பிராமண மதமாவது ஒரு திரிமூர்த்தி மதமாவது இந்தியாவில் இருந்தது கிடையாது. எல்லா பக்கங்களிலும் முறையும், மறையும், நெறியும், தானமும், ஞானமுமற்ற காட்டு மிராண்டிகளே இருந்தார்கள். இதனால் தான் பகவன் புத்தர், கொல்லாமை, கள்ளாமை, விபசாரஞ் செய்யாமை, பொய்யாமை, மதுவருந் தாமை முதலிய சீலங்களைக் கொடுத்து ரக்ஷித்தார். இதல்லாமல், “இருள் பரந்து கிடந்த மலர் கலியுகத்தில் விரிகதிர் செல்வன் தோன்றின னன்ன” என்றும் தெரிவிக்கின்றமையால் இந்து மதத்திலிருந்து புத்தர் பிறந்தார் என்ற உறுதி கிடையாது. அப்படி அவர் பிறந்திருந்தால் தனது மதத்தைவிட்டு வேறொரு புது மார்க்கத்தை ஏன் போதிக்கின்றார் ? அக்காலத்தில் இந்த இந்து மதமிருந்தால் இந்த மதத்தைப் பற்றி ஏன்

அவர் கண்டிக்க வில்லை? அல்லது இந்து மதத்தானென்றாவது, பிராமண மதத்தானென்றாவது, அவர் தன்னைக் காட்டிக்கொள்ளா காரணமென்ன? க்ஷத்திரிய ஒழுக்கத்தைப் பின்பற்றி பிராமணனை வந்தனை வழிபாடுகள் புரிந்து, தன் தேயத்தை பிராமண மத ராஜ்யமாக்காமல் தன்னைத் தான் தெரிந்து, சர்வ பந்தமற்று ஜாதி மதம் என்ற பேதா பேதங்களற்று சுய சமதர்ம போதகராக ஏன் விளங்கினார்? சிந்தித்துப்பாருங்கள். பகவான் லோகதர்மமான (புத்த தர்மம் இருந்த காலத்தில் உண்டான பிராமண மதம் பவுத்தர்களையும் அவர்கள் தெய்வம் நூல் முதலியவைகளையும் பெரிய கேடு செய்திருப்பது யாவருக்குந் தெரியும்) உண்மையை அறியுங்கள்

பின்னும் திருவள்ளுவநாயனாரின் காலத்திலேயே இவ்வேஷப்பிராமணர்க ளிருந்தார்களென்று கூறுவதற்கு கபிலரகவலென்னும் ஓர் கட்டுக்கதையை ஏற்படுத்தியிருக்கின் றார்கள். அஃது தோன்றிய வந்தரங்க மறியாதோர் அதனை மெய் சரித்திரமென்றும் படித்து வருகின்றார்கள். இவ்வகவல் தோன்றிய காரணம் யாதென்பீரேல், வேஷப் பிராமணர்களும் பறையர்களும் பூர்வகாலத்திலிருந்தவர் களென்று, தங்கட் பொய்யைப் பலப்படுத்துவதற்கேயாம். சீனதேச பவுத்தர்களும் சிங்கள தேச பவுத்தர்களும், பிரமதேச பவுத்தர்களும், இந்திர தேசம் வந்து இவ்விடமுள்ளவர்களிடம் புத்தரது சரித்திரங் களையும், அவர் தருமங்களையுங் கேட்டு எழுதிக்கொண்டு போவது

வழக்கமாயிருந்தது. அக்காலங்களி லிவ்விடங் குடி யேறி பவுத்த தருமங்களைப் பாழ்படுத்தி வேஷப் பிரமணத்தை விருத்தி செய்து வந்தக் கூட்டத்தார் சகட பாஷையிலிருந்த புத்ததன்மங்களுடன் புத்தபிரான் சில பிராமணர்கள் கோட் பாடுகளைக் கண்டித்து அவர்களை புத்ததர்மத்தில் சேர்த்துவிட்டது போல் எழுதி யனுப்பிவிட்டிருக்கின்றார்கள்.

அவ்வகையால் தங்களைத் தாழ்த்தி புத்தரை உயர்த்தி எழுதிக்கொடுக்கவேண்டியக் காரணம் யாதென்பீரேல், அவர்களைத் தாழ்த்துவதும் உயர்த்துவதும் பெரிதல்ல. இப் பிராமணரென்று சொல்லித்திரியும்படியான கூட்டத்தார் புத்தர்காலத்திலேயே இருந்தார்களென்னும் ஓர் ஆதாரம் நிலைத்துவிடு மாயின் அதைக்கொண்டே தங்களை யித்தேசப் பூர்வக் குடிகளென விளக்குவதற்கேயாம். ஆரியராகிய பார்ப்பார், புத்தருக்கு முந்தி குறிப்பான பிராமணர்களாக இருக்வில்லை. இக்கால வள்ளுவர்களைப்போன்ற காட்டு மனிதர்களை மிக புத்திமான்களென மதித்து வந்தார்கள். அம்மூடர்களால் எழுதிய விஷயங்களே இக்காலம் நூல்களில் காணக்கிடக்கின்றன. ஆதிகாலந்தொட்டு பறையறுண் டென்பது போன்று இதுவுமோர் பொய்யேயாகும்.

சிலர், உபநிடதங்களை வாசித்து புத்தர் தெளிந்திருக் கின்றாரென்று மாக்ஸ் முல்லர் கூறுகின்றாரே அதினால் இப்பிராமணமதம் முன்பே

யிருந்ததல்லவா வென்பாருமுண்டு.

இவ்வேதங்களுக்கும் உபநிடதங்களுக்கும் உரியவர் களாகிய வேஷப்பிராமணர்களறியாமல், மாக்ஸ் முல்லர் சொல்லுகிறார், நானுமவற்றைச் சொல்லுகிறேனென்பது, ஏனவாயன் கதையேயாகும். மாக்ஸ் முல்லர் அவர்களோ புத்தர்கால பாஷையையும், அவர் வகுத்துரைத்த மார்க்கத்தையும், அவரால் திருத்தஞ் செய்துள்ள பாஷைகளையும், பவுத்த சங்கத்தோர் உபநிடதங் களையும், அதனதன் காலவரைகளையுஞ் சீர்தூக்கிப் பாராமலும் தன்னிடங் கிடைத்துள்ள உபநிடதம் முந்தியதா, புத்ததர்மம் முந்தியதாவென்றுணராமலும் ஆதாரமற்ற அபிப்பிராய மளித்திருக்கின்றார். அவர் ஒருவர் அபிப்பிராயத்தைக் கொண்டு சரித்திரங்களையுஞ் செப்பேடுகளையுஞ் சிலாசாசனங்களையும் அவமதிக்கப் போமோ ஒருகாலுமாகா.

புத்த பிரானுக்கு முன்பு வேதங்களிருந்த தென்பதும், உபநிஷத்துக்களிருந்ததென்பதும் இந்திரர்தேசப் பூர்வ விசாரணையற்ற பொது அபிப்பிராயமாவதோடு அஸ்தி பாரமற்றக் கட்டிடமுமாகும்.

இந்நான்கு வேதங்களுந் திரண்டு புத்தக ரூபமாய் வெளிவருவதற்குக் காரணம் யாவரென்றும் எப்பாஷையிலிருந்து யாவரால் கொடுக்கப்பட்டதென்றும் எக்காலத்தில் தோன்றியதென்றும் அறிந்தோம்.

** கடவுள்**

இனியொருவன் அதை வாசிப்பதினாலும் அதைக் கேட்பதினாலும் யாது பயனடைந்து ஈடேறு வானென்பதையும் விசாரிப்போமாக.

இருக்கு வேதம் 13-ம் பக்கத்தில் அக்கினி, வாயு, சூரியனென்னு மூன்று கடவுளர்கள் உண்டென்று கூறி, அவற் றுள் யதார்த்தமாக ஒரே கடவுளாகிய மகாத்மா உண்டென்றும், அம்மகாத்மாவே சூரியனென்றுங் குறிப்பிட்டிருக்கின்றார்கள்.

இத்தகைய வேதத்தை ஒரு கடவுள் பிரமாவுக்குப் போதித்து பிரமா முனிவர்களுக்குப் போதித்து அவர்கள் தங்கள் சிஷியர்களுக்குப் போதித்ததாகக் கூறி அதே கடவுள் வேதங்களிலுள்ள சில பாகங்களை நேரில் முனிவருக்கே போதித்திருப்பதாகவே பாயிரத்தில் குறிப்பிட்டிருக்கின்றது.

இதைப் பின்பற்றிய வொருவன் கடவுளென்னும் வார்த்தையை நம்புகிறதா? பிரமாவை நம்புகிறதா? முநிவர்களை நம்புகிறதா? அக்கினியை நம்புகிறதா? வாயுவை நம்புகிறதா? சூரியனை நம்புகிறதா? சூரியனே மறு பெயர் கொண்ட மகாத்மாவை நம்புகிறதா? அன்றேல் அச்சூரியனைக் காலம் பார்த்து விழுங்கும் இராகுவென்னும் பாம்பை நம்புகிறதா வென்னும் விவரம் யாதும்

விளங்கவில்லை. இவற்றை யாரொருவர் நம்பி இன்ன சுகமடைந்துள்ளாரென்னும் ஆதாரமும் விளங்கவில்லை.

பிரமம் இத்தியாதி கடவுளர்களும் நீங்கலாக, யஜுர் வேதம் 120-வது பாகத்தில் பிரமத்தைத் தெளிவிக்க வேண்டுமென்று, புத்திரன் பிதாவைக் கேட்கின்றான். அதற்குப் பிதா சருவமும் பிரமமென்றார்.

121-வது பாகத்தில் புசிக்கும் புசிப்பு அல்லது தேகமே பிரமமென்றார்.
122-வது பாகத்தில் உயிர்ப்பாகிய பிராணனே பிரமமென்றார்.
123-வது பாகத்தில் அறிவே பிரமமென்றார்.
124-வது பாகத்தில் ஆனந்தமே பிரமமென்றார்.

இங்ஙனம் ஆனந்தமே பிரமம், அறிவே பிரமம், உயிர்ப்பே பிரமம், பிராணனே பிரமம், தேகமே பிரமம், உண்டியே பிரமமென்று கூறுவதானால், பிரமமென்னும் வார்த்தைக்கே பொருளற்று இன்ன வஸ்துவென்னும் நிலையற்று மிருக்கின்றது.

இவ்வகை நிலையற்ற பிரமத்தை வேதங் கூறுமாயின், மக்கள் எவ்வகையா லவற்றைப் பின்பற்றி யீடேறு வாரென்பதும் விளங்கவில்லை.
பிரமமென்னும் வார்த்தையின் பொருளும் அதன் தோற்றமும் அதினாலுண்டாகும் பயனும் நிலையற்றிருப்பதை விசாரித்தோம்.

** ஆத்துமா**

இனி சாமவேதம் 144வது பக்கத்தில் சருவபரிபூரண ஆத்து மக்கியானத்தை அசுவாதியென்னு மரசனிடஞ் சென்று விறகு கட்டையேந்திய மாணாக்கர்கள் கேட்க வாரம் பித்தார்கள் அவற்றுள். சாமவேதம் 146-வது பாகத்தில் வானத்தையே ஆத்துமாவென்று கூறியுள்ளார்கள்.

147-வது பாகத்தில் சூரியனையே ஆத்து மாவாக வரைந்திருக்கின்றார்கள்.

148-வது பாகத்தில் வாயுவையே ஆத்து மாவாகக் கூறியிருக்கின்றார்கள்.

149-வது பாகத்தில் ஆகாயப் பரமாணுவே ஆத்துமா வென்று கூறியிருக்கின்றார்கள்.

150-வது பாகத்தில் உதகமே ஆத்து மாவென்று குறித்திருக்கின்றார்கள்.

151-வது பாகத்தில் பிரிதிவியாகிய மண்ணே ஆத்துமா வென்று குறித்திருக்கின்றார்கள்.

இவ்வகையாக ஆத்துமாவென்னும் வார்த்தைக்குப் பொருளே ஏதுமற்று அதின் நிலையற்றுமிருப்பதால், ஒரு மனிதன் வானத்தையும்

மண்ணையும் காற்றையும் சூரியனையும் ஆத்துமமாக வெண்ணுவதால் என்ன பலனடைவானென்பதும் விளங்வில்லை.

இந்நான்கு வேதங்களில் கூறியுள்ள பிரமமின்னதென்றும் ஆத்துமா வின்னதென்றும் நிலையற்றிருப்பதை தெரிந்து கொண்டோம்.

** வேதாந்தம்.**

இத்தகைய பிரமத்தையும் ஆத்துமாவையும் அறியக் கூடிய வேத அந்தத்தையும் விசாரிப்போமாக.

அதர்வண வேதம் 165-வது பக்கத்தில் உபநிடதங்க ளென்பது வேதாந்த சாஸ்திரங்களெனக் குறிப்பிட்டிருக்கின்றது.

167-வது பக்கத்தில் வேதாந்த சாஸ்திரங்களெல்லாம் உபநிடதங்களின் பேரில் ஆதாரப்பட்டதென வரைந்திருக் கின்றது.

இவற்றினாதரவாலும், நான்கு வேதங்களிற் கூறியுள்ள மந்திரங்கள், பிரமாணங்கள், உபநிடதங்கள் என மூன்று பிரிவில் உபநிடதங்களைக் கடைபாகமாகக் கொண்டு வேத அந்தங்களென வகுத்துக்கொண்டார்கள்.

வேதம், வேத அந்தமெனும் இரு வகுப்பில், வேதத்திற் கூறியுள்ள பிரமமும், ஆத்துமமும் நிலையற்றிருப்பதை தெரிந்துக் கொண்டோம்.

** உபநிடதபிரமம்**

இனி வேத அந்தமாகும் உபநிடதங்களிற் கூறியுள்ள பிரமத்தையும் அதன் நிலையையும் அதன் பலனையும் விசாரிப் போமாக.

உபநிடதங்களில் 52 வகை யிருந்ததாக அதர்வண வேதத்திற் கூறியிருக்கத் தற்காலம் இருநூற்றிச் சில்லரை உபநிடதங்களுள்ளதாய் விளம்புகின்றனர். அத்தகைய விளம்பல் உளதாயினும் இலதாயினுமாகுக.

முண்டகோப உபநிஷத்து இரண்டாம் முண்டகம் முதலத்தியாயத்தில் ஜ்வலிக்கின்ற அக்கினியினின்று ஆயிரம் பக்கங்களில் பொரிகள் எப்படி யுண்டாகின்றனவோ அது போல் அழிவற்ற பிரமத்தினிடத்தின்று பல ஜீவாத்மாக் களுண்டாகி மறுபடியும் அதிலடங்குவாதாகக் குறிப்பிட்டிருக் கின்றது.

தலவகார் உபநிஷத்து இரண்டாவது காண்டம் 3, 4, 5-வது வாக்கியங்களில் பிரமத்தை அறியேனென்பவன் அறிவான். அறிவே னென்பவன் அறியான். பிரமந் தெரியுமென் பவர்களுக்குத் தெரியாது. தெரியாதென்பவர்களுக்குத் தெரியுமென்று கூறியிருக்கின்றது.

கடோபநிஷத்து நான்காவது வல்லி 11-வது வாக்கியத்தில் மனதினால் மாத்திரமே அப்பிரமத்தை எட்டக்கூடு மென்று குறிப்பிட்டிருக்கின்றது.

கேனோபநிஷத்து முதல் காண்டம் மூன்றாம் வாக்கிய முதல் எட்டாம் வாக்கியம் வரையில் அதைக் கண்ணாவது, வாக்காவது, மனமாவது எட்டுகிறதில்லை அதை நாம் அறியோம். அதை தெரிவிக்கும் வழியும் நமக்குத் தெரியாதென வகுத்திருக்கின்றது.

பிரஹதாரணிய உபநிஷத்துத் துவக்கத்தில் குதிரையையே பிரமம் என சிந்தித்தும் வர்ணித்துமிருக்கின்றது.

வாஜகாநேய உபநிஷத்து எட்டாவது வாக்கியத்தில் பிரமம் எவ்வித சரீரமுமற்றவர், ஒளி பொருந்தியவர், பாபமற்றவர் விவேகி, மனதையாள்பவரெனக் குறித்திருக்கின்றது.

முண்டகோபநிஷத்து இரண்டாவது முண்டகம் எட்டாவது வாக்கியத்தில் கண்களாலாவது, வாக்காலாவது மற்ற இந்திரியங்களாலாவது, தபசினாலாவது, கர்மத்தினாலாவது பிரமத்தை
கிரகிக்கப்படாதென்று குறித்திருக்கின்றது.

அதே உபநிஷத்து பத்தாவது வாக்கியத்தில் இப்பர மாத்துமா அணுவைப்போல் வெகு சிறியவனாகவும் மனதினால் அறியதக்கவனாயு மிருக்கிறானென்று கூறியிருக்கின்றது.

அதே உபநிஷத்து இரண்டாவது முண்டகம் இரண்டாவது அத்தியாயம் ஏழாவது வாக்கியத்தில் விவேக பரிபூரணனும்,

சர்வக்யானனும், பிரம புறமெங்கும் பரவி மகிமையுள்ளவனு மாகிய ஆத்மா
ஆகாசத்திலிருக்கின்றானென்றும் குறித்திருக் கின்றது.

சுவேதாசுவத உபநிஷத்து முதலத்தியாயம் மூன்றாம் வாக்கியத்தில் தியானத்தையும் யோகத்தையும் அனுசரித்தவர்கள் காலாத்துமாக்களோடமைந்த வேதாத்தும சக்தியைக் கண்டார் களென்று
குறித்திருக்கின்றது.

அதே அத்தியாயம் 13-வது வாக்கியத்தில் புருஷன் அந்தராத்துமாவாகி விரலளவுடைய ஜனங்களின் இருதயத்தி லிருக்கின்றானென்று குறித்திருக்கின்றது.

இவ்வகையுள்ள மற்றும் உபநிடதங்களை வரைய வேண்டுமானால் வீணேவாக்கியங்கள் வளருவதுமன்றி ஈதோர் பயித்தியக்காரன் பாட்டுகளென்றும் பரிகசிப்பார்கள்.

விசாரணைப் புருஷர்களே! வேஷப்பிராமணர்கள் வேதங்களிற் கூறியுள்ள பிரம விவரமும் ஆத்தும விவரமும் நிலையற்றிருப்பது போலவே, இவ்வேத அந்தமாகும் உப நிஷத்துக்கள் யாவும் ஒன்றுக்கொன்று அப்பிரமத்தின் நிலையையும், ஆத்தும நிலையையும் ஆதாரமின்றி கூறி பிள்ளைகள் விளையாட்டில்

கண்ணைக் கட்டியடிக்க ஆள்தெரியாது தடவி அவ்விடம் உள்ளவர்களின் பெயரை ஒவ்வொன்றாகச் சொல்லித் திரிவது போல் வேத அந்தங்களை வாசித்தும் விழலுக்கிரைத்த நீராய் விருதாவடைகின்றன

வேதத்திலுள்ள பொருளும் வேத அந்தத்திலுள்ள பொருளும் இன்னதென்று விளங்காதிருக்க சருவமும் விளங்கியவர்கள் போல் நடித்து வேதாந்த குருக்களென வெளி தோன்றியும் தருக்க சாஸ்திரம் பெருக்கக் கற்றுள்ளோம், நீங்களுமவற்றைக் கற்றுக் கொள்ளுங்கள், ஆனால் பிரமத்தின் பின்னும் முன்னும் எமக்குத் தெரியாது! ஆத்துமத்தின் அடியுமுடியும் எமக்குத் தெரியாது! நான் சொல்லுவதைக் கொண்டு நீங்கள் அறிந்து கொள்ளுங்கள். இன்னும் வருந்திக் கேட்பீர்களானால் பிரமம் எங்கும் நிறைந்திருக்கின்றது. ஆனால் பறையனிடத்தில் மட்டுமில்லையென்பது போல் அவனை தூரம் வைத்துப் பாடஞ் சொல்ல வேண்டியதென்பர்.

இத்தகைய வேஷ பிராமணர்கள் வேதாந்தத்தைப்பின் பற்றிய வேஷ வேதாந்திகளை விடுத்து, கண்டதைக் கண்ட வாறும் உள்ளதை உள்ளபடியு முரைக்கு மேன்மக்களைப் பின்பற்ற வேண்டுகின்றோம். "சாதி குலம் பிறப் பிறப்பு பந்தி முந்தி யருவுருவத் தன்மை நாமம்" ஆம், துவிதமற்ற அத்துவித விசாரணைப் புருஷரை நாடுங்கள். அவரன்பிலும் பற்றற்றச் செயலிலுங் கூடுங்கள். விவேகிளா

லோதியுள்ளக் கலை நூல்களைத் தேடுங்கள் சகல மக்களும் விருத்தி பெறக் கூடிய நீதிபோதங்களைப் பாடுங்கள்.

ஏனென் பீரேல், உலகத்தில் தோன்றியுள்ள மக்களுள் ஒரு விவேகமிகுத்தோன் தோன்றுவானாயின் உலகம் சீர்பெறுவது மன்றி மக்களும் அசத்திய தன்மங்களை விலக்கி சத்திய தன்மத்தைக் கைக்கொள்ளுவதால் சகல சுகமும் வாய்க்கு மென்பது சாத்தியம்.

யாங்கள் வேஷப் பிராமணர்களுமன்று வேஷ வேதாந் திகளுமன்றென வெளிவருவார்களாயின் மற்றுமுள்ள வேஷ வேதாந்தக் கற்பனா கதைகளைக் கொண்டு முற்றும் விளக்கக் காத்திருக்கின்றோம்.

** தெளிதல்**

உலக மடங்களிலும் உள்ள மத ஆசிரியர்கள் தங்கள் மத ஸ்தாபனங்களைத் தங்களால் கூடிய மட்டும் நுட்ப திட்பமாகவே சொல்லிவைத்திருக்கின்றார்கள். அந்நூற்களைச் சாமானிய மனிதர்கள் படித்தோ, கேட்டோவிட்டால் உடனே அவர்களைப் பின்பற்ற தடையொன்றுமிராது. ஏனெனில் முற்கால மனிதர்கள் தங்கள் மூளையைச் செலவிட்டு எழுதிய பொய்க்கதைகள், இக்கால மக்களுடைய மூளையைத் தகனம் பண்ணுகின்றது. அதனால் அறிவு சாம்பலாகின்றது. ஆராய்ச்சி என்னும் பவுத்தத்திற்கு

தடையுண்டாக்குகின்றது. சுய சமதர்ம பாட்டைக்கு முள்ளிட்டு அடைக்கின்றது. தேச தெய்வமென்னும் விளக்கை அணைத்து விடுகின்றது. கல்வி, கைத்தொழில், மருத்துவம் முதலிய அபிவிர்த்தியை வேரோடு பிடுங்கி எறிகின்றது. இது பிரத்தியக்ஷம்.

மனிதருடைய மூளைப் பழுதுபட்ட பின்பு அவர்கள் எதையும் ஆராய்ச்சிச் செய்ய முடியாது. முதலில் மதஸ்தா பகர்கள் சொல்லிவைத்த மத பித்தில் மூழ்கி பாபத்திற்கு ஒரு கடவுள், புண்யத்திற்கு ஒரு கடவுள், மோக்ஷத்திற்கு ஒரு கடவுள், நரகத்திற்கு ஒரு கடவுள், கண்களுக்கு தெரிய ஒரு கடவுள், தெரியாதிருக்க ஒரு கடவுள், சுருங்கச் சொல்லின், காற்று, மழை, கடல், பூமி முதலிய வஸ்துக்களும் கடவுளென்று ஏற்படுத்தி விட்டு அவர்களுடைய சந்ததிகள், வம்சங்கள் குலங்கள் ஜாதிகள், நாங்களே என்றும், எங்கள் மூலமே நீங்கள் சர்வ கைங்கர்யங்களும் செய்யவேண்டும், உங்களுடைய சுகபோகங் களுக்காகவே எங்களை பிர்மா பூமியில் படைத்து தரகு வேலைச் செய்ய, ஆக்ஞாபித்து, பஞ்சாங்கப் புத்தகத்தைக் கையில் கொடுத்து வைத்துள்ளார், என்று நமக்குச் சொக்குபொடி போட்டு விட்டார்கள் - போட்டு வருகின்றார்கள்.

இங்ஙனங் கூறித்திரியும் கட்டுக்கதைகளுள், தங்களை ஆதி மனிதரென்றும், பூமியில் தங்களுக்குயர்ந்தவர்களொரு வருமில்லை, நாங்களே பூதேவர்கள் என்றும், நெடுநாளாக பொய் சொல்லி ஜீவித்து

வந்திருக்கின்றார்கள். இவர்கள் தங்களை பிராமணர்களென்று சொல்லிக்கொள்ள கடமைப்பட் டிருக்கின்றார்களே அன்றி பிராமணர்கள் ஒழுக்கம் இன்னது, அதன்படி நான் நடந்து வருகிறவன், அல்லது எவன் அவ்விதம் நடக்கின்றானோ அவனும் பிராமணனே யாகுவான், எவன் நடவாமலிருக்கின்றானோ அவன் மெய்யாகவே நீச்சனாவா னென்று, வெளிவந்து சொல்லி பூர்வ பிராமணத்துவத்தை நிலைநாட்டக் காண்கிலோம்.

முற்காலத்தில் யாரோ சிலர் பிரமாவின் முகத்தில் பிறந்து வளர்ந்துவரும் கூட்டத்தார்கள் இவர்களே என்று குறித்து வைத்திருந்தாலுஞ் சரியே, அல்லது இன்னின்ன நூல் (வேதங்களைக் கையில் வைத்திருப்பவன், படித்துப் பார்ப்பவன், கேழ்கப்படிப்போன் பிராமணன் என்று குறித்து வைத்திருந் தாலுஞ் சரியே, அக்கூட்டங்களில் யாதார்த்த பிராமணன் இருந்தாலும் சரி, வேஷ பிராமணன் இருந்தாலும் சரி, இவ்விருவகை பிராமணர்கள் பிரபஞ்சத்தில் ஜீவித்திருந்தால் உலகிற்கு என்ன பலன் உண்டாகப்போகின்றது? எந்த எளிய குடும்பங்கள் சீர்திருத்தமும் செல்வச்செருக்கு மடையப் போகின்றது? அதொன்றும் முடியாது. இப்படியிருக்க, மெய்யான பார்ப்பான் இருக்கிறான், பொய்யான பார்ப்பான் இருக்கிறான் என்று சொல்வோமே யாமாயின் அவ்விருவகைப் பார்ப்பார்களும் தற்காலமுள்ள பிராமணர்

கூட்டத்தில் தானிருக்கின்றார்கள். அக்கூட்டத்தில் ஒருவனை ஏற்றும் மற்றொரு வனைத் தூற்றியும் வருகின்றோம் என்றதாயிற்று.

ஆனாலும் நம்மவர்கள் பிராமணம் என்றால் என்ன? அதின் உற்பவம் எது? நமக்கு பிராமணம் என்னத்திற்கு ஆடும் பைத்தியர்கள் பிராமணத்தைப் பூஜிக்குங் காரணம் என்ன? பிராமணன் முகத்தில் யோனி இருக்குமா? முகத்தில் பிறந்தவன் பிரமாவாகுவானா? பிராமணன் (பிரமா) விந்துக்குப் பிறந்த வனுக்கு என்ன பெயர் வழங்கல் வேண்டும்? என்ற ஆராய்ச் சியில் இறங்கினோமில்லை. எவனாவது நான் பிராமணனென்றால், பிராமண பீஜாய நம என்று கும்பிடு போடத்தான் கற்றுக் கொண்டிருக்கின்றோம். இங்ஙனம் நாம் கும்பிட்டெழ நமக்கு நமது தேசத்தில் பிராமணன் தேவை என்றால் அது எந்த நீதி ஸ்லத்தில் ஏற்றுக்கொள்ளப்படும்? ஒரு தாய்க்குப் பிறந்த நான்கு குமாரர்களில் மூத்தவனுக்கு, சர்வ சுதந்தரமுண்டு. அவனை நாடோறும் மற்ற மூன்று சகோதரர்களும் கும்பிட்டு வழிபட வேண்டும். மூவர் சம்பாத்தியங்களையும் மூத்தவன் ஒருவனே அனுபவிக்க வேண்டும் என்று இந்த அகில உலகத்தில் எந்த மதத்திலாவது, ஜாதியிலாவது, தேசத்திலாவது, நீதிமன்றத்திலாவது புத்திமான்கள் ஒப்புக் கொள்வார்களா? இல்லை இளையவன் உஜ்ஜீவிக்க மூத்தவன் அன்னாகாரம் உட்கொள்ள வேண்டுமென்று நாம் சொன்னால், இதைக் கேட்டு சிரிக்காதவர்கள் உலகத்தில்

யாராவது இருப்பார்களா? அப்படி யிருந்தால் அவர்களை நாம் மிருகத்துடன் சேர்க்கமாட்டோமா? யோசித்துப் பாருங்கள்.

இக்காலத்தில் நமக்கு வேண்டுவது நல்ல அறிவு, நல்ல கைத்தொழில், நல்ல நாகரீகம், நல்ல நடக்கை, நல்ல சகோதரத்துவம், நல்ல கல்வி, நல்ல ஜீவனம் முதலியவை களேயாகும். இவைகளை விடுத்து மனிதரில் பிராமணன் இருக்கின்றான் என்றால், அவனுக்கிருப்பது, உடல் அடையாளமா? பாஷையடையாளமா? அப்படிக் கொன்றும் நிர்ணயித்து வைத்திருக்கவில்லை ஆதல் பற்றி இக்காலத்தில் பிராமணனே தேவையில்லை. எல்லாரும் பிராமணர்தான். எல்லாரும் சூத்திரர்தான் என்று வாழ்தலே மேலாகும் சிறிது காலங்களுக்கு முன்னர், பவுத்தத்திலும் பிராமணர்கள் இருந்ததாக பல கதைகள் எழுதி காட்டுவார்கள் அது உண்மையில் ஏற்றுக் கொள்ளப்படாததே பிராமணத்திற்கும் பவுத்தத்திற்கும், சம்பந்தமே கிடையாது. பவுத்தம் உலக சீர்திருத்த தர்மமாகும். அதற்கு ஜாதி, மதம், வேதம், ஆசாரம் முதலியன கிடையாது. ஆரிய வேஷ பிராமணர்களே தங்கள் ஜீவன விர்த்திக்காகப் படைத்து கொண்ட பொய்க் கடவுளர்களையும், மதங்களையும் பவுத்தத்தோடு சேர்த்து புத்தரும் எங்கள் தெய்வமென்று சொல்லி இந்தியாவைக் கெடுத்துவிட்டார்கள். இந்து மதமே பிராமண மதம்.

ஆனால், நம்மை நெடு நாளாக ஏமாற்றி வருகிற பிராமண கொள்கை, மிகத் தந்திரமானது. அதின் லக்ஷணமோ நம்மைக் கவரும் மந்திரத்தால் கட்டப்பட்டுள்ளது. அது இருண்ட இந்தியா என்னும் பெரிய மரமாகும் அம்மரத்திற்கு கடவுள் மதம் வேதம் ஜாதி என்ற நான்கு கிளைகள் உண்டு. அக்கிளை நடுவில் இந்து என்னும் கூடு கட்டியுள்ளது. அக்கூட்டில் மும்மூர்த்தி மதமென் னும் கல் முட்டை இட்டு, அதைப் பார்ப்பார் என்னும் கழுகு அடைக்காத்துள்ளது. தனது கல்முட்டையை பொன் முட்டை என்று சொல்லி இந்திய மக்களின் மதியை மயக்கி வருதலைக் கண்ணிற் கண்டும், காதாற் கேட்டும், மனதிலுணர்ந்தும், கவலையற்றிருக்கின்றோம். ஆராய்ச்சி என்னும், கல்லெறிந்து கழுகைத் துரத்தாமலும், சுயசமதர்ம மென்னும் வாள் கொண்டு மரத்தை வெட்டி கூட்டை வீழ்த்தாமலும், பவுத்தம் என்னும் சஞ்சீவியை அக்கன் முட்டை மேல் பிரயோகித்து முட்டையை உடைத்து உண்மை அறிதற்கின்றி, மவுனஞ் சாதித்து சாகின் றோம். இவ்வித ஞாய விரிவை எடுத்துரைக்கும் பவுத்தர்களை நிந்திப்பதல்லாமல் சிந்திப்பதில்லை. பிராமணர் அல்லாதவர் களால் எழுதப்பட்டுள்ள பிராமணத்துவத்தைத்தான் யாதார்த்த பிராமண வேதாந்த விவர மென்று நாம் சொல்கின்றோம். பிராமண மதத்தார்களே எழுதி வைத்துள்ள பிராமணத்துவத்தை, வேஷ பிராமண வேதாந்த விவரமென்று இழிவுபடுத்து கின்றோம். காரணமோ மேற்கூறிய இருவகை பிராமணத்துவத் திற்கும்

அப்புறப்பட்டவர்களாக, இக்கால பிராமண ஜாதிகள் உயிருடனிருக்கின்றன.

இப்படியாக நம் நாட்டு பிராமணன் நிலையை நாம் கூற வேண்டிய காரணமென்னவெனில், இக்காலத்தி லிருப்பவர்கள் அந்தணர்களாயின், இவர்களுடைய ஒழுக்கத்தை நாம் நேரில் கண்டுள்ளோம். இவர்களது ஆதிகால நிலமை இன்னதென்று நாம் ஆராய்வதில்லை, ஆதிகால அந்தணனுக் கொப்பானவனே இக்கால அந்தணனென்று நாம் சத்தியம் சொல்கின்றோம். இவனுக்காக சண்டைப் பிடிக்கின்றோம். இவனுக்காக நம் சகோதரர்களை இம்சிக்கின்றோம். இதனால் பிராமண நிலையை அறிந்தோதுகின்றோமில்லை.

தன்னிற்றானே தோன்றும் சிற்றின்ப துற்செயல் விருத்தியால், தேகங்கெட்டு சதா துக்கத்திலாழ்வது போல், தன் அறிவு வளர்ச்சியால் தோன்றும், பேரின்ப நற்செயல் விருத்தியாம் உண்மை யுணர்ந்து, உலக போதகனாகவும், உலக நீதிமானாகவும், உலக ஒளியாகவும், சமதர்மத்திலும், சாத்தியதர் மத்திலும் நிலைப்பதியல்பு. இவனே உலக மர்மத்திலிருந்து சித்தி பெற்றோன். ஆதலால் தான் கீழ் உலகம், மேலுலகம், மோக்ஷம், நரகம், கடவுள், பேய் என்று பொய் சொல்லாமல் உண்மைப் பேசுகிறவனெவனோ. அவனே அந்தணனென்று சொல்லிவைத்தார்கள்.

** காக்கைப்பாடியம்.**

ஆதி காலத் தந்தண னறவோன்
போதி வேந்தன் புகன்ற மெய்ஞ்ஞான
நீதி நெறியாம் வாய்மையினின்றோர்
சோதி யுண்மைத் தொடருவ ரன்றே.

இவ்வித அந்தணனை நாம் இக்காலத்தில் காண்பதரி தாகையால், உண்மையில் அறிவை வளர்த்தி, இந்நூல் முற்றும் வாசித்து பகவான் புத்தர் போதித்த சுயசமதர்மபோதகத்தைக் கைப்பற்ற மனந்திரும்பும்படி சுதேச தெய்வ தூதர்கள் வேண்டு கின்றோம்.

முற்றும்.

# கபாலீஸன் சரித்திர ஆராய்ச்சி

சி. பு.சா. பிரசுரம். 17

கபாலீஸன் சரித்திர ஆராய்ச்சி

ஆசிரியர். க. அயோத்திதாஸ் பண்டிதர்

மூன்றாம் பதிப்பு

ஸ்ரீ சித்தார்த்தா புத்தகசாலை பிரசுரம்

கோலார் தங்கவயல், ஆண்டர்சன்பேட்டை

ஸ்ரீ சித்தார்த்தர் பிரஸில் பதிக்கப்பட்டது.

The Inquiry of The Scull Bearer's Story

** முகவுரை**

பாரம்பரியமான பழக்கங்களில் கவனஞ் செலுத்தி, புத்திக்கும், ஞாயத்திற்கும் விரோதமான நம்பிக்கை வைத்து, கடவுள், மதம், வேதம், ஜாதி, ஆசாரம் என்ற ஐந்திழை முருக்கேறிய கயிற்றில் பிணிக்கப்பட்டு, மனிதனை, மனிதன் தாழ்ந்தவன் உயர்ந்தவன் என்ற மூட ரூபகாரஞ்செய்து, மரண காலமட்டும், பிறத்தியானுக்கே அடிமைப்பட்டு, அவனால் எழுதி வைக்கப்பட்ட பொய் நூற்களில் புரண்டு, அவனை தெய்வமென்று புகழ்ந்தும், இந்தியரை அவனுக்

கடிமை என்று இகழ்ந்தும் வருவது ஒரு சார்பான இந்திய மக்களுக்கு இயல்பாகும். “மாற்றானுக்கிடங்கொடேல்’ என்ற வசனம் கவனத்திற்கு வராமல் மூளையைப் பொய்மைக் காவல் காக்கின்றது. அக்காவலான பொய்மையே பிராமணமாகும். அப்பிராமண மூட பழக்க பண்டிகையை வணங்கி வருவதோடு, அது எங்களுடையதென்று பொய் சத்தியஞ் செய்ய வைக்கின்றது.அந்த சத்தியத்தைத் திறந்து காட்டுதல் குற்றமாகாது. ’’குற்றம் பார்க்கின் சுற்றமில்லை” என்ற பெரியோர் வாய் மொழிப்படியே! “பிரமன் தலை சிவன் கையில் ஒட்டிக்கொண்டதே கபாலீஸன் கதை” என்று குற்றமாகக் கூறும்; நம் இந்து சகோதரர்களுக்கு அவர்களுடைய குற்றங்களொழிய இந்த கபாலீஸன் கதை ஆராய்ச்சியைப் புகல்கின்றோம். அன்பார்ந்த சகோதர சகோதரிகள் இச் சரித்திரங்களைச் சீர்தூக்கிப் பார்த்து எது யதார்த்தமோ அதை கையாள கேட்டுக்கொள்கின்றோம்.

2475 ஆங்கீரஸஹ புரட்டாசி மீ

ஸ்ரீ சித்தார்த்தா புத்தக சாலையார்.

## அத்தியாயம் 1

ஆசிரியர் : க. அயோத்திதாஸ பண்டிதர்

** மயிலை குப்புலிங்க நாயனார் கூறும், காபோலீஸன் விபரம்.**

சென்னையைச் சார்ந்த திருமயிலை என்னும் நாட்டில் வள்ளுவர்கள் சாக்கையர்கள் என்ற வம்ஸ வரிசையோர்கள் விசேஷமாகக் குடியிருந்தார்கள்.

** சேந்தன் - திவாகரம் மக்கட்பெயர்**

வள்ளுவர் சாக்கையரெனும் பெயர் மன்னர்க்
குள்படுங் கருமத் தலைவர்க் கொக்கும்

** சூடாமணி நிகண்டு**

வருநிமித் தகன் பேர் சாக்கை
வள்ளுவ னென்றுமாகும்.

அவர்களுக்குள் கொன்றை ராஜன் என்றோர் சிற்றரசன், அந்நாட்டை ஆண்டு வந்தான். அந்நாட்டு பெயர் விளங்க அல்லமா வென்னும் பிரபுவால் ஒர் மடங்கட்டி அதனுள் சயன சிலை ஸ்தாபிக்கப்பட்டது.
திருக்கலம்பகம், கட்டளைக் கலித்துறை
உரையோம் பயன்செய்வ தற்கென்று வைத்தற் மோதும் வஞ்சத்
துரையோ டுறாத சுகர்கண் டீர்பொங்கு தூங்கொலிநீர்
திரையோ டுருண்பெழு சங்கஞ் சொரிந்த செழுந்தரள
நிறையோ டுறங்குநீ துறைமயிலா புரிநின்றவரே.
வருடந்தோறும் மாசி மாத பவுர்ணமி இரவு முற்றும் கண்விழித்து அரசனே துறவு பூண்டு, பிச்சை யாண்டியாய் இரந்துண்டார் என்ற

சரித்திரத்தைப் படித்துக்காட்டி, அடுத்த நாள், அரசனே கரபோல மேந்தி இரக்கவரும் பாவனையாகவும், (அவருடன் அறுபத்தி மூன்று நாயன்மார்கள் இருப்பதாகவும்) உற்சவங் கொண்டாடி வந்தார்கள். அது இக்காலமும் வழங்கி வருகின்றன.

** ஜீவகசிந்தாமணி 2920 செய்.**

மாசித் திங்கண் மாசின முன்னம் மடிவெய்த
ஊசித் துன்னா மூசிய வாடையுடையாகப்
பேசிப் பாவாய் பின்னு மிருகை அகலேந்தக்
கூசிக் கூசி நிற்பர் கொடுத்துண்டறியாதார்.

கபால மென்ற பதம் கபோல மெனவும் கபோலீஸ னெனவும் வழங்கப்பட்டது. திரு மயிலாபுரி மடம் அல்ல மாபிரபு மடமெனவும் குழந்தைவேற்பரதேசி மடமெனவும் பெயர் பெறும்.
இங்ஙனம் வருடந்தோறும் நிறைவேறி வரும், கபோலீஸன் உத்ஸவத் தைக்காண, சுரமை நாட்டின் தலைநகரமாகிய போதனம் என்னுங் கார்வெட்டி நகரத்து அரசனாகிய, கிரீட்டன் என்னும் மணிவண்ணன், தனது மனைவி பூம்பாவையுடன் விஜயமாகியிருந்தான். பூம்பாவை நந்தவனத்தி லுலாவும் போது நாகங்கடித்து மரணமடைந்தாள். அக்கால் வள்ளுவர்கள் குவிந்து துக்கங்கொண்டாடினார்கள். இதை அவ்வருட கபோலீசன் துதியில் பூம்பாவையை அரவந்தீண்ட அவள் மரணமடைந்தாள் என்று பாடி வைத்துள்ளார்கள்.

** சாக்கையர்கள் பாடிய கரபோலீஸன் பஞ்சரத்ந தியானம்.**

ஜகதல மெலாம்புகழ் சாக்கையர்க் கொண்டாடும்
        சக்ரவர்த்தித்திரு மகன்
ததாகதத் துறவையித் தரணியோர் கூர்ந்தினி
        சாற்றவு மெளி தாகுமோ
மகவென வுதித்துமக ராஜநிலையேற்றுவடி
        வழகுநிறை யிந்தி ராணியும்
வளர்தோழி மேனகை யூர்வசி திலோர்தமை
        யரம்பையொடு மகவிடுத்து
சுகசயன வாடைசுக போஜன மகற்றிமதி
        துய்யமா சிப் பூரணை
துறவுண்டு மும்மதில் கடந்து பரி யேறியே
        சுத்தகா னக முறைந்து
ககனமருள் கரபோலை யேந்திபிச் சாண்டியாய்
        கருணையோ ருரு கொண்ட வெங்
கனகேச னருள்வாச கமலாச னன்கழற்
        காட்சியைக் கருதுவாமே.

(1)

பண்டைகா லத்திலித் துறவுநிலை பாராது
        பற்றுளோர் கோவிந்த மாய

பற்றற்ற பெருமையைப் பார்த்து மெய் சோரவும்
பாலன் வாலறிஞ னெனவும்
எண்டிசையிற் காணாத யேகனிவ னென்னவும்
எம் பெரிய வாண்டவனென்றும்
எதிராஜ நிலைகடந் தொழியநிலை கண்டோர்க
ளெண்குணத் தோனென்னவும்
தொண்டர்கட் சங்கமது தோற்றுதற் காதார
தோன்ற லுண் மையிவ னெனவும்
சுருதிநிலை யோதிசுக மீயந்தபர னென்னவும்
தொண்டர் சூழாங்கள் சூழ
கண்டவர் காட்சியநு பவமுரைத் தாண்டுகர
போலேந்தி பிச்சை யுண்ட
கனகேச னருள்வாச கமலாச னன்கழற்
காட்சியைக் கருது வாமே.

(2)

ஐம்புல னுகர்ச்சியால் தென்புலத் தோனென்னு
மரிய பெயர் பூண்ட பெம்மான்
அவனியோர் கொண்டாடு மறியற னெனும் புனித
வறவாழி யான் செங்கண் மால்
தன் புலனிந்திரிய மைந்தையும் வென்று தவ
தலைவன் ராஜேந்திர னெனவும்

தருவருணெறியதாற்றீவினையில் மீட்ட நற்

றிருமா லெனும் பேருளான்

தம்மையே பலியாக தரணியி லளித்து மெய்

தவமதை யளித்த தலைவன்

சருவ வுயிர் தன்னுயிர்ப் போல் காக்க தேறவே

தருமநெறி யீந்த புனிதன்

கைம்மாறு யாதுமே கருதாத காட்சியான்

கரபோலை யேந்து மீசன்

கனகேச னருள்வாச கமலாச னன்கழற்

காட்சியைக் கருது வாமே.

(3)

பொய்யையே சொல்லியோர் குடியை வஞ்சித்தலும்

பிறர் பொருளவாக் கொள்ளலும்

பின்னொருவர் மனையாளைப் பேணலும் பிறவுயிர்

படுகொலைச் செய்தழித்தலும்

செய்தொழில் மறக்குங்கள் ளுண்டு மதி கேடலும்

தெரியாவ மைந்தென்னவே

தெளிபொருளை யூட்டி நற் றிருவருளை காட்டினோன்

தேவாதி தேவ சுகுணன்

தையற்சொற் கூறாது தவநெறியி னிலையாகுந்

திரிகரண சுத்த மோதி

ஜீவகாருண்யமே சித்திமுத்தியின்வழி

திருவருணிலையி தென்றுங்

கைகண்ட காட்சியை கருணை கொண்டுலகோர்க்கு

காட்டிடுங் கரபோ லீஸன்

கனகேச னருள்வாச கமலாச னன்கழற்

காட்சியைக் கருதுவாமே.

(4)

சாக்கையர் வம்மிஸக் குழந்தை வேற் பரதேசி

சாற்றிகொண் டாடு மயிலை

தங்குமிந் திரவியா ரத்திநெறி காட்சியாம்

சங்கறன் பிச்சை யாண்டி

யாக்கை போ லூர்வலங் காட்டவு மதுகாண

வண்ணன்மணி வண்ணன் மனைவி

அரிவைபூம் பாவைவந் தரவுதீண் டியழியவு

மங்கு சாக்கைய ரழுகவும்

பூக்கொய்யு மாண்டியர் புலம்பவும் போற்றியப்

புன் செயலை யாண்டு தோறும்

பூகை வெண் கொடியேற்றி பிறையாகு பௌர்ணமி

போற்று நாளிது வாதலின்

காக்குங்கர போலீஸன் சிந்தை கொண் டவரவர்

காட்டு நெறி வாய்மை னின்று

கனகேச னருள்வாச கமலாச னன்கழற்

காட்சியைக் கருது வாமே.

(5)

குறிப்பு - சதுர் என்பது சது எனவும், கர்ம்மா என்பது கம்மா எனவும், கர்ப்பம் என்பது கப்பம் எனவும் ரகரம் மறைந்து வரும். ஆனால் கர, கரம் என்ற சொற்கள் தமிழில் க. என வர வேண்டும். அது கை என்று வழங்கப்படுகிறது. கர + போல் = கபோல், கைபோல், கரபோலம் என்னப்படும். கபாலமே மண்டையோடாக இருந்தாலும் அது இரப்பவர்க்கு பாத்திர மாகா. ஆமெனில் அது புராணமூடம் என்னப்படும். விவேகிகள் ஏற்கார்.

இது கார்வெட்டி, அரசனாகிய கிரீட்டன் கால சரித்திர மாகும். அக்காலத்தில் இக்கர போலீஸன் உத்சவங் கொண்டாடி வந்தவர்கள் வள்ளுவர்களே! அவர்கள் இக்காலத் திலும் இந்து மதத்தில் முற்றும் சேர்ந்தவர்களாகத் தோன்ற வில்லை. தாதப்பறையர் என்பது போலவே, வள்ளுவப் பறையர் என்றும் குறிக்கப்படுகின்றது. இவர்கள் இந்துக்களுடனும், பறையர் களுடனும் சேராமல் தனித்திருக்கின்றார்கள். வள்ளுவர்களுக்கு நாயனார் என்றும் சொல்லப்படும்.

இத்தகைய நாயனார் பரம்பரையில் ஒருவர் மடங்கட்டி சயன சிலை தாபித்து, கரபோலீஸன் உத்சவங் கொண்டாடினார் என்றால்,

அவ்வுத்சவம் அக்காலத்தில் எவ்வகையாக நடந்த தென்று புலனாகவில்லை. அம்மடத்திற்கு வள்ளுவர்களே உரிமை யாளர்களாவார்கள். அவ்வள்ளுவ வம்சத்தில் வந்த, கணிதாதி யும் ஸாஸ்திர பண்டி தருமான மார்க்கலிங்க நாயனார் அவர்க ளெழுதிய சுத்த ஞானம் என்ற நூலாலும், திரு மயிலை வீ. குப்புலிங்க நாயனார் அவர்களியற்றிய ஞானம் என்ற நூலாலும் இது சாக்கையர்கள் மடமென்றும் பூம்பாவை அரவங் கடித்திறந்தாள் என்றும் சுத்தமாக விளங்குகின்றது.

ஆனால், இக்காலத்தில் அத்திரு மயிலாபுரி மடம் ஜாதி சைவர்கள் கைவசத்தில் சிக்குப்பட்டுள்ளது. வள்ளுவர்கள் ஒடுக்கப்பட்டவர்களில் சேர்ந்துள்ளதால் தங்கள் உரிமையைக் கேழ்க்கும் அதிகார மற்றவர்களானார்கள். சாக்கையர்களை இன்ன மதத்தினரென்று குறிப்பிட முடியாம லிருக்கின்றது. எப்படியும் புற சமயிகளென்றே கூறலாம். இவர்கள் கூறும் கர போலீஸன் சரித்திரம் மேற்குறித்த பஞ்சரத்ந பாவில் விளங்குகின்றன. ஆனால் கபாலீஸன் கோவில் என்றே இக்காலம் சொல்லப்படுகின்றது. சாக்கையர்களாகிய வள்ளுவர்கள் பெரும்பாலும் சோம்பேறி ஜீவனக்காரர் களாகவும், நேர்முகமாக ஜோஷிய பொய் போதகர்களாகவும் அறியாமையில் ஆழ்ந்தவர்களாகவும், மக்களை ஏமாற்றுகிறவர் களாகவும், வாழ்ந்து வருகின்றார்கள். இதனாலேயே இவர்கள் நூலாதாரத்தில் சங்கைகள் ஏற்படுகின்றன.

சித்தார்த்தனது ஞாபக தினங்களை இந்தியர்களென்போர் யாவரும் வழங்கி வரினும், பழமையான மூட பழக்க மத கோட்பாடுகளில் நுழைந்து அம்மத ஆபாசங்களை சித்தார்த்தனது நற்சரித்திரத்திற் சேர்த்து, பண்டிகை என்று வழங்குகின்றார்கள். இனி இரண்டாவது கபாலீஸன் கதையைக் கவனிக்கலாம்.

## ** அத்தியாயம் 2**

## ** கபால பாத்திர உற்பத்தியும், சிவன் கபாலமேந்திய விபரமும்**

சிவனுக்கு ஐந்து தலைகளிருந்தன. அதுபோலவே பிரமனுக்கும் ஐந்து தலைகளிருந்தன. சிவன் மனைவியாகிய பார்வதிக்கு, இவர்தான் சிவனென்றும், பிரமனென்றும் பல நாளாகத் தெரியாமலிருந்தது. பார்வதி ஒரு நாளிதை சிவனிட முரைக்கவே, பிரமனின் ஐந்து தலைகளில், ஒரு தலையை சிவன் கிள்ளி எடுத்துவிட்டார். அத்தலை சிவன் கையில் ஒட்டிக் கொண்டதோடு, அவரை பிரமன் முண்டத்துள் இழுத்துக் கொண்டு போனது, சிவன் தன்னுயிருக்குப் பயந்து பிரமனை மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். தன் கையில் ஒட்டிக் கொண்ட பிரமன் தலையைச் சிவனால் விலக்க முடியாமற் போனது. தலைக்கிள்ளிய குற்றத்திற்காக, சிவன் சாகுமட்டும் பிரமன் தலை அவர்கையில் ஒட்டிக்கொண்டிருக்க வேண்டு மென்ற சாப தண்டனையைச் சிவன் பெற்றுக்கொண்டார். ஆதலால் சிவன் கையிலிருக்கும் பாத்திரத்திற்கு பிரம கபாலம் என்று பெயர் வந்தது.

கபாலம் மண்டையோடு. இது பார்வதிக்காகத்தலைக் கொய்யப்பட்ட கதையாகும். பிரமன் தன் புத்திரியைப் புணர்ந்த குற்றத்திற்காக தலையறுக்கப்பட்ட வேறொரு கதையுமுண்டு. அக்கதையிலும், பிரமன் தலை சிவன் கையில் ஒட்டிக்கொண்டது.

கபாலீஸன் உத்சவத்திற்கு முன் காரணமா யிருப்பதுதான் சிவராத்திரி என்று சொல்லப்படும். இந்த சிவராத்திரி சம்பந்தமாக, சிவராத்திரி புராணம், சிவராத்திரி மான்மியம், சிவராத்திரி கர்ப்பம் என்று பல கதைகளுண்டாக்கப்பட்டுள் ளன. இந்த சிவராத்தியின் மருத்துவங்களை மற்ற புராணங்களி லும் கொஞ்சம் கொஞரமாக வர்ணிக்கப்பட்டுள்ளது. இதல்லாமல் மகாராஜா துறவு, பெருந்துறவு என்றும் சில நூற்கள் வரைந்துள்ளன.

இவ்வாறான புராணங்களின் கருத்துக்களே சிவராத்திரி பண்டிகையாகும். ராத்திரி முற்றும் கண்விழித்து சிவராத்திரி புராணம் படிப்பார்கள். அடுத்த நாள் ஸ்நாநஞ்செய்து புது வஸ்திரமணிந்து, சுடலைச்சென்று பிணவறையிலுள்ள கங்காளம் மண்டையோடு முதலியன வாரி, எடுத்தெறிந்து கொள்ளைக் கொள்ளை என்று கூவுவார்கள். இது மயானக் கொள்ளை எனப்படும். இவ்வாறு செய்வதல்லாமல் வேறொரு நற்காரியமும் இப் பண்டிகையில் நடைபெறாது. இதுவே சிவராத்திரியும் சுடலைக் கொள்ளையுமாகும்.

இன்னொரு கதை, காளியும் சிவனும் சுடலை மணத்தருகில் கூத்தாடினார்களாம், அப்போது நாராயணமூர்த்தி மத்தளம் அடித்தாராம், காளியும், சிவனும் சுடலைக் காவல் புரிகின்றார் களாம். சுடலையை ருத்திர பூமி என்பார்.

மற்றொரு கதை, சிவன், சுடலையில் வேகும் பிணத்தருகே இருப்பதால் சுடலை வாசி என்றும், மனிதர்களுடைய எலும்புகளை ஆபரணமாக பூண்டு கொண்டிருப்பதால் கங்காளனென்றும், மனிதர்களுடைய தலைகளை மாலையாக போட்டிருப்பதால் சிராமாலை யணிபவன் என்றும் அவருக்கு பெயருண்டு. இப்படியே காளிக்கும் பெயருண்டு.

சிவன் இரந்துண்ண பாத்திரம் பெற்ற கதையை முன்னே உரைத்தோம். இனி ஒரு நாய், சிவராத்திரியின் பலனைப் பெற்ற மகுத்துவத்தைச் சொல்கின்றோம்.

** பிரமோத்தர காண்டம். சிவராத்திரி மகிமை.**

** 10 முதல் 79 பாட்டு முடிய சுருக்கங்கள்.**

சிவராத்திரி தினத்திலே, ஒரு நாய் பிரசாதத்தைத் திருடியுண்ண, ஒரு சிவாலயத்துள் நுழைந்ததாம், கோவிலுள்ளி ருந்தோர் அதைக்கண்டு, கல்லுந் தடியுங் கொண்டு துரத்தியடித்து நாயைக் கொன்றுவிட்டார்களாம். சிவராத்திரி தினத்திலே தூரத்திலிருந்து

நடந்துவந்து தீபாராதனையைக் கண்களினால் கண்டு, சிவன் கோவிலை வலமோடி, சந்நிதானத்தருகில் கொலையுண்டதால், அந்நாய் மறுஜன் மங்களிலே அரசர்களாகப் பிறந்து, பூலோகத்தை யாண்டு, கைலாயப் பதவி யடைய சிவன் ஆக்ஞாபித்தாராம்.

சிவராத்திரியும், சிவன் கபால பாத்திரம் பெற்ற கதைச் சுருக்கமும், இவ்வளவேயாகும். இனி மேற்குறித்த இரண்டு கபால மூர்த்திகளின் கதா கருத்துக்களை ஆலோசிக்கலாம்.

## ** அத்தியாயம் 3**

## ** தெளிதல்.**

சகோதரி சகோதரர்களே! சிவராத்திரி மகுத்துவத்தைப் பற்றியும், பிச்சையேற்ற கரபோலீஸன் கதையையும் கபாலம் பெற்ற விதத்தையும், கொஞ்சம் பரியாலோசிக்கலாம். நாம் பழமையான கதைகளையும், தெய்வங்களையும் பகுத்துப் பாராமலே கொண்டாடியும் வணங்கியும் வருகின்றோம். இதில் எது பொய்யென்றும், மெய்யென்றும் ஆலோசிக்கப் பிரியப் படாமலே காலங் கழிக்கின்றோம். நாம் அநுசரிப்பவைகள் இன்ன மதத்தது என்று நமக்கு தெரியவில்லை. அதை உண்மைப்படுத்த அது இப்படி, அப்படி என்று சொல் கின்றோம். நம் பெரியோர்களும் பலவாறாக எழுதி வைத்து விட்டார்கள். அவைகளை நம்முடைய அறியாமையால் மெய்யென்று சாதிக்கின்றோம்.

மயிலைக் கரபோலீசன் மடம் சாக்கையர்களுடைய தாகும். அவர்களால் கைவிடப்பட்டு, சைவர்கள் கைவரப்பெற்ற பின்னர், அல்லது இதுகாலமட்டும், அம்மடம் எங்களுடைய தென்று வள்ளுவர்கள் வெளிவராமலிருக்கின்றார்கள். அம்மடத் தை தூர நின்று வணங்குகின்றார்கள். பேதை மக்களுக்கு சாஸ்திரஞ்சொல்லும் பழஞ்சாக்கையர்களே! தங்கள் மடம், தங்களுக்கு எக்காலத்தில் கிடைக்குமென்று, ஜோஷியம் பாராமல், வாளாயிருந்து வருகின்றார்களென்றால், மற்றவர்களுக் கென்ன சொல்வது? வள்ளுவர்கள் தாழ்ந்தவர்கள், இந்துக்கள் உயர்ந்தவர்கள், தாழ்ந்தோர் தெய்வம் உயர்ந்தோருக்கு சொந்த மாயின் இந்துக்களும் தாழ்ந்தவர்களே என்று நியாயங்காட்டி உரிமைப்பெறாமல் உள்ள வள்ளுவர்கள் மதிமயங்கியவர்கள் என்பது நிக்ஷயம் அல்லவா? வள்ளுவர்கள் தெய்வம் சைவர்கள் தொழ நேர்ந்தது பெரிய அவமானமே.

நாமறிய, கிறிஸ்து மதமும், முஹமது மதமும் இந்தியாவில் எப்படி தனித்து வழங்குகின்றதோ! அப்படியே கொஞ்ச காலங்களுக்கு முன்னர், சங்கரர் மதம், மாத்துவர் மதம், இராமாநுஜர் மதம் என்று இந்தியாவில் தனித்திருந்தன. அம்மத கோட்பாடுகளில் நுழைந்தவர்களுக்கு உண்மை இன்னதென்று தெரியவில்லை. கடவுள் தயவால் பொய்ச்சொல்ல பயப்படுகிற தில்லை. ஆகையால் தான் சிவராத்திரி நம்பிக்கைப் பெருத்து நாய் இராஜாவாகிவிட்டதென்று

கூறுகின்றார்கள். சிவராத்திரியில் கோயிலுக்குப் போகிறவர்களே! இது உண்மையா? இக்கதை நம்மை அவமதிக்கின்றதே ! விடுதலையடையுங்கள். அல்லது சிவராத்திரியில் உயிர் துறந்த நாயைப் போல், கொலையுண்டு, சிவபதவியடைவீர்களோ! அன்றேல் மறுபிறப்பில் அரசர்களாக வருவீர்களோ! நிதானித்துப் பாருங்கள். சிவராத்திரி என்றால் சிவன் இறந்துவிட்ட இராத்திரியா? இல்லையேல் அடுத்த நாள் மயானத்தில் பலகாரம் முதலியன படைத்து மண்ணைக் கட்டிக்கொண்டு வெம்பி வெம்பி நினைத்தழுதல் ஏன்? இது மூடத்தனமல்லவா? இதனாலன்றோ.

** பட்டினத்து பிள்ளை**

பத்தும் புகுந்து பிறந்து வளர்ந்து பட்டாடைச் சுற்றி
முத்தும் பவளமும் பூண்டோடி யாடி முடிந்த பின்பு
செத்துக் கிடக்கும் பிணத்தருகே யினிச்சாம பிணங்கள்
கத்துங் கணக்கென்ன காண் கயிலாபுரி மாளத்தியே.

என்று புத்தி சொன்னார். நாம், நாடு நகரம் யாவும் பார்ப்பாருக்கு ஒப்படைத்துவிட்டாலும், நமது அறிவையுமா, ஒப்படைத்துவிட்டோம்? சென்னை மயிலாப்பூரில், வள்ளுவர் களுடைய கபோலீசனை, சைவர்கள், எங்கள் சிவனென்று பொய் சத்தியஞ் செய்கின்றார்களே! அதை காதுகள் கேட்டும், கண்கள் பார்த்தும் மனம் பதைக்காத தென்னை? பார்ப்பனர் கொடுத் துள்ள

நூலாதாரப்படி பிரமன் எப்போது யிறப்பவன். இவன் கையில், போல் இல்லை. இவனுக்கு விழாவும் கோயிலும் வணக்கமுங் கிடையாது. இவன் ஜாதியில் வைசியனாகும். நாராயணனுக்கு வருடத்திற்கு கொருமுறை பிரம உத்சவம் நடைபெறும். அச்சமயம் நாராயணன் கையில் வெள்ளி அல்லது பொன் போல் கொடுத்து, அவர் துறவியானதாக வணங்குவார் கள். இவர் கையில் எப்போதும் ஆயுதங்களே விளங்கும். இவர் ஜாதியில் அரசனாம். இவருக்கு காரணமின்றி பிக்ஷவேஷ விழா நடத்துவார்கள். சிவன் எப்போதும் இரப்பவராம். இவர் உலாவு வதும் இருப்பதும் சுடுகாடு, பர்வதக்குகையிலும் வசிப்பவர். இவர் ஜாதியில் பார்ப்பானாம். பிரமன் தலை தன் கையில் ஒட்டிக்கொள்ளு முன்னம், உள்ளங் கையில் இரந்துண்டவர். இவர் ஆயுதங்களைத் தரித்தவர். மயிலைகபோலீஸன் விழாவன்றி, வேறு எந்த சிவதலத்திலும் இவருக்கு பிச்சாண்டி வேஷ பெரிய விழா கொண்டாடுவது கிடையாது.

ஒருவன் பிச்சை யிரக்க மற்றவன் மண்டையோடுதானா வேண்டும்? சரி சிவன் கையிலிருக்கும் பாத்திரம் பிரமன் மண்டையோடுதான், பிரமன் தலை ஒட்டிக்கொள்ளு முன்னம் சிவன் எப்படி இரந்துண்டார்? வைணவர்கள் பிரம உத்சவம் கொண்டாடுகின்றார்களே! அந்த நாராயணன் கையிலுள்ள பாத்திரமும் பிரமனின் மண்டைத்தானா? இல்லையாயின் பிரம உத்சவமென்று பெயர் வரக்காரணமென்னை?

அல்லது பிரம்மமென்றால் இரந்துண்ணலா? இரப்பவர்க்கு பிரமமென்று பெயருண்டா? இரப்பவர்களெல்லாம் பிராமணர்களாக முற்காலத்திலிருந்ததைக் கொண்டு பெயர் வந்திருக்குமா? வாசகர்கள் சிந்திக்க வேண்டும். ஒரு மனிதனுடைய கையில், மற்றொருவனுடைய தலை ஒட்டிக்கொண்டதும், அத்தலை நாற்றமுண்டாகி மாம்சங்களெல்லாம் அழுகி புழுத்து, விழுந்து ஒட்டிலே உலர்ந்த பிறகு அதில் ஆகாரம் இரந்துண்டா னென்றால் அவரை விவேகிகள் ஏற்பரோ? இந்த கபோலீசன் கதையைக் கேட்டுங் கற்றறிந்த பெரியார்கள் கவனிக்காம லிருப்பது பெரும் பாவமும் அந்தகார விளைவிப்புமாகும். சகோதரர்கள் அன்னிய மத மூட பழக்க வழக்கக் கதைகளைக் கொண்டு இந்தியாவை இழிவு படுத்துதல் விவேகமாகாது. இவ்விதஞ்செய் நடைப்பிணங்களுக்கே,

** பட்டிணத்துப் பிள்ளையார்**

கண்ணுண்டு காணக் கருத்துண்டு நோக்கக் கசிந்துருகிப்
பண்ணுண்டு பாடச் செவியுண்டு கேட்கப் பல் பச்சிலையா
லெண்ணுண்டு சாத்த வெதிர்நிற்க வீசனிருக்கையிலே
மண்ணுண்டு போகுதையோ கெடுவீரிந்த மானிடமே.

என்றிதைக் கூறியுள்ளார் போலும், உண்மைக்குத்தார மாகக்கபோலீசன் கதையை ஏற்கப்போமோ? பிரமாண்டமான அண்டபகிரண்டமான, சர்வ ஜீவாதாரமான, நிச்சலமான,

ஓங்காரமான, பரமான்மாவான, ஆகாய வெளியான, ரூபமான, உலகெலா முணர்ந்தோதுதற்கரிதான என்று பலவாறு வர்ணித்து வாழ்த்தும், சிவபிரான் கையில் பிரமன் தலை ஒட்டிக்கொள்ள, அதை அவர் விலக்கமாட்டாத நிலையின ரானாரென்றால், இதைவிட அவமானம் வேறென்ன உண்டு? உலகில் அரூபியாயிருக்கும் சிவனே மண்டையோட்டில் இரந்தார் என்று பொய்ச் சொன்னால், பயித்தியம் பிடித்திருக்கிற தென்றே பிறர் நினைப்பார்கள்.

ஆகையால் அறிவுக்கப்புறப்பட்ட கதைகளை ஆலோசித் தல் நல்லது. மதியை மயக்கும் புராணத்தை கவனிக்க வேண்டும். எதையும் ஆய்ந்தறிய வேண்டுமென்றுரைப்போன்மேல் கடுஞ்சினங்கொள்வதிலும், நம்முள்ளங்கையில் உள்ள மூட பழக்க வழக்க கட்டுகளை அவிழ்த்து உண்மை யறிதலே பேருபகாரமும், சரியான பகுத்தறிவும், தெய்வத்தன்மையுமாகும். அதுதான் நம் தேச தெய்வமாகிய பகவன் புத்தர் போதனை யாகும்.

கிறிஸ்துவர்களுடைய புது வருட விளையாட்டு சாமானத் திருநாட்களிலும், முஸ்லீம்களுடைய புலிவேஷ திருநாட் களிலும், இந்தியர்கள் எப்படி கலந்து கொண்டாடி வருகின்றார் களோ! அப்படிப்போலவே, பழமையான மூடப்பழக்க வழக்கங்களினால், கட்டப்பட்ட சங்கரர் மதவேதாந்தத்திலும், மாத்துவர் மத கிரியையிலும், ராமாநுஜர் மத பூஜையிலும் சிறுக சிறுக சேர்ந்து

முடிவில் இந்தியர் என்ற பெயர், மாறி இந்துத் (திருடர்) என்று சொல்லிவர தலைப்பட்டு விட்டார்கள். இவைகளுக்கு மேற்குறித்த கதைகளே காரணமாகும். ஆதலால் நமது நாட்டு உண்மையான சரிதத்தைப் படித்துப் பாருங்கள். நமது தேசத்தில் பிறந்து சர்வ சுகமு மிழந்து, மநுஷர்களுக்காக பெருந்துன்ப மடைந்து, நம்மை முன்னேற்ற பாடு பட்ட சித்தார்த்த பெருமான் தனதருங் கரத்தில் ஒடேந்திய விந்தையை யூன்றிப்படியுங்கள். அவருடைய திவ்ய சரித்திரமே சில முட்டாள்களால் பலவாறு வரைந்திருக்கின்றார்களென்பது புலனாகும். ஏழை வள்ளுவர்களுடைய கரபோலீசன் கதையை அபகரித்துக் கொண்டிருக்கின்றீர்களா? அல்லது பவுத்தர்களு டைய சுத்த சரிதத்தை எடுத்து கரைப்படுத்தி யிருக்கின்றீர்களா? என்று படித்துப் பாருங்கள். தயவு செய்து வள்ளுவர்களுடைய கரபோலீசனை அவர்களுக்கு ஒப்படைத்துவிடுங்கள். உங்கள் கபாலீசன் கதையை நீங்களே படித்துப்பார்த்து உண்மை குருவாகிய புத்தகபகவானைப் பின்றொடர, சுதேச தெய்வ சுய சமதர்ம தூதர்கள் வேண்டுகின்றோம்.

** அத்தியாயம் 4**

** சித்தார்த்தர் பெருந்துறவு**

இந்திய சகோதரிகளே! சகோதரர்களே! அன்புடன் இந்நூன் முற்றும் படித்தறியுங்கள். அப்போதுங்கள் உரிமை யான உண்மையான

தர்மராஜனும், அவரது குன்றாத தர்மமும், தர்ம நெறியை ப்ரவர்த்தனஞ் செய்யும் உத்தம சங்கத்தார்களும், வெளிப்படையாகத் தோன்றுவார்கள். சத்தியத்தைப் பின்பற்ற உங்களுக்குத் துணையாக விருப்பார்கள் அத்தர்மம் உங்களுக்கும் எங்களுக்கும் அல்லது நமது எல்லா சகோதரிகளுக்கும் மத்தியில் ஒரு சூரியனைப்போல், நம் தர்மராஜனால் வைக்கப்பட்டுள்ளது. அது எல்லாருக்கும் சொந்தமானது.

அத்தர்மத்தில் பகவான் அன்பு விளங்க “நீங்களாகிய என் சகோதர சகோதரிகள் ஒருமிக்க சேர்ந்து நீங்கள் கண்ட உண்மையை உலகத்திற்குப் போதிக்க கடமைப்பட்டிருக் கின்றீர்கள்” என்று சொல்லப்பட்டிருக்கின்றது. நமது தேச தர்மராஜன் சத்தர்மம் இந்தியர்களாகிய பவுத்தர்களுக்குத்தான் சொந்தமெனப் பிரிக்கப்படாது. இந்தியாவிலுள்ள மற்ற மதஸ்தர்களுக்கும் ஜாதியார்களுக்கும் தர்மம் உரியதாகும். சிற்சில மதவாதிகளும், ஜாதி யூர்ஜிதக்காரர்களும், எம்மதமு மில்லா திருப்பவர்களுங்கூடி எங்களுக்கு புத்த தர்மம் சொந்த மல்ல வென்று சொல்லலாம். அது விவேக விர்த்தியாகாது புத்தர் தர்மம் இந்தியாவிலுள்ளவர்களுக்கு சொந்தமேயாகும்.

எப்படியெனில் பகவன் புத்தர் பிறந்தது இந்தியாவில், அவர் தர்மம் போதித்தது இந்தியாவில். அத்தர்மத்திற்குச் சொந்தக்காரர்கள்

இந்தியர்கள். அத்தர்மத்தை சிரமேல் சுமந்து சென்று அயல்நாடுகளுக்குள் பிரவர்த்தனஞ் செய்தவர்கள் இந்தியர்கள். அன்னிய நாடுகளை புத்த தர்மத்தால் விழிப் படையச் செய்து வைத்தவர்கள் இந்தியர்கள் ஆதலால் இந்தியர் களுக்குச் சொந்தமானது புத்த தர்மம். இத்தகைய சிறப்பு வாய்ந்திருந்த இந்தியர்கள்தான் தற்காலம் தங்கள் தெய்வ சுயசமதர்மமாகிய பவுத்த தர்மத்தை மறந்து "உழைப்பானுக் குழைப்பவன் ஜாதி வண்ணான்" என்றுரைத்து, அடிமை வேதங்களுக்கு, அடிமைகளாக்கி அன்னியத்தை சொந்தமென நம்பி, மோசம் போய்விட்டார்கள். சர்வ சுதந்தரங்களு மற்றார் கள் மத ஜாதிபிரிவினையடைந்தார்கள். தங்களுக்கு தாங்களே நசிந்தார்கள். நசிந்து வந்துக்கொண்டிருக்கின்றார்கள். இது பிரத்தியக்ஷம்.

இங்ஙனம் மடிந்துவரும் சகோதரிகளுக்கும் சகோதரர் களுக்கும், அவர்களுடைய சுய ரத்தினமாகிய சமதர்மத்தை நினைப்பூட்டி புநிதர்களாக நடக்க வைத்தலே! நம் நாட்டு தருமராஜன் உபதேசமாகும். அவ்வுபதேசமே! எங்கள் பணியாகும். எங்கள் சகோதர சகோதரிகளின் முன்னேற்றமே எங்கள் நல்வாழ்வாகும் இதுவே சீர்திருத்தமுமாகும்.

சகோதர சகோதரிகளே! நம் பரத கண்டத்தில், ஜினன், ஆதிதேவன், தருமராஜன், விநாயகன் என்று வழங்கி வரும் புத்த சுவாமியின்,

அடியார்களாகிய, பவுத்தர்கள், பூர்வத்தில் எழுதி வைத்த ஞாபக தினங்களையே! பண்டு - ஈகை, பண்டைய ஈகை, பண்டீகை என்று அப்பவுத்தர்களால் தற்காலம் சொல்லி வழங்கி வரப்படுகின்றது.

இது உலகோ பகாரிகளாக வெளிவந்த விவேகிகளின் நாட்களில் தேச சீமான்களால் ஏழைகளுக்கு அன்னதானமும், அறிவு உபதேசங்களும் வழங்கப்பட்டது. அக்கால் இது இராகுலன் உபகாரம். இது மாபலியன் உபகாரம் என்று பெயர் சொல்லப் பட்டது. அந்த ஞாபகப்பெயர்களே இக்காலம் இராகுலன் பண்டிகை மாபலி பண்டிகை என்று அன்னியர்கள் சொல்லி வருகின்றார்கள். இதுவே பண்டிகையின் இரகசியமாகும்.

இவ்விதமான பவுத்தர்கள் ஞாபக தினங்களுள், சித்தார்த் தன் துறவு, அல்லது மஹாராஜா துறந்த இராத்திரி என்ற ஞாபக தினமும் ஒன்றுண்டு. இது சித்தார்த்தர் உலகத்தார்க்காக, துறவு பூண்ட இரவாகும். அடுத்த நாள் முதற்கொண்டு சித்தார்த்தன் போலெனும் பாத்திரமேந்தினார். அக்காரணப் பெயரே கரபோலன் கரபோல் ஈசன் என்று சித்தார்த்தனுக்குச் சொல்லலாம். அதின் விவரம் கீழ்வருமாறு.

** சித்தார்த்தர் போலேந்திய விவரம்.**

2475 வருடங்களுக்கு முன்னம், வடஇந்தியாவிலுள்ள ஹிமா ஸைல சார்பில், நேபாள தேசத்தில், கங்கை நதியின் உபந்திகளில் ஒன்றாகிய

ரோஹிணி (கோஹணா) நதியால் நிரம்பப்பெற்ற கபில வாஸ்து என்ற புண்ய க்ஷேத்திர மொன்றிருந்தது. பூர்வ அரச பரம்பரையில் வந்த சுத்தோதனன் என்ற அரசன் அந்த நகரத்தை ஆண்டு வந்தான் அவன் அதிக அன்பும் தயையும் சுத்த லாவண்யமு முள்ளவனாக இருந்தான் அதினால் அவனை மற்ற அரசர்களும் புகழ்ந்தார்கள். சர்வ பாக்யமும் பெற்ற தயாரூபிணியாகிய மாயாதேவி என்ற இராக்கினி அவனுக்கு மனைவியாக இருந்தாள்.

அவ்விருவருக்கும் ஒரு புத்திரன் பிறந்தான். அவனுக்கு சித்தார்த்தன் என்று பெயரிட்டார்கள். சித்தார்த்தன் செல்வ சுகத்துடன் வளர்ந்தான். அன்பே ஒருருவாக இருந்தான். தக்க வயதில் யசோதரை என்னும் மாதைக் காதல் மணம் புரிந்தான். சுகபோகத்துடன் வாழ்ந்து வரும்போது, சகல சுகபோகங்களு டன் தானும் தன் மனைவியும், தன் குடும்பங்களும் இருப்பது போலவே! தன் தேச குடிகளும் இருக்கின்றார்களா? என்று கருதி, ஒரு நாள் நகர தரிசனத்திற்குப் போனார். அங்கு பிணி, மூப்பு, மரணம் என்ற பயங்கரமான பெருந்துக்கங்களைக் கண்டார். தான் எவ்வளவு ஆனந்தசாகரத்தி லாழ்ந்திருந்தாரோ, அவ்வளவாயிர மடங்கு துக்க சாகரத்திலாழ்ந்து மனங்கசிந்தார். ஊர்வலத்தை நிறுத்தி தன் கோயிலாம் அரண்மனைக்கு திரும்பிப் போய் துக்கித்து கொண்டிருந்தார்.

ஊண் உறக்கம் அற்றார் சுகபோக செல்வத்தை மறந்தார். துங்கங்களையே ஆபரணாலங் கிருதமென்று நினைத்துவந்தார்

துக்கங்களைத் தடுக்கும் உபாய மெதுவென்று பலரைக் கேட்டு கேட்டு பலனற்றார். இதுகாலம் சொல்லி வரும் கதைகளெல்லாம் ஆபாசம் என்று திட்டப்படுத்திக்க கொண்டிருக்குங் காலத்தில், அழகு வாய்ந்த குமாரனை யசோதரைப் பெற்றெடுத்தாள். அவனுக்கு ராஹுலன் என்ற நாம் மிட்டார்கள். இதனைக் கேட்டு இரட்டை துக்கம் நேர்ந்தது என்று திட்டப்படுத்திக் கொண்டு மனமயர்ந்திருந்தார் சித்தார்த்தர்.

சித்திரை மாதம் வசந்தகாலம் வந்தது, சித்திர மாத பௌர்ணமி நடு இரவில் தனது மனைவி, மகவு மற்றுமுள்ள சகல செல்வங்களையும் வெறுத்து, வெளிவந்தார் சித்தார்த்தன். சன்னா வென்னும் குதிரைப் பாகனை யழைத்து, தனது கண்டகன் என்ற குதிரையைக் கொண்டு வரச் செய்து, அதின்மேல் ஊர்ந்து, மும்மதில்களையும் தாண்டி காடு மலைகளைக் கடந்து, சூரியோதயத் திற்கு முன்னம் தனது தேசத்திற்கும் பிம்பிசாரன் தேசத்திற்கும் நடுவிலுள்ள அனோமா என்ற நதிக்கரைக்கு சன்னாவுடன் வந்தார்.

தானணிந்திருந்த சர்வாலங்கிருத பொருட்களையும், வஸ்திரங்களையும் கழற்றினார். வாளையுருவி தன் சிகையை கத்தரித்து கொண்டார். சன்னாவைப் பார்த்து நீ எனக்கு செய்த உபகாரத்தை யான் மறவேன். என் குதிரையுடன் இவ்வாபர ணங்களையும் என் பிதாவிடம் சேர்த்தருளும். உலகத்திலுள்ள துக்கா துக்கங்களைக் கண்டுணராமல் வீணே அரசனென்ற உருதாங்கி

கீர்த்தியோடிருப்பதிலும் உலக மூடமயக்கங்களைத் தெரிந்து, உண்மை யுரைக்கும், பெரும் பாட்டையை மக்களுக்குக் காட்டி நிலைப்பது, பல மடங்கு பெருங் கீர்த்தியாகும். யான் கண்ட துக்கத்திற்கு நிவர்த்தி கண்டடைந்து, திரும்பி வரும்மட்டும், என்னை மறந்து இருக்கவும் எனது பிரிவு உலக முன் எச்சரிக் கைக்காகவும், உலக சர்வ மக்களுக்காகவும், நீதி நெறி நிறைவுக் காகவுமே என்றும், என் பிதாவிடம் தெரிவிக்கவும். ஒரு நாட்டைத் தாவிப்பிடித் தரசாள என்னை என் பிதா ஸ்திரப்படுத்தி வைத்தார். நான் கண்ட துக்கோற்பத்தியின் காரணம் இன்னதென்று கண்டடைந்து, வெற்றிப் பெறுவேனே யானால், இவ்வுலகம் முற்றும் அடங்க அரசு புரிவேன் என்று பின்னும் என் பிதாவுக்குரைப்பாயாக என்று சொல்லி குதிரைப்பாகனை அனுப்பிவிட்டார்.

அங்கிருந்து தான் கால் நடையாக, காடுகளிலும் முட்களிலும் நுழைந்து, பிம்பிசார வரசனால், செங்கோலோச்சி வரும், மகத தேசத்தின் ராஜதானியான ராஜ கிருஹம் என்ற நகரத்தை நோக்கிச் சென்றார். பல விடங்களில் இரந்துண்டார். தான் சித்தார்த்தன் என்று பிறர் அறியக்கூடாத ஏழ்மையில் இருந்தார். அன்பு நிறைந்த திருவுருவும், அருள் நிறைந்த முகமும், மிருதுவான வாக்கும் துக்கம் நிரம்பிய இருதயமும், பழக்க வழக்கங்களில் வெறுப்புடையவராகவும் விளங்கினார். இராஜ கிரஹ பிரஜைகள் கண்டு வாழ்த்தினார்கள். முடிவில் பிம்பிசார வரசனே தமது

சேனாசைன்யத்துடன் வந்து, சித்தார்த்தருக்கு தக்க சமாதானம் கூறினான். அப்போதும் சித்தார்த்தர் மனந்தளராமல் நின்றார். அதனை யுணர்ந்து, "நீர் உலகில் வெற்றியடைவீராகில், அடியேனை தங்களுக்கு சிஷ்யனாக்கிக் கொள்ள ஞாபகமிருக் கட்டும்" என்று சொல்லி வணங்கிச் சென்றான். சித்தார்த்தர், உலக முன்னேற்றமாக தான் கண்டடைய வேண்டிய நிக்ஷயத் தில் கண்ணுங் கருத்துமாக இருந்து, கரபாத்திர மேந்தி பிக்ஷ யிறந்து ஜீவித்து வந்தார். இதுவே சித்தார்த்தர் கரபோலேந்திய சரித்திர சுருக்கமாகும்.

** நிகழ் காலத்திரங்கல்**

மானிடராய் வந்து மரணமூப்புப்பிணியை
தானறிய மும்மதிலைத் தாண்ட லதிசயமே
மண்மிசையில் வந்து மன்னாவுல காண்டுங்
கண்ணினிய மாதைக் கடந்த ததிசயமே
கடந்துமே மகவைக் கானகத்திற் சென்
றுடைந்த வோடேந்த வுகந்த ததிசயமே.
உகந்துறைந்து கானலுள்ளம் வெதும்பா
தகந்துறைந்தே வன்ன மகன்ற ததிசயமே.

இவ்வாறாக சித்தார்த்தர் தனதரிய சுக சௌக்கியங்களைத் துறந்து, மனுஷர்களின் க்ஷேமங்களுக்காக, தானே மனங்கசிந்து,

செங்கோலேந்த இருக்குந் தன்னருங்கரத்தில் ஒடேந்தி இரந்துண்டு உலகத்திற்கு உண்மை உரைத்து வந்தார். இது நிக்ஷயமாகும்.

பிற்காலத்தில் சித்தார்த்தரின் பேரன்பைச் செவ்வென உணர்ந்து, சர்வ பற்றுக்களூ மற்று, மனதை ஒளி உருவாக்கி உலகத்திற்கே சதா சத்தியத்தைப் போதிக்கவரும் பவுத்த தர்ம துறவிகளுக்கு, மக்கள் அறியும் பொருட்டு, சீவர உடையும், அதனுடன் ஞான சூரியனாம், சித்தார்த்தர் ஏந்திய பாத்திரமும் துறவிகளால் அருளப்பட்டது. அது இக்காலமும் வழக்கிலுண்டு. பவுத்த துறவிகளை பிக்ஷு (பிக்கு = பிச்சைக்காரன்) என்றும், அவர்கள் போலுக்கு பிக்ஷாடன பாத்திரமென்றும், பாரம் பரியமாக வழங்கி, வந்துக்கொண்டிருக்கின்றது. இதுவே சித்தார்த்தர் கரத்தைப் போலாகவும், கரத்தில் போலேந்திய விவரமுமாகும்.

அன்பர்களே! அறிவி லடங்காத ஆபாசங்களைக் கைக் கொண்டு பொருள் கெட்ட பண்டிகைக் கொண்டாடல், விவேகமாமோ? சித்தார்த்த புத்தர் தான் கண்ட துக்கங்களை சகியாதவராய், நாடு முதல் மனைவி மகன், மற்ற யாவரையும் இரவில் துறந்து போனார். அக்காரணத்தால் நாம் பண விரயஞ்செய்து, பண்டிகைக் கொண்டாடி, பழியும் பாவமும் சம்பாதித்துக் கொள்வதோடு, நமது வாணாளையும் வீணாளாக் குதல் நியாயமோ? கரபோலீசன் பண்டிகை என்று சொல்லி நாம் மதிமயங்கி விடலாமோ? இதைப் பண்டிகை என்று ஏற்று நடக்க

புத்தர் எங்கேனும் கூறியிருக்கின்றாரோ? இல்லையே! சித்தார்த்தர் சத்தியத்தைக் கண்டு பிடிக்கத் துறந்த, புனிதமான நாளைக் கொண்டாடுவது, இக்காலம் நடக்கும் பண்டிகை என்னும் அவமானத்திலா? இல்லை. அன்பர்கள் ஒவ்வொரு சரித்திரங்களையும் பண்டிகைகளையும் முற்றும் விசாரித்து நிக்ஷய மான வழியை வழங்குவதே அறிவுடை மையாகும். ஆதலால் சித்தார்த்தர் துறவடைந்து கையில் பாத்திரமேந்தி, இரந்துண்டு, உலகத்திற்கே சத்தியம் போதித்த பேரன்பையறிந்து, புத்த தேவனை, வழிபடுமாறு, சுதேச தெய்வ சுயசமதர்ம தூதர்கள் வேண்டுகின்றோம்.

** கபோலீசன் ஆராய்ச்சி முற்றும்**

# விபூதி ஆராய்ச்சி

ஆசிரியர் க. அயோத்திதாஸ பண்டிதர்

மூன்றாம் பதிப்பு

ஸ்ரீ சித்தார்த்தா புத்தகசாலை பிரசுரம்.

கோலார் தங்கவயல், ஆண்டர்சன்பேட்டை,

ஸ்ரீ சித்தார்த்தா பிரஸில் பதிக்கப்பட்டது.

The Inquiry of The Holy Ash

** முகவுரை**

சகோதரிகளே! சகோதரர்களே! உண்மைக்குத்தாரமாக, நம்மை நாம் திருத்திக்கொள்ள நினைத்தால் நம்மைப் பற்றி இருகக்கட்டி பிணைத்துள்ள எல்லா காரண காரியங்களையும் துருவித்துருவிப் பார்த்து, இது இன்னது இது இனியது, இது தக்கது இது தகாதது, என்று சாதிப்போமன்றோ ? ஏனென்றால் நமது உரிமை, நமது பெருமை என்பதில் அவ்வளவு அபேக்ஷை உண்டு. ஒரு உரிமையை அடையவும் அதனால் தன்னை சுத்தப் படுத்திக்கொள்ளவும்

அறிவுதான், ஆதியாகும். ஆகையால், நாம் கடவுளை அடைய, திருநீற்றால் நெற்றியை மட்டும் சுத்தப்படுத்திக்கொண்டு, தெருத்தெருவாகத் திரிந்தோ, அல்லது திரியா மலோரிடத்தில் ஒடுங்கியோ, இருந்து கொண்டு, வாக்காலுங் காயத்தாலும் பல பாபங்கள் செய்துவந்தால், நமது ரிமையாகிய கடவுளும், நாம் சுத்தப்படுத்திக்கொள்ள அணியும் விபூதியும் என்னச் செய்யும்? மனதில் கடவுள் இருக்கிறார். முகத்தில் விபூதி யிருக்கிறது. இவ்விரண்டு மிருப்பதாலன்றோ நாம் பயப்படாமல் பாபஞ்செய்கின்றோம்? எப்பபடியும் நம்மை விபூதி கைவிடாது. சிவனே வந்து பவுத்தர்களை அழித்துள்ளார் என்ற விசுவாசம் எந்த நியாயங்களையும் விலக்கி அநியாயங் களில் நடக்கவைக்கின்றன. அந்த அநியாய நிமித்தமே சாம்பலை முகத்தில் பூசுகின்றார்கள். சாம்பலால் ஊமைப்பெண்ணைப் பேசவைக்கவில்லையா? அழியா சிவபிரான் அழியும் சாம்பல ணியவில்லையா? என்பார்கள். இவ்வித கதைகளில் கவனஞ் செலுத்தி மதிமயங்கி விபூதியை மகுத்துவப்படுத்துதல் அறியாமையே! நாம் எத்தனையோ காலமாக விபூதி பூசிதான் வருகின்றோம். அத்தனைக் காலங்களிலும் ஒவ்வொருவருக்கு அடிமைப்பட்டு தான் வருகின்றோம். எந்த விபூதியும் நம்மை மீட்டுவைக்கவில்லை. அவ்வுண்மையை இந்நூலில் முற்றும் படித்து, பரிசுத்தர்களாகுவதே தேச திருத்தமாகும்.

2475 ஆங்கீரஸளூ புரட்டாசி மீ

ஸ்ரீ சித்தார்த்தா புத்தக சாலையார்.

** அத்தியாயம் 1**

** வள்ளுவர்கள் கூறும் மாபூதி விவரம்.**

வட இந்தியாவில் ஸாக்கா ஸாக்கை என்று வழங்குங் கூட்டத்தார்களுக்கு, தென்னிந்தியாவில் வள்ளுவர் என்றும் நிமித்தகரென்றும் அழைக்கப்படும். வள்ளுவர்களுடைய நிலைமையைப் பற்றி சிறிது முன்பே கூறியுள்ளது. அவர்கள் தென்னிந்தியாவில் சில பாகங்களில் ஊருக்கு வெளியே வசித்தவர்கள்; வசிப்பவர்கள். சென்னைக்கு அருகில் திருவளூர் என்ற கிராமமும் ஒரு ஆலயமும் இருக்கின்றது. வள்ளுவர்கள் ஒரு பழங்குடிகளென்று நம்பலாம். வட இந்தியாவில் எப்படி சிலர் இந்துக்களாகாமலிருக்கின்றார்களோ? அப்படியே தென்னிந்தியாவில் இந்த சாக்கையர்களிருக்கின்றார்கள். இவர்களுடைய கொள்கை இக்காலத்தில் இவர்களிடமில்லை. இவர்களின்னாரென்றுந் தெரியவில்லை. இவர்கள் பெரும் பாலும் விபூதி பூசினவர்கள்; பூசி வருகின்றார்கள். நடு நெற்றியில் மூன்று கோடுகளும் அதற்கு கீழ் தாமரை மலர்போல் சிறிய கோடும் பூசுவார்கள். பூசும் முன்னால் சாம்பலைக் கையிலெடுத்து மாபூதியின் காரணத்தைப் பாடி தியானிப் பார்கள். அப்பாடலில் மாபூதி யுண்டாகிய சரியான காரணத்தை அறியலாம். அது குலகுரு சாக்கையரின் தேகமே சாம்பலானதென்று விளங்குகின்றன.

** மாயவரம் பாகுபலி நாயனார் ஏட்டுப்பிரதி**

** ஸாக்கையர்கள் பாடிய மாபூதி பதிகம்.**

பொன்னுடன் மண்ணும் பெண் முதல் வெறுத்த
போதி நாதன் மா பூதி
மன்னு முன்னரசர் மாதவர் போற்றும்
வள்ளலா மாதி மா பூதி
சொன்ன முன்பிடக சுருதிமெய் மொழியைத்
தோற்றவைத் தோது மா பூதி
நன்னில் முனிவர்க் காதியாய் நின்ற
நாயக னாகு மா பூதி.

1

உள்ள மெய்ப் பொருளை யுரைத்துநால் வாய்மை
யுணர்த்திய போத மா பூதி
கள்ளமெய் யகற்றிக் காட்சியை யருள
கடவுளாய் நின்ற மா பூதி
விள்ளுமிப் பூத வினையிரண் டாற்றி
மிடியினை யகற்று மா பூதி
தெள்ளற ஞானத் தெளிவதை யூட்டி
சேவைதந் தாண்ட மா பூதி.

2

அண்டர்கட் கோமா னாகிய தன்றி

யவனிக்கு மண்ணல் மா பூதி

தொண்டர்களிதய துரிசினை யகற்றுஞ்

சுத்தவா தார மா பூதி

எண்டிசை யோர்களிதயசுத் தத்திற்

கேமமே யோது மா பூதி

பண்டுள மோன பாக்கிய மீந்த

பக்குவ மான மா பூதி.

3

பக்குவம் பழுக்கும் பான்மையீ தென்னும்

பரிமள வேதி மா பூதி

திக்குக ளெட்டுங் கோணநானான்குஞ்

சீர்பெறச்செய்த மா பூதி

மக்களு மனையு மாய்கையென் றாற்றி

வாய்மை நான் கூட்டுமா பூதி

தக்க மெய்ப்பருவ பால தானத்திற்

றன்னறி வளர்த்த மா பூதி.

4

தன்னையே யுணர்ந்து தன்னையே யடைந்து

தானேதா னான மா பூதி

மன்னவ னென்னும் வாழ்க்கையினின்றும்
வருத்துமென் றகன்ற மா பூதி
தன்னுயி ரீந்து பிறவுயி ரோம்பும்
மன்னுயிர் முதல்வன் மா பூதி
அன்னமு மாடை யாதுலர்க் கீய
வாக்கியா பித்த மா பூதி.

5

வாக்கிய நான்கும் வழிபடு மாறு
மாதவ முணர்த்து மா பூதி
ஆக்கிய நீதி நெறிதனினின்று
அன்பினை வளர்த்த மா பூதி
போக்கிலே சிந்தை போகவிடாது
பூரண முற்ற மா பூதி
சாக்கைய முநிவனாகுமெம் பெருமான்
சாரணர் போற்று மா பூதி

6

சாரணர் போற்றுந் ததாகத னாகும்
சம்புவே சங்க மா பூதி
காரணமானக் கடவுளாமெங்கன்
கற்பகக்காட்சி மா பூதி

பூரண ஞானம் பொலிந்துகே வலமாண்
புணர்ந்த போதத்தின் மா பூதி
சீரண முற்றோர் செயலுற வந்த
தேவாதி தேவ மா பூதி.

7

தேவாதி தேவ னென்னுமெய் யடியார்
தேட்டமே நாட்ட மா பூதி
மூவாமு தல்வ னெனமறை சாற்றும்
முத்தனேயாகு மா பூதி
காவாதளிக்குங் கண்ணுத லென்னுங்
கருணையோ ருருவ மா பூதி
பாவா வெனுஞ்சொல் பற்றிய போதே
பற்றினையறுக்க மா பூதி.

8

பற்றினை யறுத்துப் பற்றிய நீதிப்
பற்றினைப் பற்று மா பூதி
உற்றமெய்ஞ்ஞான விளக்கினை நாட்டி
யுள்ளொளி விளக்கு மா பூதி
கற்றறிந்தோராம் மெய்யறி வாளர்
கண்ணினுண் மணியா மா பூதி

முற்றிய ஞான வாழ்க்கையினிற்போர்
முத்தமிட்டாடு மா பூதி.
-r 9

முத்தமிட்டாடு முதல்வனா மெங்கள்
முநிவன தாகு மா பூதி
சித்தத்தே நிற்கும் ஜெயகுல குருவாந்
தேற்றற வாழி மா பூதி
அத்தனா மெங்களருகனா மூல
வரசனாய் நின்ற மா பூதி
முத்திய தாகும் பரிநிருவாண
மோக்கமே யாகு மா பூதி.

10

வள்ளுவர்கள் தங்கள் குரு தேகத்தையோ தேக சாம்பலையோ மாபூதி என்று பாடியுள்ளார்கள். மாபூதி தங்கள் கையிருப்பிலிருக்கும் நாள் மட்டும் அதை மாபூதி எனக் கூறிவந் தார்கள். அது முற்றும் முடிந்தபின்பு, இதுகாலம் பூசி வந்த மாபூதி பழக்கத்திற்கு விரோதமாய் வெறு நெற்றியாக இருக்க வெட்கப்பட்டும், தங்கள் குல குருமேல் வைத்திருந்த அன்பும், அவரை தினந்தோறும் மறவா சிந்தனையும், மாறிப் போகுமே என்ற விசாரத்தால், கல்வியற்ற சிற்சில

வளளுவககுடிகள, ஒருவருகமகொருவர காணாமலே,
வெள்ளை யடையாளம் விளங்க அடுப்பு சாம்பலையே ரகசியமாய் உபயோகித்து வந்தார்கள். இவர்களிடத்தில் இன்னும் மாபூதி இருப்பதாகவே ஒருவருக் கொருவர் திட்டஞ்செய்து வந்தார்கள். நாளுக்குநாள் பொய் மாபூதியை அறிந்து, பசுவின் சாணத்தை யுலர்த்தி சுட்டெரித்து. உபயோகித்து வந்தார்கள். ஒவ்வொரு வரும் சில மாதங்கள் பொய் மா பூதிக்கே மேற்படி பதிகம் பாடி தியானித்து வரலாயினர்.

எப்போது, மாபூதிக்கு பிரதியாக எருமுட்டைச் சாம்பலை உபயோகித்தார்களோ! அப்போதே இது குரு தேகத்தைச் சுட்டெரித்த மாபூதியல்ல. இது சாணச் சாம்பல், அடுப் பஞ்சாம்பல் என்று வெளிப்படையாகத் தெரிந்து கொள்ள மாபூதி என்னும் மகத்துவப்பெயரை மாற்றி, விபூதி என்னும் பெயரை வழங்கி வரலாயினர். இதுவே இக்கால மட்டும் வழக்கிலிருக்கின்றன.

** ஜீவகசிந்தாமணி முத்தியிலம்பகம்**

கைப்பொடி சாந்தமேந்தி கரகநீர் விதியிற் பூசி
மைப்படி மழைகணல்லார் மணிசெப் பின்வாச நீட்ட
செப்படு பஞ்ச வாசந் திசையெல்லாங் கமழ

வொயகமெகாண

டொப்புடை யுருவர் கோயில் வணங்குது

மெழுகவென்றான்.

முற்காலத்தில் மாபூதிக்கிருந்த பெருமை, இப்போது சைவர்களும் லிங்காயிதர்களும் பூசிவரும் சாம்பலில் இல்லை என்று அதின் பெயரளவாலேயே தெரிந்து கொள்ளலாம்.

** சூடாமணி நிகண்டு தொகுதி.6 பாட்டு 20**

அடலைவெண் பலிசாம் பற்பே ராந்திரு நீறே பற்பம்

பொடியொடு வீபூதி காப்பாம் புண்ணிய சாந்தஞ் சாணி

பொடிதுக்கள் சுண்ணந் தூளி பூழியே புழுதி யாகுஞ்

சுடு சுண்ணச் சாந்து மண்ணாம் கதையொடு களப

மும்பேர்.

இதுவே முதன் முதல் மாபூதிக்கு பிரதியாக, வள்ளுவர்கள் விபூதியணிந்த விவரமாகும். இவ்விதம் சதா விபூதியோ சாம்பலோ சுண்ணாம்போ பூசவேண்டுமா? சில நாளைக்குத் தான் வணங்கவேண்டுமா? மாபூதி யில்லாத போது சாம்பல் பூசாமலிருந்தால் குற்றமா? மாபூதி பூசாமல் தங்கள் குருவை சிந்திக்கக்கூடாதா? மாபூதியைப்போல் சுண்ணாம்பு பூசுதல் பொய் மரியாதை யல்லவா? என்ற பகுத்தறிவு அவர்களுக்குள் எவருக்கும் எழவில்லை. விவேகிகளும் அவிவேகிகளும்

ஒன்றாக சுண்ணாம்பு பூசிக்கொண்டார்கள். இவ்விதம் தங்கள் குரு சாம்பலுக்கு சமமாக அடுப்பஞ் சாம்பலை ஏற்றுக் கொண்ட, பேதை சாக்கையார்கள், பூர்வமான தங்கள் நன்னிலையையும், குல குருவையும், அவர் வழிபாடுகளையுந் துறந்து, மாபூதியின் மகுத்துவத்தையும், விபூதியின் விளக்கத்தையும் மறந்து, அரசர், வணிகர், வேளாளர் என்ற முத்தொழிலாளர் கட்குங் கன்ம குருக்களாயிருந்த தங்கள் குரு பரம்பரையையும், ஜோதிட முதலிய நூற்களை எழுதியோதும் ஸாஸ்திரி பட்டத்தையும், பைய பைய கை நெகிழவிட்டு பஞ்சமா பாதகங்களுக் காளாகி, சாங்கியம் சடங்கு என்ற மூட கொள்கையில் நுழைந்து, ஜாதி வருணம் என்ற குப்பையில் புரண்டு, நாங்கள் தான் வள்ளுவர் என்று கூறி, பதின்மூன்று பறையர்களுள் இவர்களுமோர் பறையராக விருந்து, ஒடுங்கிக்கொண்டு வருகின்றார்கள்.

இதுவே வள்ளுவர்களென்னும் சாக்கையர்கள் வழங்கி வந்த, தங்கள் குல குரு தேக சாம்பலாகிய மாபூதியின் விவர மாகும். மக்கள் நெற்றியி லணிந்துவந்த மாபூதிக்கு காரணமாயி ருந்தவர், தங்கள் குருவென்பது வள்ளுவர்களின் பதிகம் அறிவிக்கின்றன. விவேகிகள் ஆய்ந்தறிதல் கடனாகும். இனி இரண்டாவது விபூதியை ஆராய்வோம்.

** அக்கியாயம் - 2**

## ** திருநீற்று விபரம்**

சிவ மதத்தோர்களும் லிங்க மதத்தோர்களும் பிரம மதத்தோர்களும் நீறணிவார்கள். நீறு சிவன் அடையாள மாகவும், குங்கம் அல்லது செந்தூள் சிவணி அடையாளமாகவும் சேர்த்துத் திருமண் என்று வைஷ்ணவர்கள் அணிவார்கள். வெள்ளை விபூதியும் சிவப்பு குங்குமும் சேர்த்து சிவ-சக்தி என்று சைவர்கள் சொல்வார்கள்; அப்படியே பூசுவார்கள். விபூதி சிவனால் விஷ்ணுவால் பிரமனால் உண்டாக்கப்பட்டதென்றோ அல்லது சிவனே விபூதியாய்விட்டார் என்றோ எந்த நூலிலும் பிரித்துரைத்ததில்லை. பொதுவாக விபூதிக்கு வேண்டிய மட்டும் சிறந்த மகிமையைக் கொடுத்து வந்துள்ளார்கள். ஆதலால் விபூதி மேலுலக தேவர்களுக்கும், கீழுலக தேவர்களாகிய பார்ப்பனர் களுக்கும், இந்து மதத்தினர்களுக்கும் பொது பொருளாகும் என்பது துணிபு. தாழ்ந்த ஜாதியாகிய தோட்டி முதல் உயர்ந்த ஜாதியாகிய இந்துக்கள் வரையிலும் விபூதியணிவார்கள். பூதேவர் முதல் ஊர்த்துவலோக எல்லா தேவர்களும், மும்மூர்த்திகளும், திருநீறணிவார்கள். இதனால் திருநீறு, தேவாதி தேவர்களுக்கும் நன்மைப் பயக்கத்தக்கதான ஒரு தனிப் பொருளென்பது அறிவுடைமையாகும்.

ஒரு நூலில் மும்மூர்த்திகளே திருநீறு, இன்னொன்றில், மும்மூர்த்திகளும் அவர்களின் மனைவிகளுமே திருநீறு, மற்றொன்றில் ; சிவன், சிவனுடைய அருள், சிவனுடைய வல்லபம், சிவனுடைய மகத்துவம், சிவனுடைய சத்தியம், சிவனுடைய கைப்பொருளென்றும் பலவாறாகச் சொல்லி வைக்கப்பட்டுள்ளது. இதெல்லாமல் சிவனுக்கிருக்கும் பெருமையிலும் சிறந்து விளங்குவது விபூதி என்பர். சிவனுக்கு பிரதியாக இந்த திருநீற்றுக்குக் கும்பிடு போடுவார்கள். காலமெல்லாம் சிவனை நினைக்காமலிருந்து சாங்காலம் சிவனே என்றால் எப்படி ரக்ஷிப்படைகின்றார்களோ அப்படியே செத்த பிரேதத்தின் மேல் இந்த திருநீற்றைப் போட்டால் உடனே கைலாய மோக்ஷம் கிடைத்துவிடுகின்றதாம். நீற்றை நுதலில் பூசிக் கொள்வதல் லாமல் வாயில் போட்டு தின்பார்கள். உலக ரக்ஷகராகிய சிவன் திருநீற்றைப் பூசி வருகின்றார் என்று ரூபிப்பார்கள். நீறு பூசி வருவதால் அடையும் பலாபலனை சைவர்களுடைய நூற்களில் காண்பதல்லாமல், நீறு பிறந்த காரணம் அந்நூற்களில் காணப்படவில்லை. கடவுளைக் காணாவிட்டாலும் ரூபங்கள் செய்வதில் குறைவில்லை என்பது போல், விபூதிக்கு உற்பவங் கூறாவிட்டாலும், அதின் சக்தியைச் சொல்லி வருவதில் சைவர்கள் பின்னடைந்ததில்லை

என்றே நம்பலாம்.

உலகில் உள்ள ரூபங்களுக்கு அழகு இல்லாவிட்டாலும், கொடியர்களைக் கொல்ல வேண்டுமானாலும், உடலில் யாதாமொரு வியாதி உண்டானாலும், பக்தர்களை நரகத் திற்றள்ளாது சத்ய லோகத்தில் சேர்ப்பிக்க வேண்டுமானாலும், இந்த திருநீறு செய்யவல்லதாம்.

** திருநீற்றுப்பதிகம்**

கொண்ட கொண்டிட்டவெகு சொரூபங்களுக் கழகு
 கொடுக்கச் சமைத்த நீறு
கொடிய வெண்ணாயிரஞ் சமணரைக் கழுவினிற்
 கொலை செய்து கண்ட நீறு.

** விருத்தாசலப் புராணம் விபூதிச் சருக்கம் பாட்டு. 14**

நீறு புனைவார் வினையை நீறு செய்தலாலே
வீறு தனி நாமமது நீறென விளம்பும்
சீறு நரகத்துயிர் செலாவகை மருந்தாய்க்
கூறுடைய தேவி கையில் முன்னிறை கொடுத்தார்.

இவ்வாறாக விபூதிக்கு பேராதரவு கொடுத்தவைகளை பக்தர்கள் பார்த்து, தாங்களும் புகழ்ந்து புகழ்ந்து மும்மூர்த்தி

களுக்கும் அவர்கள் குடும்பங்களுக்கும், கொடுத்துள்ள, வலிமை யிலும் வலிமை, திருநீற்றுக்குண்டெனச் சாதித்து அவ்விபூதியின் மகிமையால், பிறரை துவேஷிக்கின்றார்கள். இன்னமுந் துவேஷித்து வருகின்றார்கள். அத்தூஷணைக் கவிகளில் மூன்று ஈண்டு உதாரணமாகத் தருகின்றோம்.

** விலக்ஷணானந்தர் பாடிய விபூதி மகிமை.**

திருநீ றணியாத் திருடர்களே! தினமுந் தினமுமதை
யணிந்து
அருவா யுருவா யருவுருவா யகமாய்ப் புறமா யகம்
புறமாய்
பரிமா தவனுங் காணாத பகவ னொருவன் சிவ மாகுங்
கருவாலுதித்த காரணத்தைக் கண்டஞ்செய்ய வல்லீரே!

ஓங்கா ரத்தா லறியாத வுளவு காணாத் திருநீற்றை
வாங்கா மந்த மானுடர்காள் வந்தா லுதைப்பேன்
காலாலே
தாங்காச் சடையான் திருநீற்றைத் தானாயணிந்த
தற்பரர்க
ளேங்கா ரேங்கா ரேங்கார்க ளேங்கா ரென்றே
யேங்குவனே!

வாயால் மனத்தா லறியாத வாணா ளருந்திரு நீற்றைப்

பேயே யென்ன மனம் பதைத்துப் பிதற்றுகின்ற
பேதையரே
நாயே யாகாரி யாக நண்டா யாகநா டாக
வீயா திருக்குந்திரு நீற்றை விதமா யணியவேண்
டுவனே.

விபூதி என்ற பெயராலும், திருநீறு என்று சாம்பலாலும், தங்கள் மதிமயங்கி பலர் பாழடைந்துள்ளார்களென்பது, மேற் குறித்த மூன்று விருத்தங்களால் விளங்கும். அவர்களுக்குள்ள பொறாமையும் பற்கடிப்பும் ஒய்ந்து பகுத்தறிவு வளர வேண்டும். திருநீற்றின், உற்பவமும், அதின் ஆரம்ப காலமும் நூலிலில்லை. பக்தர்கள் சிவனைக் காண விபூதியணி கின்றார்களென்றும், சிவன், மனிதர்களைக் காக்க விபூதி பூசிக் கொள்கின்றார். என்றும், கூறப்பட்டிருப்பதால், நீறு கடவுளுடன் கூடவே பிறந்திருக்க வேண்டும். அந்த விபூதியே சுடுகாட்டு சாம்பல், அதினால் தான் சிவன் சுடுகாட்டு சாம்பலில் இருக்கின்றார். பூதி, பூடித, மாபூதி, நீறு, நீற்ற, என்பன சாம்பலின் பெயரே யாகும். தேவாதி தேவனாகிய சிவபிரானணிவதால் தேவ சாம்பல் அல்லது திருநீறு என்று சொல்லப்படும். பிள்ளைகள் நோயால் வருந்தாது மருந்துண்டு தாய்மார் காப்பது போல, காக்குந் தொழிலையுடைய சிவபிரான் உயிர்களுக்குத் துன்பத்தை நீக்க சுடுகாட்டு

வெண்ணீற்றை யணிகின்றாராம்.

வாதவூர் புராணம்.

பவுத்தர்கள் முன்னிலையில் சைவர்கள் பொய் சொன்ன

** சுருக்கம் பாட்டு 76.**

நீற்றினை யணிந்தது என்னின் னிறைவனென்றே
சாற்றினை உயிர்க்கிடர் தனிப்பதென வெண்ணாய்
தோற்றியுளதம் புதல்வர் துன்பமுறு மந்நோய்
மாற்றும் வகை யன்னையர் அருந்திய மருந்தாம்.

இன்னொரு விந்தையான திருநீற்றை சைவர்கள் கூறி வைத்துள்ளார்கள். இக்கருத்தை நம்பியே செத்த பிணங்களுக்கும் விபூதி பூசி வைப்பார்கள். அது வருமாறு.

பிரமோத்தர காண்டம்

விபூதிமா மகிமை 34 முதல் 42 முடிய பாட்டின் கருத்து

“அதிக தூர்த்தனாக இருந்த ஒரு பிராமணன் ஒரு இராத்திரி, ஒரு புலைமாதுடன் வியபிசாரம் பண்ணிக் கொண்டிருக்கையில், அம்மாதின் கணவன் கண்டு, அத் தூர்த்தனை வாளினால் வெட்டிக் கொன்று, வேலிக்கப்பா லெறிந்தானாம். அந்நேரம் பசியால் வருந்தி குப்பைச் சாம்பலிலே புரண்டிருந்த ஒரு நாய், அப்பிராமணப்

பிணத்தைக் கண்டு அதின்மேலேறி, மிதித்துக் கொண்டு தசையைக் கடித்து இழுத்துத் தின்றது. நாய் கால் களிலே ஒட்டிக்கொண்டிருந்த குப்பைச் சாம்பல் பிராமணப் பிணத்தின் மேல் படிந்ததால், சிவ கணங்கள் வந்து உபசரித்து புட்ப விமானத்தில் ஏற்றுஞ் சமயம், பிராமணனின் தூர்த்த நடத்தைக்காக அவனைத் தண்டிக்க யம தூதர்கள் வந்து சேர, அவர்களை சிவகணங்கள் விரட்டி யடித்துத் துரத்திவிட்டு காமதூர்த்த பிராமணனை சிவலோகத் தில் கொண்டு போய் சேர்த்தார்கள்"

வைஷ்ணவத் திருநீற்று விபரம்

உபதேச காண்டம் பூமகள் அர்ச்சனை மான்மியம்

4 முதல் 18 பாட்டு வரை கருத்து.

ஜலந்திர னென்பவனுடைய மனைவி பிருந்தை என்ப வளைக் கற்பழிக்க வெகுநாளாக ஆவல் கொண்டிருந்தார் நாராயணமூர்த்தி. ஒருநாள் ஜலந்திரன், தன் சரீரம் சிவனால் இரண்டாகப் பிளக்கப்பட்டு இறந்தான். இதனையறிந்த பிருந்தை அக்கினியில் விழயத்தனித்தாள். அப்போது மாறுவேடம் பூண்ட மஹா விஷ்ணு பிருந்தையைப் பார்த்து, ஜலந்திரனை உயிரோடு எழுப்புவதாகச் சொல்லித்தாமே பிளவுண்ட உடலில் புகுந்து ஜலந்திரனாகவே வெகுகாலம் பிருந்தையுடன் இன்ப மனு பவித்துக் காமமயக்கேறி

யிருந்தார். அதனால் ரஷிப்புத் தொழில் நின்றது. ஒருநாள் விஷ்ணு தூங்கும் போது, அவர் செய்திருந்த மாயம் நீங்கவே! பிருந்தை, விஷ்ணு வென்றறிந்து கூக்குரலிட் டழுதாள். இவன் என் கணவனல்ல வென்று எல்லாருக்குஞ் சொல்லி அக்கினியால் விழுந்து இறந்தாள். அந்த பிருந்தைப் பிணச்சாம்பலில் மஹா விஷ்ணு வெகு காலமாகப் புரண்டுக் கொண்டிருந்தார். அந்த சாம்பலை வாரிப் பூசிக் கொண்டார். சிவனைப் போல் இவரும் சுடுகாட்டு சாம்பலை யணிந்து. பிருந்தைச் சுடுகாட்டில் வசித்து வந்தார். வைஷ்ணவர்களணியும் சின்னம் பிருந்தை சாம்பல் என்றும் சொல்லலாம்.

முஸ்லீம்கள் சாம்பிராணியை எரித்த காட்டடுப்புக்கரி சாம்பலை விபூதி போல் அன்னிய மதஸ்தர்களுக்கு முகத்தில் பூசுவார்கள்.

கிறிஸ்துவர்கள் வருடத்திற்கு கொருநாள் விபூதி திருநாள் கொண்டாடி முகத்தில் விபூதி யணிந்தோ இல்லாமலோ அவர்கள் தெய்வங்களைப் பிரார்த்திப்பார்கள்.

இக்கதைகளெல்லாம் விபூதியைச் சொல்லி வருவதால் ஒன்றாகச் சேர்த்து சுருக்கப்பட்டிருக்கின்றன. இதுவே திருநீற்றுக் கதைகளாகும். இவ்விபூதி சரித்திரங்களின்

கருத்துக்களை ஆலோசிக்கலாம்.

## ** அத்தியாயம் 3**

## ** தெளிதல்**

இந்திய சகோதரி சகோதரர்களே! ஒரு விஷயத்தை ஆராய்ந்தறிய புகு முன்னம் தங்கள் மனதை நிதானப்படுத்தி, தாங்கள் எடுத்துக்கொண்ட காரியத்தில் புத்தியை உபயோகித் தல் விவேகமாகும். அப்படியே ஒன்றை அநுஷ்டிக்கு முன்னும் அதனை விசாரித்தறிதல் மேன்மையாகும். ஏனென்றால் நமது தேசத்தில் வெகு சிலர் மனமொப்பி சாம்பலைப் பூசிக் கொள்கின்றார்கள். சிலர் சர்வ ரோகங்களும் சாம்பலால் தீரு மென்பார்கள். ரோகங்க ளென்ப தென்ன? அதனைப் போக்கும் ஔஷதங்களென்ன? பாபங்களென்ப தென்ன? அதனைப் போக்கும் உபதேசங்களென்ன? என்று விசாரித்தறியு முன்னம் ஒருவர், மாபூதியை, திருநீற்றை, விபூதியை முகத்தில் பூசிக்கொண்டாரென்றால், அதின் பலனை, அதின் உற்பவத்தை, அதின் ஆரம்பகாலத்தை, எப்போதறிவார்? இம்மையிலா? மறுமையிலா? குருவைச் சுட்டச்சாம்பல், பிணங்கள் வெந்த சுடுகாட்டு சாம்பல், ஒருவனுடைய காதலி இறந்து வெந்த சாம்பல், எருமுட்டைச் சாம்பல், அடுப்பஞ் சாம்பல், ஜபமாலைகள் வெந்த சாம்பல், காட்டடுப்புக்கரியில் சாம்பிராணி வெந்த சாம்பல் என்னும் விபூதிகளில் பெரிய

சாம்பிராணி வெந்த சாம்பல் என்னும் விபூதிகளில் பெரிய அற்புதங்களிருப்பதாகச் சொல்லி மக்களை ஏமாற்ற, சாம்பல், சந்தனம், செந்தூரம் கரி, சாந்து, குங்கம், முதலிய வர்ணங்களை நெற்றியில் பூசி வருகின்றீர்கள். விபூதியணியாத பவுத்தர்களைப் பாழ் நெற்றியு டையரென்று தூஷிப்பார்கள். பவுத்தர்கள் வந்து தர்க்கிக்காம லும், யமதூதர்கள் வந்து உயிரைக்கவராமலும், சாம்பல் பாதுகாக்கின்றதென நம்பி குப்பைப்புழுதியைக் காப்பென்பீர் கள். இது நியாயமா? பகுத்தறியுங்கள்.

திருநீற்றுக் கவ்வளவு மகத்துவ மிருப்பதாற்றானோ சிவனும் தன் பாபங்களைப் போக்கிக்கொள்ள, சுடுகாட்டுச் சாம்பலில் கிடந்தார் என்கின்றீர்கள்? அவ்விதமே அடியார்களும் சாம்பல் பூசத்தலைப்பட்டு விட்டீர்களாக்கும். சாம்பல் பூசி பாபமற்ற சைவர்களே! நீங்கள், சாம்பல் பூசாத பவுத்தர்களைச் செய்துவந்த துன்பங்களுக்குப் பயந்து நடுங்கி ஒடுங்கி, தங்கள் பரிசுத்த நெற்றியைக் கொண்டு போய், சாம்பல் மூஞ்சிகளாகிய சைவர்கள் அசுத்த நெற்றியில் தேய்த்துக்கொண்டார்க ளென்றால், சிவன் புரண்டிருந்த சுடுகாட்டு சாம்பலினால் நீங்கள் ஜீவகாருண்யம் அடையவில்லையே? பாபத்தைப் போக்கிக் கொண்டதாகத் தோன்றவில்லையே? சிவச்சாம்பல் மகுத்துவம் பெரியதோ? அடியார்கள் நடந்துக்கொண்ட ஒழுக்கம் பெரியதோ? முனைமகியர் வாளால் மகம்

போதித்ததும், சைவர்கள் சாம்பலால் மதம் போதித்ததும் ஒரே கருத்தென்று உண்மைச் சைவர்களுக்கு விளங்காமற்போகாது. மூடர் களுடைய ராஜ்யத்தில், விபூதியணியாதவர்களை சுடலையாண்டிகள் செய்துவந்த அக்கிர மங்கள் பலவே. இவர்களுக்கு மூட வரசர்களுடைய உதவியும் இருந்தது. ஒரு பலனும், ஒரு அறிவும், ஒரு உபகாரமுமற்ற மந்திர மொழிகளும், பஞ்சாக்ஷரம் சடாக்ஷரங்க ளும் படித்துத் திண்ணைத்தூங்கிகளாகச் சாம்பல் பூசி காலந்தள்ளி வந்துள்ளார்கள்.

** பட்டினத்துப்பிள்ளையார்.**

உரைக்கைக்கு நல்லதிரு வெழுத்தைந்துண்
டுரைப்படியே
நெருக்கித் தரிக்கத் திருநீறு முண்டு..........

பேதை யரசர்களை ஏமாற்றி, சிவ சந்யாசிகள் எண்ணற்ற கொலைகள் செய்து வந்தார்கள். சிவ மதத்தை உண்மைப் படுத்தவே சாம்பலணியாத பவுத்தர்களைக் கழுவிலும், வசியிலும் ஏற்றிக்கொன்றார்கள். அப்போதும், சாம்பலணி யாமலே பாழும் சிவமதத் தடியார்களின் படுகொலைக் குள்ளானார்கள்.

ஊரீருமக்கோ ருபதேசங் கேளு முடம்படங்கப்

போரீர் சமணைக் கழுவேற்று நீற்றைப்..

சிவமதமும், சாம்பலும், மகுத்துவம் தங்கியதாக விருந்தால், பவுத்தர்களை உயிர்போகுமட்டும் இம்சிப்பதேனோ? செத்த பிணத்தின் மேல் குப்பைச் சாம்பல் பட்டதும், கணங்கள் வந்து அப்பிணத்தை கைலாயங் கொண்டு போனார்களென்றால், சாம்பல் தூவிய நாய்க்கு ஏன் அப்பதவிக் கிடைக்கவில்லை? பல சைவப் பிணங்களுக்கு மந்திரஞ் சொல்லி விபூதி பூசி, மனிதர்கள் சுடலைக்கு எடுத்துப்போவதைப் பார்க்கின்றோமே! அல்லாமல் சிவகணங்களைக் காண்கிலோமே. வீட்டு விபூதியிலும் சிவனிருக்கும் சுடுகாட்டு சாம்பலிலும், குப்பைச் சாம்பல்தானா மேன்மைத்தங்கியது என்று கேட்கின்றோம். வள்ளுவர்கள் தங்கள் குரு தேக சாம்பலணிந்தார்கள். சிவன் சுடுகாட்டு சாம்பலில் படுத்திருக்கின்றார், நாராயணமூர்த்தி அன்னியனு டைய மனைவி சாம்பலில் புரண்டிருந்தார் என்று பற் பல கதைகளெழுதி பிரிவுபடுத்தி, முகத்தில் சாம்பல் பூசிக் கொண் டார்களே யன்றி, உண்மையைப் புகல வெளிவர வில்லை. அப்படியாக அவர்கள் உண்மையைச் சொல்லி வந்திருந்தாலும், இக்காலம் உண்மையும், தெய்வமும், ஆரோக்கியமும் சாம்பலிலுண்டென்று சாதிக்க, மூட மயக்கொழிந்த நமது சைவ மதத்தோர் துணிவார்களா?

சிவசமயாச்சார்களை மெய்யென நம்பியதே! சிவ சமயிகளுக்கு மதிப்பும் அறிவுங் குறைந்து விட்டது. ஆபாச கதைகளெல்லாம் சிவன் மேல் ஏற்றப்பட்டது. நாடு அடிமைக்குள்பட்டுவிட்டது. தன் தலையில் ஒரு பெண்ணைச் சுமந்தும், ஒருகையில் யானைக்குட்டியையும், ஒரு கையில் பார்வதியைப் பிடித்துக் கொண்டும், இடையில் புலித்தோலும், முதுகில் யானைத் தோலும், கழுத்தில் பாம்புகளையு மணிந்து அலங்கோலமாக மாட்டின் மேலேறி சுடுகாடு போகும் சிவனை, மனிதர்கள் கண்டு துதிக்க மனமுண்டாகுமா? இப்பெரிய அவலக்ஷணத்தை எழுதிவைத்தவர்கள் சைவப் பெரியோர் களல்லவா? இது சிவனை இழிவு படுத்துவதா? அல்லது சிவனிருந்த இந்தியாவை (இந்தியர்களை) இழிவுபடுத்துவதா என்றோசித்துப் பாருங்கள் உண்மை விளங்கும்.

பொய்யான தேவதைகளை மெய்யென நம்பி, சாம்பலைக் குழைத்தும் குழைக்காமலும், குறுக்கிலும் நெடுக்கிலும், அழுத்தமாகவும் மேலாகவும் முகத்தில் தடவிக்கொண்டு மதவடையாளங் காட்டுவது பைத்தியமல்லவா? மேல் நாடுகளில் எந்த மதஸ்தனாவது சாம்பலைப் பூசி முகத்தைக் கெடுத்துக் கொள்ள நினைவானா? நீங்களே கடவுளை நம்புகிறவர்களாக இருந்தாலும், நீங்களணிவது

சாணச்சாம்பற்றானோ! அறியாமை என்னும் படு

குழியிலமிழ்ந்து, அன்னிய மதக்காரர்களால் கொள்ளைப்போய்க் கொண்டிருக்கும் சகோதரர்களே! உங்கள் மனக்கண்ணைத் திறந்துப் பாருங்கள். “கல்லிலுஞ் செம்பிலுமோ விருப்பா னெங்கள் கண்ணுதலே” என்று பெரியோர் சொல்லிருக்க, அதற்கு மாறாக புழுதியில் சாமியுண்டென்று சொல்லல் சற்சங்கத்தார் கொள்கையா? அல்லது துற்சங்கத்தார் கொள்கையா? என்று நீங்களே ஆய்ந்துப்பாருங்கள் விபூதி வயிற்று வலியைப் போக்கியதாக நம்புவார்கள். அது எப்படி தீர்க்குமென்று விசாரிக்க மாட்டார்கள். சில வைஷ்ணவர்கள் கலக்கிய புட்டி நாமம் வைத்திருப்பது போலவே! சில சைவர்கள், தகரபரணியில் கொஞ்சம் சாம்பலை வைத்திருப்பார்கள். முகத்திலுள்ள சாம்பலுக்கு பயந்து பல மணி நேரங்கள் மட்டும் முகங்கழுவா மலிருப்பார்கள். விபூதியில்லாவிட்டால் அடுப் பஞ்சாம்பலையே சுத்தப்படுத்திய முகத்தில் பூசி அழுக்குப் படுத்திக் கொள்வார்கள். மாட்டுச்சாணம், சாம்பலானால் அது மாட்டைக் காக்குமா? அப்படியே மனிதன் சாம்பலாகுவதைப் பார்க்கலாம். ஆனாலச் சாம்பலே மீண்டும் மனிதனை மோக்ஷத் திற்கு கொண்டு போகுமா? மனிதனுக்கும் சாம்பலுக்கும் என்ன சம்பந்தமுண்டு? இதை யுணராதிருப்பதுதான் பெரிய அநியாயமாகும்.

இக்காலத்தில் வயிற்று நோயையுடைய சைவன், விபூதியை மருந்தாக வேற்றால், அவனுக்காக வைத்தியசாலைத் தேவையில்லை. சிவன் சுடுகாட்டி லுண்டென்றால் அவருக்கு கோவில் நாட்டுள் தேவையில்லை. முற்கால முதல் தற்கால மட்டும் யார் பூசிய விபூதியாக இருந்தாலும் அதில் ஒரு பலனுமே இல்லை. சில மத மிருகங்கள்; மேல் மினுக்காக விபூதியணிந்து, நான் மனிதரிற் பெரிய ஜாதி என்று கர்வித்து, அதைப்பற்றி சில விளையாட்டு கதைகள் கூறுவர். முற்கால சில தேவர்களும் முனிவர்களு மித்திருநீற்றை யணிந்ததுங் கிடையாது அணிய யாக்யாபித்ததுமில்லை.

** சிவவாக்கியர்**

இருக்கு நாலுவேதமு மெழுத்தறவே யோதினும்
பெருக்க நீறு பூசினும் பிதற்றினும் பிரானிரான்

**பட்டினத்துப்பிள்ளை**

நீற்றைப் புனைந்தென்ன நீராடப் போயென்ன நீ மனமே
மாற்றிப் பிறக்க வகையறிந்தா யில்லை மறைமுடிவில்

சில பெரியோர்கள் உடம்பில் விபூதி யணிய வேண்டும் மென்பர். சிலர் பொருட்களின் மேல் பூசுவார்கள். கிறிஸ்துவர் களாவது தங்கள் பாதிரிகளிடம் விபூதி கொடுக்க மந்திரக்கால்

சுத்தமாக்கி அதைப் பூசிக்கொள்வார்கள். வெய்யற்காலங்களில் வைக்கும் குளிர் நீர் பானைக்கு மந்திரமில்லா விபூதியை சைவர்கள் பூசுவதால் அதின்மேல் நாய் மூத்திரம் பெய்ய நேர்ந்தது. இப்போதுள்ளது கடவுள் விபூதியானால் நாய் அவ்விதம் செய்யாது. சிவன் கிடந்த சாம்பலானால், நாம் சுடுகாட்டில் மிதிப்போமா? விபூதி மெய்யாயின், வைத்திய சாலையில் வைக்க விண்ணப்பஞ் செய்யமாட்டோமா? வள்ளுவர்கள் மாபூதியிலும், சைவர்கள் திருநீற்றிலும், முஹம்மதியர் சாம்பலிலும், கிறிஸ்துவர்கள் விபூதியிலும் ஒரு நல்லறிவையு மடைய முடியாது. காரணங் காணாமல் சாம்பல் பூசிவருவது பழக்கப்பட்ட பைத்தியம் அப்பைத்தியத்தால் தான் அநேக பூச்சிகள் சாணத்தில் வெந்து அடங்கியிருக்கும் நீற்றை உணராமல், வாயில் போட்டு தின்கின்றார்கள். பிணச் சாம்பலுக்கும் விபூதிக்கும் மாறுதல் உண்டோ ? உண்மையான சகோதரர்களே! நமது தேச சீர்திருத்த தெய்வத்தைக் கைவிட்டு அல்லலடைவதைப் பாருங்கள். அறியாமையில் ஆழ்ந்து நாச மடைவதைப் பாருங்கள். இனியேனும் நமது நாட்டில், நம்முடன் பிறந்து நமக்காக தன் சுகமிழந்து நம்மை ஆதரித்தலோக நடுநாயகனாகிய புத்த சுவாமியுடைய திவ்விய சரிதத்தைப் பார்த்து, உங்கள் நியாயமான வாழ்க்கையைக் கைக்கொள்ளலே அறிவுடைமையாகும். ஏழை

வள்ளுவர்களுடைய குரு சாம்பல் கதையை அபகரித்துக்கொண்டிருக்கின்றீர்களா? அல்லது பவுத்தர்களுடைய சுத்த சரிதத்தை எடுத்து கரைப்படுத்தியிருக் கின்றீர்களா வென்று படித்துப் பாருங்கள். தயவு செய்து வள்ளுவர்களுடைய குரு சாம்பல் கதையை அவர்களுக்கு ஒப்படைத்து விடுங்கள். உங்கள் சுடுகாட்டு சாம்பல் கதையை நீங்கள் படித்துப்பார்த்து, உண்மை குருவாகிய புத்த பகவானைப் பின்றொடரகதேக தெய்வ சமதர்ம தூதர்கள் வேண்டுகின்றோம்.

** அத்தியாயம் 4**

** புத்தர் பரிநிர்வாணம்**

உலகநாத னென்றும் சற்குருவென்றும், தோன்றி தன்னுயிர்க் கிரங்கான் பிறவுயி ரோம்பும் மன்னுயிர் முதல்வ னெனக் கொண்டாடப்பெற்ற, சாக்கிய முனிவர், தான் கண்டறிந்த உத்தம தர்மத்தை உலகெங்கும் பரவச்செய்வித்து, ஆங்காங்கு சங்கங்களை நிலைநாட்டி மெய்யர்களைக் கூட்டி, தனது அறக்கதிரை வீசி, மனவிருளை மாற்றி ரஷித்துக் கொண்டே குஷி நகருக்கு வந்து தர்மோபதேசம் செய்துக் கொண்டிருந்து, 80-வது வயதில் பரிநிர்வாணமானார். சித்தார்த்தர் திருவுருவை என்று காண்போம். தேஜோன்மய ரூபத்தை என்று காண்போம். அழியாத அறவுரையை என்று கேட்போம் என்று

அருகிலிருந்த பிக்ஷுக்கள் முதலாயினோர் அழுதார்கள். நிர்வாணமென்ப தேதோவென்றெண்ண வேண்டாம். உடலுயிர் சேர்க்கைக்கு வாணமென்றும், உடலுயிர் பிரிவிற்கு நிர்வாணமென்றும் சொல்லப்படும்.

குஷி நகரத்து குடிகளும் பிக்ஷுக்களும் ஒருங்கே சேர்ந்து; மலர்களால் அவ்விடத்தை அலங்கரித்து தூப தீபங்களால் பரிமளிக்கச்செய்து அதில் சந்தனம் முதலிய வாசனைக் கட்டைகளை யடுக்கி, அதில் புத்தபகவான் தேகத்தை வைத்து தேக சேஷமும் பஸ்பமும், எட்டு பாகங்களாகப் பிரிக்கப்பட்டு, எட்டு திசைகளிலு முள்ள ராஜ்யங்களால் கொண்டு போய் சேமிக்கப்பட்டன. அவைகளில் ஒரு பாகம் குஷி நகரத்தார் களால் கட்டப்பட்ட சங்கத்தில் சேமித்து வைக்கப்பட்டது. இக்காலத்தில் பாலபாகங்களில் புத்தர் அஸ்தி பூமியில் கிடைப் பதை அநேகர் பார்த்திருப்பார்கள் : அநேகர் கேள்விப்பட்டு மிருப்பார்கள். எல்லா தேசத்தார்களும் அதற்கு புகழ் கூறுகின்றார் கள். இதுவே இந்தியாவில் பகவன் புத்தர் தேக சாம்பலை சேமித்து வைத்த விவரமாகும்.
இந்தியாவில் பகவன் புத்தர் பிறந்த 2475-ளு கணக்கை யும் புத்தருடைய தேக சாம்பலையும், நமது தேச வள்ளுவர்களும், சைவர்களும் மற்ற மதஸ்தர்களும் பெருமைப் பாராட்டி இச்சாம்பல் எங்கள் தெய்வம் தரித்திருந்தது; இது ஆதிகாலத்தி

லுண்டானது; இது பாபங்களைப் போக்கும் தேவாமிர்தம் என்று சொல்லிக்கொள்வதல்லாமல், வாஸ்தவத்தில் இந்துக்கள் கூறும் ஒரு தனித்த மாபூதியாவது, திருநீறாவது, விபூதியாவது இருந்ததாக உறுதி இல்லை. புத்தருடைய தேக சாம்பல் பதனப்படுத்தி வைக்கப் பட்டதே யல்லாமல், முகத்திலும், உடம்பிலும், பெட்டிகளிலும், வாசற்கால்களிலும், கதவுகளிலும் தடவி இரைக்கப்படவில்லை.

வீணாக சிற்சில வம்பர்கள் பவுத்தர்கள் மேற்கொண்டுள்ள பொறாமையின் நிமித்தம் சாம்பலணிந்து, பவுத்தர்களைப் பகைமைப்படுத்துவார்கள். விபூதி யணிந்துவரும் ஒவ்வொரு சகோதரி சகோதரர்களும், கண்மூடித்தனமாக இக்காலத்தி லிருக்கக்கூடாது. இவ்விதம் அடையாளங்கள் நம் தேச தெய்வத்தை அவமரியாதைப்படுத்துகின்றது. பாரம்பரியமாக விபூதி பூசி வந்தவர்களெல்லாம் மோக்ஷ மடையவில்லை. கடவுளைக் காணவில்லை, அவர்கள் செத்தும் விபூதியோடுதான் சுடலைச் சென்றார்கள் விபூதியில் ஏதோ மகத்துவமிருப்பதாகக் கருதி திருநீறுத் தரிப்பதில் அறிவுவளராது, உடம்பில் தடவிய விபூதி கலையாவண்ணம், வஸ்திரமணியாமல் வெற்றுடம் போடிருக்கும் அன்பர்களையும் காண்கின்றோம். இந்த அநியாயத்தில் அறிவு செலுத்தி தேச மக்களைச் சீர்திருத்துவது பெரிய தர்மமாகும்.

அறிவு வளர்வதற்கு நம் லோக நாயகனாகிய பகவன் புத்தருடைய புநிதமான உபதேசத்தில் பங்கு பெற வேண்டும். அவர்தான் நமது மூட பழக்கத்தையும், நமது பரிதாப கரமான செய்கைகளையுங் கண்டு, தனது எலா சுகபோகங் களையும் விடுத்து, இரந்துண்டு நமக்கு நன்மையை உபதேசித்து, பரிநிர்வாணமானார். அந்த நிக்ஷயக் கடவுளைக் கைவிட்டு நாமடைந்துள்ள அவமான மிவ்வளவென்றோத இயலாதாகையால், அன்பர்கள் இனியேனும் நமது நாட்டுக் கடவுளாகிய பகவன் புத்தருடைய திவ்ய உபதேசத்தைக் கைக்கொண்டொழுக சுதேச தெய்வ சமதர்ம தூதர்கள் வேண்டுகின்றோம்.

** விபூதி ஆராய்ச்சி முற்றும்.**

# அரிச்சந்திரன் பொய்கள்

அரிச்சந்திரன் பொய்கள்

“அரிச்சந்திரன் மெய்யனென்னுங் காதையும் பொய்யனான விவரமும்” “அரிச்சந்திரன் நிஜாநுபவசாரமும்” அடங்கியுள்ளது.

திருவாளர்கள் க. அயோத்திதாஸ பண்டிதர் ம. அரங்கசாமி பண்டிதர் எழுதியவைகள்

ஐந்தாம் பதிப்பு

கோலார் தங்கவயல், ஆண்டர்சன்பேட்டை,

ஸ்ரீ சித்தார்த்தா புத்தகசாலையாரால்

வெளியாக்கப்பட்டது

1950

> “பொய்யுடைய ஒருவன் சொல்வன்மையினால்
> மெய்போலும்மே மெய்போலும்மே!”

சத்திய பாஷ அரிச்சந்திரன் கதைகளின் சாராம்சம் நமதன்பர்கள் ஒவ்வொருவருக்கும் விளங்கி யிருந்த போதிலும், அப்புராணம்

ஏற்பட்ட விதத்தையும் அதினந்தார்த்தத்தையும் இவ்விடம் விளக்கி வைக்க வேண்டிய கடமையுடையோரா யிருக்கின்றோம்.

அதேனென்றால் இந்தியாவில் இருந்த மேதாவிகளெல் லாம் கட்டி வைத்தது இந்திர வியாரமாகும். அவைகளுக்கு அதிபதிகள் பிராமணர், அந்தணர் எனக் கூறும் அறஹத்துக் களே. அவர்கள் இல்லறத்தை முற்றுந் துறந்திருப்பவர்கள். கல்வியற்ற குடிகளுக்கு கல்வியும், நீதியற்றவர்களுக்கு நீதியும் போதித்து மக்கள் சீர்திருத்தக்காரர்களாக விளங்கியிருந்தார்கள். இவர்களைக் காணும், ஏழையும் தனவானும் வணங்கி விவேக வழிபாடடைவது அக்கால வழக்கமாயிருந்தது. இப்படி யிருந்த நம் இந்திரர் தேசமாகிய பாரத பூமியில், ஆரியர் - வடமிலேச்சர் என்னும் ஒரு கூட்டத்தார் குடி புகுந்து நமது குருக்களுக்கிருந்த மேரை மரியாதையைத் தாங்கள் பெற்றுக்கொள்ள கல்வியற்ற சிற்றரசர்களையும், குடிகளையுமணுகி நாங்களும் அறஹத்துக் களென்று பொய்ச்சொல்லி தங்கள் பெண்டுகளைக் கூட்டிக் கொடுத்து அரசர்கள் புத்தியை விபசாரத்திற்குள்ளாக்கி பாழ்படுத்தித் தங்களையும் பிராமணர்களென்றெவரும் வணங்கி வரத்தக்க வழிகளைச் செய்துக்கொண்டார்கள். அவர்கள் போதனைக்குள்பட்டவர்கள் தான் இந்துக்கள். அவர்களை நிராகரித்தவர்கள் தான் பௌத்தர்கள். அப்பௌத்த மேதாவி களைத்தான் அக்காலத்தில் பறையர்களென்று தாழ்த்தினார்கள் அக்கால் நாங்கள் பறையர்களல்ல! பௌத்தர் களே என்று

தர்க்கித்ததினால், பௌத்தர்கள், ஆம் என்று ஒப்பிக்கொள்ளும் பொருட்டு நந்தன் என்னும் பறையனொருவ னிருந்தான் என்று எப்படி ஒரு கதை எழுதி வைத்திருக்கின்றார் களோ! அப்படியே பறையனென்னும் பெயரைப் பரப்புவதற் காக காசியம்பதியில், வீரவாகு என்னும் ஒரு தோட்டிப் பறையன் சுடலையில் பிணங்களைச் சுடுவதும், குழி வெட்டியா னாகவும், வரும் பிணங்களின் வாய்க்கரிசியும், முழந்துண்டும் வாங்கிக் கொண்டிருந்தானென்றும் கதை எழுதி பேதையர்களை ஏமாற்றி வருகின்றார்கள்.

இத்ததைய ஏமாற்றலால் நம் தமிழுலகமானது இன்னும் நசிந்து நாசமடைவதற்கே, மெய்யை மெய்யென்றுரைக்க வெட்கப்பட்டு வருவதைக்கண்டு மனமாறாதவிதமாய் நம் நாட்டில் நம் தமிழர்களாகிய திராவிடாதி திராவிட குலமயக் கொழிக்கும் பொருட்டாய், அன்னிய தேசத்தானுக்காக தன் பெண்ஜாதியை ஒரு பார்ப்பானிடம் ஒப்படைத்த வீண் பிள்ளையான, அரிச்சந்திரத் தோட்டிக் கதையின் நியாயத்தை சீர் தூக்கிப் பார்ப்பாம் - ஏனெனிலோ இந்திரர் தர்ம அஸ்திவாரத்தில், பஞ்சசீலமே சிறந்ததாக விருக்க அவற்றுள் ஒரு சீலமாம் " மூசாவதாரவேரமணி சிக்கா பதம் சமாதியாமி" என்ற பொய் சொல்லாமை என்னும் ஒரு திருவாக்கை பார்ப்பாருக்கு மாத்திரம் கடைபிடித்தானென்பதால் அதின் உண்மை வெளிபடுவ தின்றியமையாதனவாம். அந்நூலின் சுத்த மெய்கருத்துக்கள் நம் தமிழர்கள் புத்தியில் புகுந்து மூளையை

சுத்திகரித்து, பறையரவர் பார்ப்பாரிவர் என்ற பாகுபாட்டை வெட்டி வீழ்த்தவேண்டும் என்ற புத்ததர்மமான சுயமரியாதை யை எல்லாரு மடைந் தின்புற்று வாழ எல்லார்க்கும் சொல்வது நல்லார் கருத்தாம். ஆகையால் இந்நூலின்படி இந்துக்க ளென்னும் மூகைகள் பார்ப்பானை யுயர்த்திக்கொண்டு பௌத்தர்களைத் தாழ்த்திய விவரத்தை யறிவார்களாக

அயோத்தியா புரியை அரசாண்டு வந்த திரிச்சங்கு மைந்தன் அரிச்சந்திர னென்னும் ஓர் அரசனிருந்ததாகவும், அவன் பொய்சொல்லா வாசகனென்றும் ஓர் புராணமியற்றி யிருக்கின்றார்கள். இதற்கு முன்னுள்ள சரித்திராதாரங் கிடையாது. இதின் உற்பவமோ சாலிவாகன சகாப்தம் 3446- ம் வருடத்தில் நெல்லூர் வீரனென்னும் ஆசுகவிராஜ ரவர்க ளியற்றியதாகக் குறிக்கப்பட்டிருக்கின்றது. இற்றைக்கு ஏறக்குறைய 406 வருடங்களுக்கு முற்பட்ட காலவரையாம்.

செய்யுட்களின் பேதங்களோ புராதனப் புலவர்கள் செய்யுட்களாகக் காணாமல் தற்காலப் புலவர்கள் செய்யுளாக விளங்குகின்றது. எவ்வகையிலென்னில் செந்தெண் மெயுடைய அறஹத்துக்களை வடமொழியில் பிராமணர்க ளென்றும், தென்மொழியில் அந்தணர்களென்றும் பூர்வச்செய்யுட்களில் வழங்கி யிருக்கின்றார்கள் இவ்வரிச்சந்திரபுராணத் தமிழ்ச் செய்யுளுள் பிராமணனெனக்

கூறியிருக்கின்றார்கள். இதனால் அரிச்சந்திர புராணம் நவீன கதையேயாகும்.

** நகரச்சிறப்பு - பாட்டு 7.**

கிள்ளை பாடுவ கீதங்கள் சாரிகைப்
பிள்ளை பாடுவ வேதம் பிராமணர்
கொள்ளை பாடுவரின்னிசைக் கோதையர்
வள்ளை பாடுவர் மன்னவன் வண்மையே.

இப்புராணச் செய்யுட்களிற் சிலது அவர்கள் மதசம்மத மாகவோ, ஜாதியாசாரப்படியோ, மாடுகளை நெருப்பிலிட்டுக் கொன்று சுட்டுத் தின்னும்படியானவர்களாகவும், கொலையாளர் களாகவும் காட்டிக்கொள்ளாமல், இந்திய தேச தெய்வ சுயமரி யாதையான பௌத்த தர்ம காவியச் செய்யுட்களைப் பார்த்துக் கொண்டே இந்த கொலையாளர்களும் யோக்கியரென்று பஞ்சசீலத்தைப் பரக்க பாடியிருக்கின்றார்கள். ஆயினும் இந்நூல் பொய்ப்பாதகங்கொண்ட கதையேயாகும்.

** நாட்டுச்சிறப்பு - பாட்டு 6.**

கள்ளங் கொலைகப் புலைகாம மென்றைந்து மற்ருர்க்
குள்ளந் தெளிந்தோர் தருமுத்தமதான மென்னப்

பள்ளந் திடர்மால் வரைகானகப் பக்க மெங்கும்
வெள்ளம் பெருகிப் பரந்தோடி விரைந்த தன்றே.

பஞ்சமா பாதகங்களை யனுசரித்துக்கொண்டு நாங்கள் உயர்ந்த ஜாதி இந்துக்கள்; எங்கள் திரிமூர்த்திகளும் முப்பத்து முக்கோடி தேவர்களும் நாற்பத்தெண்ணாயிர ரிஷி முதலியவர் களெல்லாம் அநுசரிக்காத மெய்யை இந்த பார்ப்பானுக் கடிமையான சுயமரியாதையற்ற அரிச்சந்திரன் கைக்கொண்டா னென்று ஏமாற்றி வைத்திருப்பவர்களின்னம் என்ன செய்ய மாட்டார்க ளென்பதைப் படிப்பவர்களே அறிந்துக் கொள்வார்களாக.

ஒரு நாள் தேவருலகிலே இந்து மத தேவேந்திரன் தன் சபையாரை நோக்கி பூவுலகில் பொய் சொல்லா வாசகன் யாராவ துண்டோ என்று வினவினான். சபையோர் அமைதி யாக இருக்கும் போது வதிஷ்டமஹா முனியானவர் பொய்யிலா வாசகன் உலகிலில்லை என்று எண்ணக் கூடாது, யாராவது இருப்பார் என்றார். உடனே விஸ்வாமித்திரர் எழுந்து உலகில் மெய்கூறத்தக்கவன் ஒருவனுமில்லை என்றார். இதனால் வதிஷ்ட ருக்கும் விஸ்வாமித்திரருக்கும் ஓர் தர்க்க முண்டாகி உலகில் அயோத்தியாபுரியை அரசு செலுத்தி வரும் அரிச்சந்திரன் என்னு மரசன் பொய் சொல்லா வாசகனென்று வதிஷ்டர் உறுதி கூறினாராம். அதின்பேரில் விஸ்வாமித்திரன், அரிச்சந்திரனை சோதிக்க

எத்தனித்தானாம். அவன் பொய் சொல்லாமலே பார்ப்பார்களுக்காக பல துன்பங்களை அனுபவித்து, இந்து மதஸ்தர்களுக்கு மாத்திரம் பொய்சொல்லா வாசகனாக விளங்கினானென்று அவன் பெயரில் எழுதியிருக்கும் புராணத்தில் விரித்துரைத் திருக்கின்றார்கள். இன்னமும், தேவருலகில் இவ்விஷயம் நடந்தபின் விஸ்வாமித்திரன் மண்ணுலகிற்கு வந்து தம்மைக்கேட்ட முனிவர்க்கு நடந்ததை மறைத்து மற்றொன்றை புளுகிவிட்டாராம்.

** வஞ்சனைக்காண்டம் - பாட்டு 5, 6**

கொற்ற வாசவன் கூறிய மாற்றமும்
மற்றொரு வாய்மை வசிட்ட னுரைத்ததும்
உற்ற வாறு முணர்த்துதலின்றியே
கற்றொரு வஞ்சனைக் கட்டுரைக் கூறுவான்.

தெரியு நீண்மறைத் தேவர வைக்கணே
பெரிய மாதவர் பேசிய வேள்வியில்
அரிய தொன்று முடிக்கும் வாவினால்
கரிய வோலக் கடற்புவி யெய்திேனேன்.

பொய்யைக் கண்டு பிடிக்க வந்த கௌசிக முனியே பொய்யைச்சொல்லி வந்தானென்றால் இந்நூல் மெய்யென்பது எப்படி? தேவருலகில் பல பெரியயாக முறைகளைப் பேசினார் கள்

அதிலொன்றை முடிக்க மண்ணுலகம் வந்தேன் என்றாராம். முனிவன் பொய் மொழியும் போது அரசன் மொழிய ஆக்ஷேபமென்னை? அறியுங்கள்.

பின்பு விஸ்வாமித்திரன், தாம் யாகஞ்செய்யப்போவதாய் பொய்ச்சொல்லி பெரிய தனக்குவியலைத் தாமே கேட்டதாக முனிவர்களுக்குக் கற்பித்து அரிச்சந்திரனிடம் அனுப்பினானாம். முனிவர்களாகிய பார்ப்பனர்கள் போய்க் கேட்டபடியே விஸ்வாமித்திரனுக்கு தேவையான போது அவர் குறித்துக் காட்டும் பெரிய தனக்குவியலைக் கொடுப்பதாக முனிவர் களிடம் அரிச்சந்திரன் ஒப்பிக்கொண்டானாம் இவ்வளவைப் பின்னே விவரத்தில் காண்க.

விசுவாமித்திரனின் முதல் பிறப்பு, அரச வம்சத்தில் தோன்றி தனது ஞான விருத்தியால் பிராமணனாக விளங்கிய தாய் அவர் சரித்திரங் கூறுகின்றது.
அத்தகைய புருஷன் சுவாசத்திலிருந்து இரண்டு பெண்கள் பிறந்தார்களாம். அவ்விரண்டு பெண்களே கறுப்பு நிறமமைந்த பறைச்சிகளென்று வரைந்திருக்கின்றார்கள்.

** சூழ்வினைகாண்டம் - பாட்டு 4**

பேச்சினிற்கிளிபோற் செங்கார் பெயர்ச்சியிற்பெடை போற்
செங்கை, வீச்சினின் மின்போற் சீற்ற மிகுதியான் முநிவன்
விட்ட, மூச்சினிற் பிறந்த ரண்டு மோகினி மாதராழி
நீச்சினினிலைத்து நிற்கு நீலமென் கொடி போனின்றார்.

இவ்விரண்டு பெண்களையும் தந்தையான விஸ்வாமித் திரன் கண்டு மிகக் களிப்படைந்து, பரதநாட்டியங் கற்பித்து தனக்கு பொன் கொடுப்பதாக வாக்களித்துள்ளவரசனுக் கிவ்விருவர்களையுங் கூட்டி வைக்கலாமென்ற எண்ணம் மேலிட்டவராய், அரிச்சந்திரனிடம் நீங்கள் போய் பாடி நடினஞ்செய்து, அவனுடைய வெள்ளைக் குடையைக் கேட்டு வாங்கி வாருங்கள் ஒருகால் கொடுக்க மறுத்தால், அவனுடன் கூடி சுகிக்க விரும்புங்களென்று கற்பித்து அவ்விரு பெண் களையும் அரிச்சந்திரனிடம் அனுப்பினானாம். அப்படியே அரசனிடம் போய் பெண்கள் வணங்க நீங்களாரென்றான் அரிச்சந்திரன். நாங்கள் விஸ்வாமித்திரரைச் சேர்ந்தவர்கள் எங்கள் குலம் நீச்ச ஜாதி. ஆனால் வீணைப்பாடத் தெரியுமென்று சொல்லி, பாடி நடித்தார்கள். எல்லாரும் சந்தோஷ மடையவே, இவர்களுக்கு பரிசளிக்க அரிச்சந்திரன் அனுமதித்ததை யறிந்த பெண்கள் நாங்கள் நாடி வந்தது உமது வெற்றிக் குடையே. அதைக் கொடுத்தருளுமென, உடனே அரசன், அது பரம்பரை யாக வருவது அதைத் தவிர்த்து வேறு குடையைக் கேளுங்கள் கொடுப்பேன், என்றான்.

** சூழ்வினை காண்டம் - பாட்டு 33.**

பழிவழி யெழுதா நீதிப் பாலுவின் குலத்து வேந்தர்
வழிவழி வந்தக் கவிதையை வழங்க மாட்டேன்
விழிவழி கண்டவேறு கவிதையை விளம்பி லுங்கள்
மொழிவழி தருவேனென்று மொழிந்தனன் மன்னர் கோமான்

இவ்விஷயத்தைக் கேட்ட இரு பெண்களும் அரசனை நோக்கி உமது வெள்ளைக் குடையைக் கொடுக்க மன மில்லையேல் எங்களை விவாகஞ் செய்துக்கொள்ளுமென் றார்கள். உடனே அரசன் சினந்து தூஷித்து அவ்விரு பறை மாதர்களையும் விரட்டித் தள்ளும்படிச் செய்வித்தானாம். அரசனது நீதி இதுவோ? பார்ப்பானுக்கு மனங் கோணலின்றி மலை போன்ற திரவியத்தைக் கொடுக்கத் துணிந்தவனுக்கு இக்குடை பெரிதாகி விட்டது போலும் மெய்யென்பதெது பொய்யென்பதெது வென்று கண்டு வாதித்திருக்கின்றார்களா வென்றாராயுங்கால், பார்ப்பான் கேட்ட தெதுவானாலும் எவ்வளவானாலும் பல கஷ்டங்களை யநுபவித்து கொடுத்து விடுவதும் மெய்யென்பார்கள். பறையர் கேட்ட தெதுவானாலும் அதைக் கொடாமல் மறுத்துவிட்டால் அதுவும் மெய்யென் பார்கள்.

பெண்களிருவரும், சேவகர்க்கு பயந்து, கையிலிருந்த வீணையை அரசன் முன்னே போட்டு விட்டு ஓடிப்போய், தன் தந்தைக்குத்

தெரிவிக்க, கோசிகன் கோபித்து அரிச்சந்திரனிடம் வர, அவன் இவரைக்கண்டு கோபமாய் வந்தீர்! உம்மோடு சண்டை செய்ய வல்லனல்லேன் என்று கால்களைப் பிடித்துக் கொள்ள, பெண்களை மரியாதையற்றுத் தள்ளும்படிச் சொல்லியும், மன்னிப்புக் கேட்கின்றாய் பொய்யனே என்ற கருத்தாய், அவன் பிடித்திருந்த கால்களை உதறிக்கொண்டு முடி மேல் உதைத்து என் புத்திரிகளை இப்டி விரட்டி அவர்களைத் துன்பஞ் செய்யலாமோ என்றார் விஸ்வாமித்திரர் அப்போது அரிச்சந்திரன், சொல்லுகிறான்.

** சூழ்வினை காண்டம் - பாட்டு 55.**

இக் கருங்குழ லேழையர் தம்மை நின்
மக்க ளென்பது ணர்ந்தில் மாதவ

அவ்விரு பெண்களும் உமது மக்களென்று தெரியாது என்றார் இது என்ன விந்தை! பெண்கள் வந்தவுடன் அரிச்சந்திரனே அவர்களைப் பார்த்து,

** சூழ்வினை காண்டம் - பாட்டு 21.**

சொல்லிய மாற்றங்கேளாத் தோன்றலும் வியந்து நோக்கி
வல்லிநீர் யாரே தூர்தான் வந்தவா றேதீண் டென்றான்.

இவ்விதமாக நீங்கள் யார் எந்த ஊர் வந்த காரண மென்னை என்று கேட்டிருக்க, அதற்கு அவ்விரு பெண்களும்,

** சூழ்வினை காண்டம் - பாட்டு 22**

வேதமா முனிவன் வைகு மேதகு சாரனின்றுன்
பாதமே பணிந்து நோக்கு மருத்துயிற் பதறி வந்தோம்.

நாங்கள் விஸ்வாமித்திரரிருக்கிற மேம்பாடான சார்பிலே கூடி இருப்பவர்கள். உம்மைக் கண்டு எங்கள் வெகுமதியைப் பெற வந்தோமென் றுரைத்திருக்க, இங்கு அரிச்சந்திரன், அப்பெண்கள் உமது புத்திரிகளல்ல வென்பது, பொய்யல்லோ? இவராமோ மண்ணுலகில் பொய்சொல்லா வாசகன். மற்ற இந்துக்களெல்லாம் பொய்யராயிருந்தார்களோ?

பின்னும், கௌசிகன், அரிச்சந்திரனுடைய பேதைமை யைக் கண்டு, மன்னிக்கும்படி கேட்டுக்கொள்பவனே! நல்ல பாடலால் கேட்டு மகிழ்ந்து பரிசளிக்காமல் விரட்டிய குற்றத்தைப் பொறுத்துக்கொள்கிறேன். என் மக்களை நீ விவாஹஞ் செய்துக்கொள்வாயா? என, அதற்கு நீச ஜாதியாரு டனே அரசர்கள் கூடுதல் தவறென்று அரிச்சந்திரன் உரைக்க, மலைகளில் திரியும் வதிஷ்டன் சபிக்க நீசனான திருச்சங்கு மகனே! நீச்சனான நீ எம்மக்களோடு கூடுதல் நீதியல்லேவா? இப்போது என்னை, அன்னை தந்தை சுற்றமென் கிறாயன்றி என்னுரையை (என் மக்களை)க்

கொள்வதில்லையே! என்றார் கோசிகன். அப்போது அரிச்சந்திரன் கூறுகிறான்.

** சூழ்வினை காண்டம் - பாட்டு 75.**

கண்ணை வேண்டினும் வாழ்வுட னீகுவன்
மண்ணை வேண்டினும் வாழ்வுட னீகுவன்
பண்ணை வேண்டிய செஞ்சொற் பறைக்குலப்
பெண்ணை வேண்டிலன் யானென்று பேசினான்.

சுவாமி என், கண், மண், அரசு, வாழ்வு எதைக் கேட்டாலும் கொடுத்து விடுவேன். உம்முடைய பறைமாதர் களை யான் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று நீர் கேட்டதை யான் ஒப்பி உத்தரங் கொடுக்கமாட்டேன் என்றான். உடனே விஸ்வாமித்திரன் அரிச்சந்திரனைப் பார்த்து உமது அரசு முழுதும் எமக்கு கொடுப்பதாய் சொல்லியபடியே, யாம் ஏற்றுக்கொள்வோம் என்றார். அப்போது, சுவாமி உமது பெண்களை யான் ஏற்றுக்கொள்ள மாட்டேன் என்றும், தான் சொன்னபடி தன்னுடைய நாடு முதலியதை அப்போதே முனிவருக்கு தாரை வார்த்துக் கொடுத்து விட்டானாம்.

** சூழ்வினை காண்டம் - பாட்டு 78.**

அந்தணாளனை நோக்கிய வண்ணலும்
உந்த மக்களுறுநலன் வேண்டிலேன்

எந்த நாடு மிருநிதிக் குப்பையும்
தந்த னன்மொழி தப்புவ தில்லென்றான்.

** சூழ்வினை காண்டம் - பாட்டு 86.**

குடைதந் தேனீன் கொடிதந்தே னென் குழுவாய்
படைதந் தேனற்கனகத்திண்டேர் பரிதந்தேன்
தடைதந் தேநின் றடியே னேகத் தவனே
நீ விடைதந் தேகென் றடிமேற் பரவி வீழ்வானை.

இவ்விதமாக பார்ப்பானுக்கு நாடு, நகரம் யாவும் வலியக் கொடுப்பே னென்றுறுதி புகன்ற அரிச்சந்திரன் தன் தேயத்தில் நாட்டியுள்ள வெற்றிக்குடையை, பறைமாதர்களுக்குக் கொடுக்கப் பிரியப்படாமற் போனானே இதில் அரிச்சந்திரன் பொய் சொல்லாதவன், கௌசிகன் பொய் கண்டு பிடிக்க வந்தவன், அரிச்சந்திரன் சொன்னது “கேட்டாலுங் கொடுப் பேன்” என்றுதான் இதில் கொடுத்துவிட்ட உறுதி மொழியில்லை. எப்படி கௌசிகன் “நீர் கொடுத்துவிடுவதாகக் கூறிய நாட்டை நாமேற்றுக்கொள்ளுகிறோம்” என்றார். அந்த சொல்லைக் கேட்டு அரிச்சந்திரன் அதெப்படி "நாம் கொடுப்பதாகச் சொல்லிய அரசை பின்னும் பொய்க்க மாட்டோம் என்றார். இதில் முனியும் அரசனும் பொய்யாக வில்லையா? விஸ்வாமித்திர முனியோ பெண்களுக்கு நடினமும் பாடல்களுங் கற்பித்து அரசர்களிடம் விபசாரத்திற் கனுப்புகிறவர். அவர் பொய் சொல்லக்கூடும்.

அரசனாயிருக்கும் அரிச்சந்திரனே பொய் பேசினானென்றால் குடிகள் மெய் பேசி வாழ முடியுமோ? இவ்விஷயத்தில் அரிச்சந்திரன் பொய் கூறவில்லை என்று எவரேனுந் துணியக்கூடுமோ?

பின்னும் பாருங்கள் இவ்விஷயம் காட்டில் நடந்தது இவ்வரசு மாற்றத்தை, நகரில் ரூபித்து விடுவதற்காக, அரிச் சந்திர பிச்சைக்காரனும், விஸ்வாமித்திர அரசனும் நகரத்தில் வந்து சேர்ந்து, அரசனான விஸ்வாமித்திரன் யாவுமேற்றுக் கொண்ட பிறகு, அரிச்சந்திரனும் அவன் மனைவியும் குமாரனும், பொறுத்து மந்திரியும் நகரை விட்டு வேற்று நாடேகுங்கால் மந்திரிப் பிரதானிகள் யாவருஞ் சூழ்ந்து அரசனை நோக்கி மன்னனே மறுபடியு மெக்கால் வருவீரென்று வினாவினார்கள். மன்னன் அவர்களை நோக்கி நான் மறுபடியு மின்னாட்டில் வரமாட்டேனென்றுறுதி வாக்களித்தான்.
நகர் நீங்கிய காண்டம் - பாட்டு 14.

அக்காலத் தமைச்சரெல்லா மடல்வேந்த னடிபோற்றி
    யரசே நீமீண்
டெக்கால மெழுந்தருள்வ தென்றுரைக்க வாங்கவரை
    யிருக ணோக்கி
முக்காலங்களுமுணரு முனிவனுக் கின்று
    யான கொடுத்த மூதூர் தன்னில்

எக்காலமும் வருவதில்லை யென்றா
னமைச்ச ரெலா மேங்கி வீழ்ந்தார்.

இவ்விதமாக யாவரும் அறிய முனியவனுக்குக் கொடுத்த நாட்டில் பின்னும் வரமாட்டேனென்று உறுதி மொழி கூறிய அரிச்சந்திரன் மறுபடியும் நாட்டுள் வந்து சேர்ந்தான்.

** மீட்சிக் காண்டம் - பாட்டு 67.**

வள்ளலை முனிவன் கூட்டி வருகின்ற வாறு கேட்டுப்
பள்ளமுற் றும்பர் வெள்ளம் பாய்கின்ற பரிசே போல
உள்ளமு மகிழ ரோமஞ் சிலிர்ப்புற வூரிற் சேனை
வெள்ளமு மரசர் தாமும் வியந்தெதிர் கொண்டன்றே.

இனி ஊருள் வரமாட்டேனென்று பின்னு மவ்வூருள் வந்தது பொய்யாகாதோ? இந்து சகோதரர்களே! பொய்ச் சொன்னவனை மெய்ச் சொன்னானெனன் பீரேல், நீங்கள் மெய் சொல்ல வெட்கி பொய்ச் சொன்னதாகுமே! ஆதலால் அரிச்சந்திரன் பொய்ச்சொன்னானென்று நீங்கள் மெய் சொல்லி வெளிவாருங்கள்! இதுவே நம் தேச தெய்வமுறைமை.

காட்டில் அரிச்சந்திரன் முதல் நால்வர்களும், பொய் சொல்லக் கேட்ட முனிவனுக்கு சொல்லிக்கொடுத்த நாட்டைப் பற்றி விசனித்துக்கொண்டு போகும் போது, கௌசிகனென் னும்

விஸ்வாமித்திர ராஜ பார்ப்பான் குறுக்கிட்டு, அரிச்சந்திரனே! முன்னே என் பெண்களிடத்தில் நன்றாக பாட்டுக் கேட்டு அவர்களுக்கு ஒன்றுங் கொடாமல் விரட்டி விட்டாய். (பின்னே நீயே நாட்டைக் கொடுத்து விட்டாய்) இப்போது என் மேல் சலித்துக்கொள்கிறாய் உன் குற்றமெல்லாம் பொறுத்துக்கொண்டேன். நீ கொடுத்த ராஜ்யத்தை யானே உனக்குக் கொடுத்துவிடுகிறேன் பெற்றுக்கொள்ளுமென, அரிச்சந்திரன் விஸ்வாமித்திர வரசனைப் பார்த்து,

** நகர் நீங்கிய காண்டம் பாட்டு 20.**

ஒருத்திடினும் வெறுத்திடினு முனக்களித்த
வரசுரிமை யொருகாலத்தும்
மறுத்தினியான் வாங்கேனென் றெடுத்துரைத்தான்
மன்னன் முனி வாட்டமுற்றான்.

சுவாமி யான் உனக்கு கொடுத்த அரசையினி ஒரு போதும் வாங்க மாட்டேன் என்றான். இந்த மெய்யைப் பாருங்கள் எப்படி நாட்டுள் வரமாட்டேனென்று பொய்ச் சொல்லி நாட்டுள் வந்தானோ, அப்படியே நாட்டை வாங்கமாட்டேனென்று பொய்ச்சொல்லி பின்னு மதே நாட்டைப் பட்டங்கட்டிக் கொண்டான்.

** மீட்சிக் காண்டம் பாட்டு 70.**

பொன்முடி சூட்டி வாழ்த்திப்

புரந்தான விசும்பிற் போனான்.

இதனாலாவது அரிச்சந்திரன் பொய்யனாகானோ உண்மைக்குத்தாரமாக பொய்ச் சொல்லியவனை ஒரு கூட்டத்தார் நியாய வரம்பு கடந்து, வன்மை மிகுதியால் மெய்ச் சொன்னா னென்றால் அக்கூட்டத்தார் போய் சேரும் மோக்ஷம் இதுவென்று உறுதி கூறப்போமோ? சகோதரர்களான இந்துக்களே! நியாயத்தைக் கைக்கொள்ளுங்கள்.

பின்னும் பாருங்கள் விஸ்வாமித்திரனானவன் அரிச் சந்திரனைப் பார்த்து நீ முன்னமே எனக்கு யாகஞ்செய்யக் கொடுப்பதாக வாக்களித்துள்ள பொன் திரவியத்தை இப்போது கொடுத்துப்போக வேண்டுமென்று விஸ்வாமித்திரன் சொல்ல, எல்லாமும்மிடமே உண்டென்றானாம் அரிச்சந்திரன். அப்படி யல்ல! அது தனியே வரவேண்டுமென, அப்படியே கொடுப் பேன், அதின் பிரமாணமென்ன வென்று அரிச் சந்திரன் கேட்க, எனது யாகத்திற்கு வேண்டியது ஒரு பெரிய யானையின் மீது ஒரு வாலிபன் ஏறி பலங்கொண்ட மட்டும் கவண்கல்லை உயரத்தி லெறிந்தால் அது எவ்வளவு மேலே போகுமோ அவ்வளவு பொன் வேண்டுமென்று கேட்டார்.

** நகர் நீங்கிய காண்டம் பாட்டு 24**

உள்ளியதீ வினையனைத்துந் தனித்திருத்தி வகைவகையே
யுரைத்து நீ போய்
அள்ளியிடும் பொருள்கவரா தானையின் மேற் கவண்சிலை
போ, மளவுந் தந்தால்
கொள்ளுதிநீ பின் போன கூலியையும் பெறுதியெனக்
கூறித் தீய
வெள்ளிதனை யுடன் கூட்டி மீண்டு மழைத் தொருவாய்
மெய், விளம்ப லுற்றான்.

யாதொரு காசும் கையிலில்லாத அரிச்சந்திர ஏழை இவ்வளவு பொன் கொடுப்பதாக ஏற்றுக்கொண்டானென்றால் இவன் வெற்றிக்குடையைக் கொடாத சூக்ஷி என்னையோ? ஆதிதிராவிடர்களே உங்கள் மயக்கத்தினின்று விடுபடுங்கள். பிராமணனின் யாகத்திற்கு வேண்டிய பேராசைப் பொருளின் பரிமாணத்தைப் பாருங்கள். ஓர் யானையை நிறுத்தி அதன் உயரம் திரவியத்தைக் கொட்ட வேண்டுமானால் எவ்வளவு சுற்றளவு திரவியத்தைக் கொட்டினால் யானையின் உயரங் குவியுமென்று கணக்கெடுத்துக் கொண்டால் யானையின் மீதோர் மனிதனின்று கவண்கல் லெறிந்து எவ்வளவு உயரம் போகின்றதோ அவ்வளவு திரவியங் கொட்ட வேண்டுமானால் எவ்வளவு சுற்றளவு திரவியங் குவியவேண்டும். அதுவுமன்றி, கவண்கல் இவ்வளவு உயரஞ் சென்றதென்று கூறும் நூல் ஆதாரமெது இத்தகைய நிலையற்ற

உயரத்தில், பரிமாணமற்ற திரவிய குவியலை பார்ப்பான் கேட்டானாம். அப்பணக்கு வியலை எவ்விடங் கொட்டி அளவு பார்ப்பது? இதுதான் பொய் சொல்லா அரிச்சந்திர ராஜா அளப்பு போல் தோற்றுகிறது.

இதிலுண்டான உண்மையைப் பாருங்கள் அரசனா யிருக்கும் போது பொன் கேட்டான் அவன் கொடுப்பதாக சொல்லிய பொன் அவன் களஞ்சியத்திலிருந்தது அந்த களஞ்சியத்தை விஸ்வாமித்திர புலையராஜனிடம் ஒப்படைத்த பின்னர், அப்பொன்னைத் தனித்துத்தர கேட்டதெந்தமுறை? நீதி நெறி தங்கியவன் முனியானாலன்றோ முற்று முணர்ந்திருப்பன். இவனைக் கடவுளெனக் கைத்தொழுத அரிச்சந்திரனாகிய ஏழையும், உமக்கு வாக்குறுதி கொடுத்ததை மறுக்கமாட்டேன் நீர் சொல்வது சாத்தியமே என்று நகருள் கூறினான். இவன் மெய்யனானவனாயிருந்தால், உமக்குக் கொடுத்த பொன் உம்மிட மொப்படைத்த களஞ்சியத்திலுண்டென்று சொல்லாமல், பிராமணனைப் பொய்ப்படுத்துவதிலும், அவனுக்கு ஞாபக மூட்டுவதிலும் மேன்மைத்தங்கியது. நாமே பொய்த்து போவது தான் என்று அவன் உத்தேசித்தான் போலும். மெய்யை ஒரு பொய்யன் ரூபகாரப்படுத்த முடியுமோ? இல்லை இதில் அரிச்சந்திரனெப்படி மெய்யுரைத்ததாகும்? எல்லாருமுணர்வார் களாக அரிச்சந்திரன் கொடுக்கிறேனென்ற பொன் விஸ்வாமித்திரர்க்கு கொடுத்த களஞ்சியத்தில் அடங்கினது. அரிச்சந்திரர்க்கு தெரிந்திருந்தும்

முனிவனுடைய கோபத்திற்கு பயந்து பின்னுமந்த யாகத்துப் பொன்னைக் கொடுப்பதாகச் சொன்னானாம்.

** நகர் நீங்கிய காண்டம் - பாட்டு 23.**

உன்னுடனே யுரைத்த பொருளுனக்கடியே
  னுகந்தளித்த வுரிமைச் செல்வந்
தன்னுடனே போன தெனாவுணர்ந்தேனா
  யினிமுனிவாற் றருவ லென்றே
நின்னுடனே யானுரைத்த சபதமினி
  மாறுவனோ நீயான் விட்டால்
பொன்னுடனே தருவனென்றான் புகரோனை
  யவன ழைத்துப் பொருத்தினானே.

இப்படி முனிவன் சாபத்திற்கு பயந்து சொல்லும் பொய், இந்துக்ளுக்கு பொய்யாகாது போலும். பறையர்கள் கேட்டதை கொடுக்காது, உதாரத்வ மாகும் போலும். இவன்தானோ சத்திய பாஷ அரிச்சந்திரன் இந்து மதத்தினரே! நீங்களெப்போது சத்தியத்தைக் கடைபிடிப்பது. இதில் அரிச்சந்திரன் கொடுத் திருப்பதைப் பின்னும் கொடுப்பேனென்பது, மெய்யா? பொய்யா? பாருங்கள். அரிச்சந்திரனானவன், தன் யாகத்திற்கு பொன் கொடுக்கி றேனென்று ஒப்பிக்கொண்ட பிறகு சுக்கி என்னும் பார்ப்பானை அழைத்து இவனிடம் முன் குறித்த அளவு பொன் எவ்விதமாவது

வாங்குவதோடு, நீ இவன் பின்னே நடக்கும் கூலியும் வாங்கும்படிச்சொல்லி அனுப்பினானாம். அப்படியே யாவரும் காசி பட்டணம் போய், அரிச்சந்திரன் தன் பெண்டு பிள்ளையின் தலைமேல் ஒவ்வொரு புல் சுமையை வைத்துத் திரிந்து விலைக்கூறி புல் சுமையோடு, மனைவியையும் மகளையும் ஒரு பார்ப்பானிடம், தான் யாகத்திற்குக் கொடுக்க வேண்டிய பொன்னளவுக்கு விற்றுவிட்டானாம். கூடவந்த சுக்கி பார்ப் பானும் பணம் பெற்றுக்கொண்டானாம். இந்துக்களே! அப்பணக் குவியலை எவ்விடங் கொட்டி அளவு பார்த்ததும் அல்லது அப்படியே தமது பாங்கிக்கு செக் எழுதிக் கொடுத்ததும், அல்லது பாங்கியிலிருந்து மற்றொரு பாங்கிக்கு அப்பணக் குவியலை மாற்றிவிட்டதும் தெரியவில்லை. இப்படி பொய்யை பொய்யால் வெல்ல பொய் பந்தயங் கட்டி நின்ற இந்துக்களும், அவர்களெழுதிய நூல்களும், மெய்யாயிருக்குமென்ப தெந்த அரசாங்க முறையோ? தெரியவில்லை.

சுக்கி பார்ப்பான் விஸ்வாமித்திரனின் பொன் யாவும் பெற்றுக்கொண்டு அரிச்சந்திர பிச்சைக்காரனைப் பார்த்து யானுன்னுட னலைந்ததற்கு கூலி வேண்டுமென, அரசனப் படியே தன்னை விற்றுக்கொடுக்கும்படி மந்திரியிடம் சொல்லி சுக்கிர சாமியாரை யழைத்து, காசி பட்டணதிலே தன் தலைமேல் புல் சுமையை அரிச்சந்திரன் சுமந்துக்கொள்ள மந்திரியானவன் அரிச்சந்திர ஏழை மனிதனை விலைக்கூறிவர,

** காசிக் காண்டம் - பாட்டு 51.**

வார மேதகு மந்திரி மன்னனைத்
தூரமேவிலை கூறிய சொற் கேளா
வீரவாகு வெனும் பெயர் மேவினோன்
சூர நீர்மைப் புலைமகன் றோன்றினான்.

இதைக் கேட்டு கடை வழியே செல்லும் வீரவாகு என்னும் பறையன், குடங்கள்ளைக் குடித்துவிட்டு, காவடியில் மாட்டுத் தோலை வைத்துக்கொண்டு விற்பனையாளிடம் வந்து காவடியை கீழே இறக்கிவிட்டு இடையிலிருந்த துண்டு துணியால் வாயை மூடிக்கொண்டு எல்லா இழித்தொழிலும் செய்யச்சொன்னால் செய்வாரோ? என்னைப்போன்ற இழி ஜனங்களுக்கு விற்பதுண் டோ? என்ன விலை கொடுக்க வேண்டும் சொல்லுமென்று கேட்க. அரிச்சந்திரன் மந்திரியைப்பார்த்து இவனிடமே என்னை விற்றுவிடும் என்றான். அப்படியே மந்திரி வீரவாகு பறையனைப் பார்த்து,

** காசிக் காண்டம் - பாட்டு 55.**

ஆயினன்றென் றமைச்சனு மவ்வயின்
மேவினனினி விற்ப லுனக்கென்றான்
ஈயு நல்விலை யேதனப் பொன்பதி
னாயிரம்மென் றமைச்சனி யம்பினான்.

இவருக்கு பதினாயிரம் பொன் விலை கொடுப்பீரானால் அடிமைப் படுத்துவேனென, அப்பறையன் சம்மதித்து உடனே பொன்னைக் கொடுத்து வாங்கிக்கெண்டானாம். பொன் பார்ப்பானுக்கு சேர்ந்ததும், அரிச்சந்திரன் காலனென்னும், பறையனின் காவடியைத் தூக்கிக்கொண்டு போய் அவன் வீட்டில் வைத்துவிட்டு அவன் கூறியபடி, வாய்க்கரிசி மட்டும் தானேற்று, சுடுகாட்டில் காவலிருப்பதாக அரிச்சந்திரன் போய்விட்டானாம். பதினாயிரம் பொன்னுக்குப் புலையனிடம் அடிமையுண்ட அரிச்சந்திரன் தனக்குக் கிடைக்கும் வாய்க் கரிசியை சமைத்துண்ணாமல் சேர்த்து வைத்துக் கொண்டிருக்க, இவனைவிட்டு பிரிந்த மந்திரியும் வந்து சேர அவ்வரிசியை மந்திரியிடம் கொடுக்க, அவன் அரிசியை புல்லுடன் சேர்த்து பசுக்களுக் கூட்டி விட்டு, சாணத்தில் வந்து கோமியத்தில், சுத்தமான அரிசிகளை யெடுத்துக் குத்தி சமைக்க, அதை யுண்டிருந்தானாம் அரிச்சந்திரன்.

** காசிக் காண்டம் - பாட்டு 70.**

மண்டலத் திறைவ னுய்த்து வைத்தவாக் கரிசிதன்னைக்
கொண்டு போய்ச் சுரபிக்கீயந்து, கோமயத்துடனே வீழ்ந்த
தண்டுல மெடுத்துக் குத்திச் சமைத்தினி துதவ வச்சோ
றுண்டவருறைந்தார் பின்னை, யுற்றவாரெடுத்து வைப்பாம்.

இப்படி சுடு காட்டி லிருக்கும் போது இவன் பெண் ஜாதியாகிய சந்திரமதியை வெட்ட, இவன் யஜமானனான பறையனா லிவனுக்கு அனுமதி கிடைத்ததாம். அப்படியே அவளை வெட்டாமல், தன் கையிலிருந்த கத்தி சந்திரமதி கழுத்தில் மாலையாக விழுந்துவிட்டதாம். பின்பு வெட்ட வில்லையாம். வெட்டுவேனென்று கூறி வந்த அரிச்சந்திரன் வெட்டாமற்போனது பொய்யல்லவா? தேவர்களை கண்டு வெட்டாமல் விட்டானென்பாராயின் தேவர்கள் மெய் மொழியா ராவாரோ? இதில் இந்துமத தேவர்கள் பொய்யரா? அல்லது அரிச்சந்திரன் பொய்யனா? புத்தியுள்ள தமிழர்களே சீர்தூக்கிப் பாருங்கள். அவ்வரிச்சந்திரனது கதா கருத்தை யறிந்தொழுகல் அவசியத்திலு மவசியமாகும்.

** தெளிதல்.**

உலகத்தி லில்லாத ஒரு பொய்யை இந்துமத நூற்களிலே காணலாமென்பது உறுதி. இதை யாலோசனையா லறியலாம் இந்த அரிச்சந்திர புராணத்துள்ளே சந்திரமதிக்கு பிறக்கும் போதே கழுத்தில் சிவனால் தாலியிடப்பட்டிருந்ததாம். பிறக்கும் போது தாலியோடு பிறப்பது முறையாமோ? அப்படி முதலிலே தாலிகட்டியவன் அவள் கணவனாகானா? அவ்வழக்கத்தினாலோ! இன்றும் சிசுக்கல்யாணம் நடக்கின்றது. சந்திரமதியை கட்டிக்கொண்ட அரிச்சந்திரன் புனர் புருடனா கானா? தாலி கழுத்திலிருப்பது அரிச்சந்திர

னொருவருக்குத்தான் தெரியுமாம். அதனாலேயே அவளுக்கு இவன் தாலி கட்டாமல் போனான். ஒருவன் பெண்டீரை அழைத்து வருவதற்கும் இவ்விஷயத்திற்கும் பேதமென்ன? இந்த சந்திரமதி தன்குமாரன் பாம்பால் கொல்லப்பட்டா னென்பதை செத்துப்போனா னென்றொரு பொய்யும், தங்கள் அரசுரிமையில் நாட்டியமாடிய பறைச்சிகள் கேட்ட குடையைக் கொடுக்காதிருந்தும் கேட்டவர் களுக்கு மறுத்தில்லாத' நமக்கு இவ்விதியா என்று மறு பொய்யும், காசிராஜனிடம் இருமுறை உன் மகனை யானே கொன்றேன் என்று இன்னொரு பொய்யும் கூறியது சரிதானோ? பொய்யுள்ள வர்கள் பதிவிரதையோ? பொய்யில்லாதவர்கள் பதிவிரதை யோ? நீ மறைவாக அணிந்துள்ள தாலியை அரிச்சந்திரன் கட்டவில்லையே! அவனுக்கு நீ வாழ்க்கைப் பட்டது எப்படி? என்று கேட்டால், என்ன மறுமொழி கூறுவாள். இவளை சுமங்கலி என்று எப்படி மற்ற ராஜஸ்திரிகள் நம்பியிருப்பார்கள் இவள் பொய் சொல்லானுக் குடன்பட்டு, பிரத்தியக்ஷமாக, மூன்று பொய்களைச் சொல்லி யிருக்கிறாளே! இது எந்த முறை? பாம்பால் கொலையுண்டவனை செத்தா னென்பதும், குடையைக் கொடுக்காதிருந்தும், கேட்டவர்களுக்கு இல்லை யென்றோமா (அரசன்) என்பதும், காசி மன்னன் புத்திரனைத்தான் கொல்லாதிருந்தும், அரசன் முன் நானே கொன்றேனென்பதும், பொய்யல்லவோ? லோகிதாசன் கொல்லப்பட்டிருந்த இடத்தி லிருந்து எடுத்துப்போகும் போது, நரி,

செந்நாய் முதலிய மிருகங்களிருந்ததாம். ஆனால் குமாரனை கடித்துத் தின்றிருப்பதாக ஒன்றும் கூறவில்லை மார்பின் மேல் சாய்த்துள்ள பிணத்தை கழுகுகள் வந்து தாவி இரப்பையால் அடித்ததாம். இருளில் கழுகுகள் பரந்து வந்தடிக்குமோ? பேய் பிசாசு பூதமிவைக ளிருந்ததாம். இவைகள் உருவுள்ளதோ? சுடலையில் தன் பிள்ளைப் பிணத்திற்கு தேவர்களைக் காவல் வைத்து விட்டு விறகு பொருக்கப்போனாளாம். பறையன் தாலியை கண்டதால் தன் கணவனென் றறிந்தாளாம். தேவர்களை ஏவல் செய்யவைத்த வள் விஸ்வாமித்திரன் பொன் கொடுக்க இயலவில்லையே. நம் தாய் நாட்டில் வீரமற்ற மாதர்களி லிவளொருத்தி யாகும் இந்துக்களே! நீங்களிதற்கு நியாயங் கூறுங்கள். இந்த சந்திரமதி என்பவள் மிக்க வழகுடையவளென்று, அரிச்சந்திரனிடம் சில விபசார வியாபாரிகளாகிய தேவர்களென்னும் முனிவர் வந்து பிரஸ்தாபிக்க, அப்படியானால் அவர்களுடன் யான் கூடினா லல்லது உயிர்வாழ மாட்டேன் நீங்களாகிய முனிவர்களே! (பார்ப்பார்களே) இவ்விஷயத்தில் ஈடுபட்டு அவளென்னை வரிக்க சரிபடுத்துங்களென்று கால் கடுக்க மலைகளேறிச் செல்லச்சொன்னானாம். இதுதானோ இந்து முனிவர்கள் தர்மம் இப்படிப்பட்ட வேலையை இவர்களிடம் வாங்குவதுதானோ அரசரொழுக்கம். காமக் கடற்கரை யேறான் காசினி முற்று மெப்படி யாண்டிருப்பான். கூட்டி வைக்கும் பார்ப்பார முனிவர்களின் ஊழலில்

சிக்கியுள்ளவனது அரசு நீதியாயிருந்த தென் றொப்பற் கிடமில்லை. தேவேந்திரன் தன் சபையிலே, யாராவது உலகத்தில் பொய் சொல்லாதவனுண்டா என்றார். வசிஷ்டன் உண்டென்றும் கௌசிகன் இல்லை என்றும் சொன்னார்கள். இதில் ஒருவன் மெய்யன், ஒருவன் பொய்யன், உலகத்திலு மப்படியே பொய்யு மெய்யும் கலந்துள்ளது. தேவருலகு யெப்படி சிறந்ததாகும் தேவர்களுக்கு அரசன் தேவேந்திரன் அவன் இவ்விஷயங்களைக் கேட்டுக் கொண்டிருப்பானா? தேவருலகிலே நடந்த குதர்க்கத்தை பூமியில் வந்த விஸ்வாமித்திரன் மாற்றி யுரைத்தானென்றால் இது இந்து மத முனிவர்களின் முறைமையோ? இவர்கள் தானோ தேவருலகம் புகுந்தோடு பவர் ? விஸ்வாமித்திரன், விஸ்வநேசன், விஸ்வேசன் விஸ்வாக்ஷகன் முதலிய பெயர்கள் சுதேச தெய்வத்துடையதாயிருக்க, அத்தெய்வப்பெயரை ஒரு தூர்த்தன் ஏற்றிருந்தானென்றால் அவன் சங்க மருளிய முனியாகுவானோ? ஆம் என்றால், அவன் முறை தவறாகிறதே. இவன் சில பார்ப் பார்களை யனுப்பி அரிச்சந்திரனிடம் பொன் கேட்டானாம். அந்த மூட பார்ப்பார முனிவர்களும். இவ்வளவென்று குறிக்கவில்லை சுயமரியாதையற்ற அரிச்சந்திரனு மெவ்வளவு பொன்னென்று கேட்கவில்லை. அவர்கள் வேண்டு மென்றவுடன் இவன் சரியென் றொப்பினானாம் இதுதானா அரச நீதி.

விஸ்வாமித்திர னென்னு மரசன் தனது தபோபலத்தால் பிராமண நிலையடைந்து தனது நாசியின் சுவாசத்தால் இரண்டு பெண்களை

உற்பத்தி செய்தானாம். இங்ஙனம் சுக்கிலம் சுரோணிதமின்றி உற்பத்தியானதென்றால் விவேகிகள் ஏற்பதில்லை. அங்ஙனம் ஞானியாயதால் தனது சித்தினாலேற் படுத்தியிருக்கலா மென்றேற்கினும் சிரேஷ்ட முற்ற ஞானியாரின் சுவாசத்தால் தோன்றியப் பெண்கள் இழிந்த குலப் பறைச்சிகளாவரோ, கறுப்பு நிறம் வாய்க்குமோ இழிந்த குலம் பறைச்சிகளாகவும் கறுப்புநிறப் பெண்களாகவுந் தோன்றியது எதார்த்தமாயின் இரு பெண்களை யீன்ற விஸ்வாமித்திரனும் பறையனன்றோ அப்பறையனை குருவாக வணங்கி பொன் கொடுப்பதாக ஒப்பிக்கொண்ட அரிச்சந்திரனும் பறை யனன்றோ பின்னும் மானமற்று சுயமரியாதையும், அடிமையற்ற புத்தியு மின்றி நாட்டுக்கு நல்லரசன் வந்தாலும் தோட்டிக்குப் புல்சுமைப் போகாதென்பது போல் தன் மனைவி மகவு தலைமேல் புல் சுமை வைத்து காசி பட்டணத்தில் அவர்களை விலைக் கூறினவனொரு பறையனன்றோ ? அப்பறையனாகும் அரிச்சந்திர னும் புல் சுமையேற்று வெட்டியானுக்கு அடிமையாகி கொடுத்த பணத்தைப் பறித்துக் கொண்ட வெள்ளி யென்னும் அந்தணனும் பறையனன்றோ? இத்தியாதி உற்பவ தோற்றங்களை யுணராமல் அற்ப மதியால் பறையர்களென்னும் நூதனப்பெயரை பரவச் செய்தற்கும் அப்பெயரை ஏனையோர் இழிவாக மதித்தற்கும் இக்கட்டுக்கதை எழுதினார்க ளென்பதை எளிதிலறிந்து கொள்ளலாம். அதுவுமன்றி பறைச்சிகள் கேட்டக் குடையைக் கொடுக்காமல் சாக்கு போக்கு

சொன்ன மன்னன் பார்ப்பான் கேட்டவுடன் கொடுத்துவிட்டது பரிசாமோ. கேட்டதைக் கொடுக்கும் மன்னன் பறைச்சிகள் கேட்ட குடையைக் கொடுக்காமல் விரட்டியது பொய்யன்று பார்ப்பானுக்குக் கொடுப்பேனென்று சொன்ன வாக்குத் தவறாமற் கொடுத்தது மெய்யேயாம். இத்தகைய மெய் பொய் வாக்கியத்தினும் பறைப்பொய், பார்ப்பாரபொய், பறைமெய் பார்ப்பாரமெய் இருக்கின்றாப்போல் இரு பறைச்சிகள் கேட்டதைக் கொடாமல் விறட்டியதை பொய்யென் றேற்காமல் பார்ப்பானுக்குக் கொடுப்பேனென்று சொல்லிக்கொடுத்ததை மெய்யென் றேற்பதினாலேயாம்.

பறையரென் போர்களை யிழிந்தோரென வகுத்துவிட்ட படியால் அவர்கள் மெய்மொழிகளும் இழிவடையும் போலும், வேஷ பிராமணர்களை உயர்ந்தோரென்று வகுத்து விட்ட படியால் அவர் மொழிவது பொய்மொழியாயினும் உயர்ந்து போம் போலும். இத்தகைய உயர்வு தாழ்வினால் பறைச்சிகள் கோரிக்கையை மன்ன னேற்காமல் பார்ப்பான் சொல்லை யேற்றிருக்கின்றான். அதுவுமன்றி தனது தேசத்தை விசுவாமித் திரனுக்குத் தாரை வார்த்துவிட்டு வெளிநக ரேகும் போது மறுபடியும் இந்நகருள் வர மாட்டேனென் றுறுதி வாக்களித்த மன்னன் பின்னும் நகருள் வந்து சேர்ந்தான். இம்மொழி பொய்யா மெய்யா வென்பதை யறிந்திலர் போலும். காரணம் மெய்யன்பத்து பொய்யன்ப திதுவென்னும் பேதமின்றி

குடும்பிகளாகவும் பொருளாசை யுள்ளவர்களாகவு மிருந்து கொண்டு தங்களைப் பிராமணர் பிராமணரென்று பொய் சொல்லிகல்வியற்றவர்களை வஞ்சித்து பொருள்பரிக்கப் பொய்யை மெய்யாகக் கூறித் திரிபவர்களாதலின் சாக்கைய வம்மிசவரிசையோனும் புத்த பிரான் மூதாதையுமாகிய வீரவாகுச் சக்கரவர்த்தியின் பெயரை சுடலைகாக்கும் பறைய னென்று வகுத்து அப்பெயரைப் பரவச்செய்தற்கும் இழிவுகூறி வருவதற்கு மிவ்வரிச்சந்திரன் கட்டுக்கதையை ஏற்படுத்தினார்க ளன்றி பொய்மொழி ஈதென்றும் மெய்ம்மொழி யீ தென்றும் உணர்ந்தியற்றினா ரில்லை. மெய்யும் பொய்யு முணர்ந் தியற்று வாரேல் வையகமுய்யும் நீதிநெறிகளைப் புகட்டி வாழ்வடையச் செய்வார்கள். அங்ஙனமின்றி பொய்யை மெய்யாகக் கூறி பேதையர் பால் பொருள் பரிப்போராதலின் சுவாசத்தால் வந்த பறைச்சிகள் கதையும், சுடுகாட்டில் வசிக்கும் அரிச்சந்திர னென்னும் அடிமைப் பறையன் கதையையும் பரக்கத் தீட்டிப் பரவச்செய்யும் பொய் மூட்டையைக் கட்டி விட்டார்கள். இப்பொய் மூட்டையாம் அரிச்சந்திர புராணமானது வேஷப் பிராமணர்களுக்கு எதிரிகளாக நின்ற பௌத்தர்களை பறையர்களென்றழைத்து அப்பெயரைப் பரவச் செய்வதற்கும் அவர்களை யிழிவடையச் செய்து பாழ்படுத்துவதற்குமே யியற்றியுள்ளா ரென்பது சத்தியம் சத்திய மேயாம்.

வேஷப் பிராமணர்களால் பறையனென்று தாழ்த்தப் பட்டவன் பதினாயிரம் பொன்படைத்தாலுஞ் சரி சுடுகாட்டில் காவலிருப்பதை விட்டு நகருள் வரப்படாதென்பது அவர்கள் மநுதன்ம சாஸ்திர விதி. இவற்றுள் புத்தபிரானுக்கு சங்க அறரென்றும் சங்கமித்த ரென்றும் சங்கதரும ரென்றும் அனந்தம் பெயர்களுண்டு. இதிற்சங்கறரென்னும் புத்தரைச் சிந்திக்கும் சங்கத்தோர்களை சங்கரசாதிகளென்று வகுத்து இவர்களே சுடலை காப்பவர்களென்று மநுநூலி லெழுதிவைத்திருக் கிறார்கள். இன்னும் சம்மாசம் புத்தா என்னும் பெயரை சாம்பார், வீரசாம்பவர், சாம்பவனார், சுடலைக்காக்கும் வீர சாம்பவத் தோட்டி என்று பலவாறு இழிவு செய்து வருகின்றார்கள். இதல்லாமல் அரிச்சந்திர புராணத்திலில்லா பல விஷயங்களை அரிச்சந்திரன் கதையிலும் அவன் நாடகத்திலும், அவன் விலாசத்திலும், ஒருவர்க்கொருவர், தங்கள் பொய்க்கு பொய்யா பரணம் பூட்ட, பாம்பாக வந்தவர் முருகன், தரகனாக வந்தவன் வானமீன், தோட்டியாக வந்தவன் இயமன், அரிச்சந்திரன் தரகனைத் தூக்கிப்போனான். சந்திரமதி சுடுகாடு போகும் போது விஸ்வாமித்திரன் கல்லெறிந்தான், அரிச்சந்திரன் சுடுகாட்டில் கனவு கண்டெழுந்தான். என்றின்னம் பலவாறு புளுகிவிட்டார் கள் பொழுது விடியுமுன், குமாரனை அடக்கம் செய்து வருவேன் என்ற சந்திரமதி மறுபடியும் தன் ஆண்டை வீட்டுக்குப் போகாதது புராணப் படியே பொய்யல்லவோ? நன்றாகக் காவல் காப்பேனென்று வந்தவன்

சுடுகாட்டு தடியை மந்திரியி டம் கொடுத்துவிட்டு கனவு கண்டெழுந்தான் அரிச்சந்திர னென்றால், நாடக கதையாதாரப்படி பொய்யல்லவா? ஊன்றிப் பாருங்கள். சுயமரியாதையற்ற இந்துக்களையும் பறையர்களையும் வெள்ளென வெளுத்திருக்கும் இவ்வரிச்சந்திரன் கதையில் தங்கள் புத்தியை மயக்கிக்கொள்வதன்றி வேறில்லை. இக்கட்டுக்கதைகள் வேஷ பிராமணத்தை விருத்திச் செய்வதற்கே உண்டாக்கப்பட்டதாகும். யாவரேனு மிவ்வரிச் சந்திரபுராணம் மெய்யென்றே வெளிவருவாராயின் உள்ள பொய்கள் ஒவ்வொன்றையும் தெள்ளற விளக்கிக் காட்டுவாம்.

** அரிச்சந்திரன்**

நிஜானுபவசாரம். திரும். அரங்கசாமி பண்டிதர் எழுதியது.

எமது பிரிய சகோதரர்களே! அரிச்சந்திரனைப்பற்றிப் பேசப்புகில், பிறப்பு வளர்ப்பு இருப்பு முதலிய யாவு மறியவேண்டியது. ஆனால் இவ்வரிச்சந்திர னரசாண்டது அயோத்தியென்று மாத்திரம் சரித்திரமூலமாய்த் தெரிய வருகின்ற தல்லாமல் இன்ன காலம் இன்ன வருடமென்று புராணாதி சாட்சி கிடையாதாயினும், இராமனுக்கு முந்தி சில தலைமுறைகள் கடந்த பாட்டனாக, பாரத இராமாயண இதிகாசங்கள் மூலமாயறியலாம். அதைச் சற்று நோக்குங்கால், இராமன் தகப்பனாகிய தசரதன் 60,000 வருடம் அரசாண்டதாய் இதிகாசம் முறையிடுகின்றது. அப்படி ஒரு மனிதன் 60.000 வருடம்

ஜீவனோடு அரசாண்டானென்னுங் கற்பனையை நம்பத்தக்கதோ வென்று அறிவுள்ளவர்களே யுணர்ந்து கொள்ள வேண்டுமல்லாது அதைப்பற்றிப் பேசுவது அநாவசியம், ஏனெனி லிவர்தகப்பன் இவருக்கு முந்தியென்று ஆயுளைக் குறிக்க யிடங்கொள்ளாது. இப்படியே இவர்கள் வேத சாஸ்திர கற்பனைப்படி அநேகவித சாமிகளையுந் தேவர்களையு முண்டாக்கி அவைகட்கியைந்த மந்திரக் கிரியாதிகளினால் தாங்களழைக்கின்றபோது வரவும், தங்களேவலைச் செய்யவும் கேட்ட வரங்களைக் கொடுக்கவுமான வசிய சித்திப்பெற்று, மேலவர்களென்று அனுசரித்துக்கொண்டு, அநேகசாதிப் பிரிவை யுண்டாக்கி, மதாபிமானஞ் சாதியபிமான மின்றி, நாம் ஏகதந்தையின் சகோதரர்களென்று சொல்லப்பட்டவர்களைத் தாழ்ந்த சாதியெனவும், நீச்சரென்வும் திரமிடம் சென்னை இராஜதானியிலேயே பெரும்பாலும் கூறுவர். இந்த விபரீதம் இவ்வாறிருக்க, அரிச்சந்திரனானவர் இன்ன காலத்தில் இத்தனை வருடங்களுக்கு முன்னாவது பின்னாவது அரசாண்டிருந்தா ரென்று குறிக்காததற்குக் காரணம் அக்காலத்தில் சோதிட சாஸ்திரங்கள் கிடையாதென்றோ ? அல்லது வருடம், மாதம், தேதி, நாளென்பது எண்ணறியாக் காலமோ? ஆமெனில், சதுர்யுகக் கணக்கும் அதில் நிறைவேறினதாய் இதிகாச புராணங்களில் எழுதியிருக்கும் மகா விந்தையான விஷயங்கள் யாவும் பொய்யன்றோ? அல்லது மெய்யெனில், சோதிட பஞ்சாங்கம் ஏற்பட்டது கலியுகாதி 360-ம் வருடத்தில் அரசாண்டிருந்த

விக்கிரமாதித்தன் காலத்திற்றான் ஆரியபட்டர், வராகமிரர் என்னப்பட்டவர்களால் ஏற்படுத்தப்பட்ட தென்றும், அப்படி ஏற்பட்ட பஞ்சாங்கத்தை 500 வருடம் வரையில் இந்துக்கள் பொய்யென்று அங்கீகரியாது நீக்கியிருந்ததாயும், பின்பு அவ்வரசனும் அவனைச் சார்ந்த அரண்மனை உத்தியோ கஸ்தர் மாத்திரமே அநுசரித்து வந்ததாயும், அதன்பின் அரசனாக் கினைக்குப் பயந்துச் செங்கோலறிக்கைக்கு இது வேண்டியதா யிருந்தபடியாலுமே ஜனங்கள் நாளுக்கு நாள் கையாடி வந்தார்களென்றும், அதுமுதல் சென்ற 800 வருடங்களாகவே பஞ்சாங்கம் அனுசரிக்கப்பட்டு வருகின்ற தென்றும், அநேக சாஸ்திரங்களும் நாளதுவரையில் இருக்கின்றதுங் கண்காட்சி யன்றோ ?

ஆகையால் சகோதரர்களே! இந்த அரிச்சந்திரன் திரேதாயுகத்திலிருந்ததாய் இதிகாசங்கள் முறையிடுவதை சற்று மங்கீகரிக்க யிடமில்லை. அப்படியுண்டென அபிமானத்தா லொருவாறு ஏற்றுக்கொண்டாலும், தற்கால சோதிட சாஸ்திரங்களின்படி ஒன்றில் அரிச்சந்திரன் அரசாண்டது 21,64998 என்றும், மற்றொன்றில் 26,04998 என்றும், வேறொன்றில் 8.04998 என்றும், மற்றும் வேறொன்றில் 480 என்றும் தெரியவருகின்றது. இப்படி நான்கு சாஸ்திரங்களில் நான்குவிதமாய்ச் சொல்லுங்கால் எதையெடுக்கின்றது. எதை விடுகின்றது. இப்படி ஒன்றையும் நம்பாவண்ணம் ஒன்றை யொன்று பொய்யென ரூபிக்கும்

பிரமாணத்துடன் வெளி வந்ததற்குக் காரணம் என்னவோ! இதை விவேகிகள் நன் குணர்ந்தறிவார்கள் ஆயினுந் தற்காலத்தில் நாமாகிய இந்துக்கள் கையாடி வரும் பஞ்சாங்கத்தின்படி கணக்கிடப் புகில், அரிச்சந்திரன் அரசாண்டது 21,64,998 வருடங்களுக்கு முந்தியெனத் தெரியவருகின்றது. ஆம், அது மெய்யெனில், சோதிட சாஸ்திரமே ஏற்பட்டு 1398- வருமானதாய் அநேக சாஸ்திரிகள் முறையிடும் போது, அதற்கு முன் குறித்திருக்கும் சதுர்யுகக் கணக்குகள் யாவும் பொய்யென்பதற்கு சூரிய சித்தாந்தமும், பவுஷிகோத்திர புராணமும், தேவிபாகவதமும். கிரமஞ்சரி சோதிட சாஸ்திரமுமே போதுமான சாக்ஷியா யிருக்கின்றதுந் தவிர, இந்த அரிச்சந்திரன் காலத்திலிருந்த வசிஸ்டரும், விஸ்வாமித்திரரும் எத்தனையோ ஆயிரம் வருடங் களுக்குப் பின்வந்த இராமன் காலத்திலிருந்ததாய் இராமாயணம் முறையிடுகின்றதும். இந்த இராமனுக்கு எத்தனையோ வருடத்திற்குப் பின் துவாபரயுக முடிவில் அரசாண்டிருந்த துஷ்டி யந்த மகாராஜன் காலத்திலிருந்ததாய்ப் பாரதம் முறை யிடுகின்றதும், இவனுக்கு எத்தனையோ ஆயிர வருடங்களுக்குப் பின் கலியுகாதி 2541-ம் வருடத்தில் வட இந்தியாவில் அரசாண் டிருந்த கபிலவஸ்து அரசனாகிய சட்டடோநா குமாரனுக்கு உபாத்தியாயராய் இருந்தாரென்பதே போதுமான சாக்ஷியன்றோ? இன்னும் பூர்வ சாஸ்திரிகளாகிய ஆரியபட்டர், வராகமிரர், காளிதாசர், க்ஷமணகர், அமரசிம்மர், கடகார்ப்பார், சங்குண்ணி, வேதாள பட்டர், வரருசி,

தன்வந்திரி, கலகப் பண்டிதர், சங்குரிஷிக ளெழுதியிருக்குங் கிரந்தங்களும், இரண்டொரு வருடங்களுக்கு முன்னே சில சாஸ்திரிகளால் பகிரங்கத்திற்கு வந்த சில உண்மைப் பிரமாணங்களே சதுர்யுகக் கணிதமானது சுத்தப் பொய்யான கட்டுக்கதை யென்று யாவரும் எளிதி லறிந்துக்கொள்வதற்குப் பிரத்தியக்ஷமாய்த் தெரிகின்ற தல்லவோ?

இதுவுந் தவிர, கேளும் எமது பிரிய சகோதரர்களே! இந்த அரிச்சந்திரனை எமதரும் ராஜன் தோட்டியுருவெடுத்து வந்து விலைக்கு வாங்கினானென்று சரித்திரங்கள் கூறுகின்றபடி யுண்மையென நம்பி சரிதாதி பக்திக்குரிய புண்ணிய சரித்திரமென்று மனிதரை மயக்கத்தக்க நாடக ரூபமாய் நடிக்கவும், அவைகளினுண்மையை யறியாத ஏழை மதியுள்ளார் தங்கள் கஷ்டார்ஜிதங்களைக் கொடுப்பதுமன்றி, தற்சுக நஷ்டா பிரயோஜனத்தைப் பெறுவது நயவஞ்சகமன்றோ ? இந்த சரித்திரத்தை ஆதியோ டந்தமாயும் சாக்ஷியுக்தி யனுபவமாயும் விசாரித் துணர்வாராகில் கல்லும் கரைந்துருகுமனறோ? ஐயையோ! இயமனே தோட்டி யல்லது புலையனாக அவதரித்து வந்து வாங்கினானென்றால் நமது இந்து தேச இதிகாச புராணாதி சுருதிகள் மூலமாய் நமக்கு இரண்டு இயமனுண்டெனத் தெரியவருகின்றது. அதெவ்வாறெனில், முதல் இயமன் சுவாயம்பு மனுவென்றும் இரண்டாவது இயமன வைச்சுத் மனுவென்னும் இந்த இரண்டாவது இயமனே தற்காலம்

எமலேகத்தில் அரசு செய்கிறானென்றும், அவன்தான் நம்மிந்துக் களில் பாவஞ் செய்யப்பட்டவர்களைத் தண்டித்து ஆக்கினைச் செய்கிறானென்றும், இதிகாச புராணங்கள் முறையிடுகின்றதுந் தவிர, இவன் பூர்வத்தில் சக்கரவர்த்தியாய் அரசாண்டானென் றும், இவனாலேயே மநுநீதி ஏற்பட்ட தென்றும், சொல்லு கின்றது. இவ்வண்ணமே அநேக புலவர்களும் பிரசங்கிகளும் பேசி வருகின்றார்கள் ஆகையால் இவ்விரண்டு எமன்களில் தோட்டி யுருவெடுத்து வந்து அரிச்சந்திரனை வாங்கினவன் சுவாயம்பு மனுவெனும் எமனா? அல்லது வைச்சுத மனுவெனும் புதிய எமனா? பழைய எமனெனில், அவன் போன கதியென்ன? புது எமனெனில், அவன் எக்காலத்தில் வந்தான்? அவனர சாண்டது அரிச் சந்திரனுக்கு முந்திய? பிந்தியா? இதுவுந்தவிர (புதிய எமனா? பழைய எமனா? எனும் பழமொழி) மார்க்கண்ட னுக்காக ஓர் எமன் சிவன் காலால் உதைபட்டு விழுந்து கிடந்த தாகவும் அந்த பாரத்தைச் சுமக்க முடியாதென்று பூமிதேவி சிவனிடத்தில் வந்து புலம்பினதாயும் சிவன் எழுப்பினதாயும் எழுதியிருக்கின்றதே அவன் எந்த எமன்? பழைய எமனா? புது எமனா? இவ்விரண்டில் ஒருவனைக் குறிக்கில் இவ்விரண்டு யம மனுக்களும் சதுர்யுகத்துக்கு முந்தியும் ஜலப்பிரளயத்திற்கு முந்தியுமே சிவனிடத்திலிருந்து என்றும் பதினாறு வயதாய் இருக்கும் படியான வரம் வாங்கிக் கொண்டிருந்ததாயும் அக்காலத்தில் ஜலப்பிரளயம் வந்து உலகம்யாவும் அழிந்து

விட்டதாயும், தான் ஒருவனே அழியாதிருந்ததாகவும், ஜலம் எங்கும் பரவி போனபடியால் தான் மகாமேரு பர்வதத்தின் உச்சியில் ஏறிக்கொண்டிருந்ததாயும் அப்போது மகா விஷ்ணுவானவர் ஆலிலையில் பள்ளிகொண்டு பிரளய ஜலத்தின் மேல் அசை வாடிக் கொண்டே தான் இருக்கும் இடத்திற்கு வந்து தன்னை கூப்பிட்டு அவர் வாயைத் திறந்து அதற்குள் நுழைந்து கொள்ளும்படி சொன்னதாயும், அதே பிரகாரம் மார்க்கண்டர் மகாவிஷ்ணுவின் வாயில் நுழைந்து பார்த்தபோது இவ்வுலகமும் இவ்வுலகத்திலுள்ள பொருட்கள் யாவுமிருந்த தாயும், பாரதம் ஆரண்ய பர்வதத்தில் தர்மராஜ னுக்கு போதித்து வருவதை யாவரும் வாசித்திருக்கக்கூடும். ஆம், அது மெய்யெனில், இந்த மார்க்கண்டனால் உதைப்பட்ட எமன் மேற்கூறிய இரண்டு எமன்களில் ஒருவனு மல்லவென்றும், இவர்களுக்கு முன்னிருந்த மூன்றும் எமனென்றால் சாஸ்திரங் களில் மூன்று எமனுண்டென்று குறிக்கவில்லை ஒருக்கால் இவ்வளவு எழுதிய பெரியோர்கள் அதை எழுத மறந்துவிட்டனர் போலும். ஆகையால் வாசிக்கப்பட்டவர்கள் இரண்டுடன் மூன்றாய்ச் சேர்த்துக்கொண்டு வாசிக்க வேணு மென்றாலும், இந்த மார்க்கண்டன் எமனுக்குப் பயந்து ஒவ்வோர் சிவஸ்தலங் களாய்ச் சுற்றிப் பூசித்துக்கொண்டு வருங்காலத்தில் இராமேசுரத் துக்கு வந்து இராமலிங்கத்தைப் பூசித்ததாய் சரித்திரங் கூறுவதுந் தவிர, இந்த மார்க்கண்டனே ஸ்ரீ இராமர் பூஜித்த இராமலிங்கமே என்று தன் வாக்கால் சொல்லியிருக்

கின்றபடியால் இதைச் சற்று ஆராயுங்கால், இந்த மார்க்கண்டன் என்றும் பதினாறு வயது சிவனிடத்திலிருந்து பெற்றபின் ஜலப்பிரளமாய் அதற்கு ஏறக்குறைய 39,99,000 வருடத்துக்கு அதாவது திரேதாயுகக் கடையில் அவதரித்த இராமன், இராவண சம்மாரஞ் செய்து வரும் போது வழியில் மண்ணைப் பிடித்து வைத்து பூசித்த படியால் அது லிங்கமாய்விட்டதாயும் அன்று முதல் அதற்கு இராமலிங்க மென்று பேருண்டானதாயும், சாத்திரங்கள் முறை யிடுகின்றதோ அப்படியிருக்க மார்க்கண்டன் இராமலிங்கத்தைப் பூசித்தானென்று சொல்வது பொருந்துமோ? மூன்றாம் எமனென்பது பொருந்துமோ? இதுநிற்க.

கேளும் எமது பிரிய சகோதரர்களே! அரிச்சந்திரன் தோட்டிக்கு அடிமைப்பட்டு சுடலை காத்தான் என்று நியாய மின்றி நிட்சயப்படுத்தினாலும் இந்த இந்திய தேசத்தி லுள்ள பிரம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர் யாவரும் அங்கீகரிக்க வேண்டிய தல்லவோ? அப்படி மேற்குறித்த மூவரும் அங்கீகரியாது சூத்திரர் மாத்திரம் சுடலையண்டை யிருக்கும் அரிச்சந்திரனைச் சுற்ற வேண்டுமென்றும், அவனிடத்தில் சில விருத்தாந்தங்களைச் சொல்லி சில கிரியைகள் நடத்த வேணுமென்ற வேதப்பிரமாண முண்டோ ? சாத்தியம் யாவருக் கும் பொதுவன்றோ ! அப்படி மேற்குறித்த மூவரும் அங்கீகரியா மல், சூத்திரர் மாத்திரம் அங்கீகரிக்க வேண்டு மென்னுங் கற்பனை யேன்? அதற்கு காரணம் யாதேனு மிருக்க

வேண்டும். ஆகையால் அவ்வரிச்சந்திரனுடைய வர்த்தமானங்களை யறிவதற்கு பூர்வ பாலிகிரந்தங்கள் மூலமாகத்தான் உண்மையை யுணரவேண்டுமே யல்லாது, வேறு நம்மிந்து தேசத்திற் கிடைப்பது மிக அருமையாயிருக்கும். ஏனெனில், கலியுகாதி 2685 அல்லது கி.பி. 344 அல்லது ஆங்கிலேய ஆண்டுகளுக்கு முன் 315-ம் வருடத்தில் பட்டத்துக்கு வந்தவனும், சந்திர வமிசத்து மூல புருஷனுமாகிய சந்திரன் அல்லது சந்திரா என்னும் அரசன், இவன் காலத்திலிருந்து இவனுக்குப் பின் பட்டத்துக்கு வந்த அரசர்களுக்கெல்லாம் சந்திரா என்றே நாமதேயம் வழங்க வந்தது. இவர்கள் மதம் புத்த மார்க்கம். இந்த அரசர்கள் காலத்தில்தான் இந்தியா விலிருந்து தேச முழுவதும் புத்த மார்க்கம் பரவினது. இந்த சந்திர பரம்பரையில் கடை அரசன் தான் அரிச்சந்திரனென்று குறிக்கப்பட்டவன். இவனுக்கு அரிச்சந்திரனென்று ஏன் குறிக்கப்பட்டதெனில், இவன் அரசாண்டு கொண்டிருக்கும் காலத்தில் உஜ்ஜினி என்னும் பட்டணத்தில் ஒருவன் ஏற்பட்டு அநேக மனிதர்களை தன்வசப்படுத்திக்கொண்டு சந்திரன் என்னும் அரசனுக்கு விரோதமாய்த் தான் சூரியனென்னும் பேரை வைத்துக் கொண்டு அரசாட்சி செய்து வந்தான். இவனுக்குச் சரித்திரத்தில் விக்கிரமாதித்தனென்று குறித்திருக்கின்றது. அது ஏன் அப்படி குறித்தார்களெனில் இவன் காலத்தில்தான் பஞ்சாங்கம் உண்டானபடியினால் அந்தக் கணக்கின்படி பார்த்க்கில் இவன் பிறந்த வருடம் விக்கிரம் வருடமாய் இருந்த படியால் விக்கிரமனென்றும்,

இவன் பெயர் சூரியனான படியால் ஆதித்தனென்றும் சேர்த்து விக்கிரமாதித்த னென்று குறித்தார்கள். இவன்தான் சூரிய வமிசமென்னும் பரம்பரையை உண்டு பண்ணினவன். இவன்தான் சூரிய வமிசத்து மூல புருஷன். இவன்தான் சூரியன் இதைவிடவேறு கிடையாது இவனுக்கு ஆரியனென்றும், அரிஎன்றும் இராமனென்றும் வைச்சுதமனுவென்றும் நாமதேயங்க ளுண்டென அநேக சாஸ்திரங்கள் மூலமாய் அறியலாம். இந்த அரசன் சந்திரனென் னும் அரசனுக்கு நேர்விரோதியாய்ச் சூரிய னென்னும் பெயர் வைத்துக் கொண்டு சந்திர வமிசத்துக்கு பதில் தன் பட்டணத்தி லுள்ளவர்களை யெல்லாஞ் சூரிய வமிசத்தவரென மாறுபாடான ஏற்பாடு செய்ததுந் தவிர பூர்வ சந்திர வமிசத்தவர் அநுஷ்டித்து வந்த புத்த மார்க்கத்திற்கு பதில் மும்மூர்த்திகள் மதமெனும் ஓர் கற்பனா ஏற்பாட்டை யுண்டு பண்ணி அதைத்தான் பட்டணத்துக் குடிகளெல்லாம் அநுசரித்து வரும்படி யாயும் ஆக்கியாபித்து வந்தான். இந்த அரசனால் ஏற்பட்ட கற்பனா மதத்திற்கு ஆதித்த மதமென்றும், சூரிய மதமென்றும், அரிமதமென்றும், ஆரிய மதமென்றும், மும்மூர்த்தி மதமென்றும் நாமதேயங்களை வழங்குகின்றன. இந்த சூரியனென்னும் அரசனும் இவனால் ஏற்பட்ட ஆரிய மதம் அல்லது சூரிய மதம் அல்லது அரிமதமென்னுங் கற்பனாக்கட்டும் ஏற்பட்டது கலியுகாதி 3044 அல்லது கி.பி. 503 அல்லது ஆங்கிலேய வருடம் 56-க்கு முந்தியென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஆகையால், அதற்கு முந்தி சூரிய வமிசங்

கிடையாதென்றும், மும்மூர்த்தி யெனுங் கற்பனா மதங் கிடையாதென்றும் யாவரும் பிரத்தியக்ஷ மாய் அறியலாம்.

கேளும் எமது பிரிய சகோதரர்களே! மேற்கூறிய வருடத்தில் வெளிவந்த சூரியன் ஆதித்தன் ஆரியனென்னும் அரசன் இவனுக்கு முந்தி அயோத்தியாவில் அரசாண்டிருந்த சந்திரனென்னும் அரசன் பேரில் விரோத முடையவனாய் அந்த சந்திர பரம்பரையை அழித்து தன்னால் ஏற்பட்ட மும்மூர்த்தி மதம் அதாவது அரிமதம் அல்லது சூரிய மதம் அல்லது ஆரிய மதம் அல்லது ஆதித்த மதத்தை விர்த்தி செய்யவேண்டு மென்னுங் கொடிய வைராக்கிய புருஷனாயிருந்தான். இவன் மிகவுஞ் சமர்த்தனும் தைரியமு முள்ளவனானபடியால் இவனுக்கு வாகு வல்ல பத்தால் வீரவாகு என்றும் பெயருண்டு. இது இவ்வாறி ருக்க சந்திரனென்னும் அரசன் அரசாட்சி செய்யுங் கால் இவன் பௌத்தனானபடியால், தனக்கு விரோதமாய்ச் சூரியனென்று பெயர் வைத்துக்கொண்டு, புத்த மார்க்கத்துக்கு விரோதமாய் உண்டாக்கிய மூம்மூர்த்தி மதமெனும் கற்பனா மதத்தைப்பற்றியுஞ் சதா மனவருத்தமடைந்தது தவிர, தன்னைப்பார்க்கிலும் மிகவுஞ் சமர்த்தனாகவும், மகாதந்திர முடையவனாகவுஞ் சூரியனெனும் அரசனிருக்கின்ற படியால், அவனால் தன்னரசு க்ஷணிக்கப் பட்டு கொடிய துன்பத்தை அனுபவிக்கும்படியாய் நேரிடு மென்று இரவும் பகலுந் துலையா வியாகூலப்பட்டு தன் மந்திரியுடன் நினைவே கனவாகச் சொல்லிக்கொண்டிருந்தான். இப்படியிருக்குங் காலத்தில்,

நூதனமாய் ஆரியனெனும் பெயரை வைத்துக்கொண்டு ஆரிய பரம்பரை யென்னும் வமிசத்தை உற்பத்தி செய்த அரசன் பூர்வ சந்திர பரம்பரையை யும் புத்த மார்க்கத்தையும் அழிக்க வேண்டு மென்று இயமத்தைச் செய்ய ஆரம்பித்தான். அதாவது பூர்வத்தில் நரபலி ஆடு, மாடு, குதிரை முதலிய பலிகளை செலுத்தி யாகத்தை மனிதர்கள் நடத்தி வந்ததை புத்தர் அவையாவும் சுத்தப் பொய்யென்றும் அதினால் யாதொரு நன்மையுங் கிடையாதென் றும் ரத்து செய்து விட்டபடியால், மனிதர்கள் அதைச் செய்யாது நீக்கிவிட்டு சுகஜீவிகளாயிருக்கும் போது மறுபடியும் அவைகளைச் செய்யவேண்டுமென்று இவ்வரசன் அதாவது சூரியன் ஆரம்பித்து, தானே அந்த இயமக்கிரியைகளுக்கு மூல புருஷனாயும், பிணங்களைச் சுடக் கூடாதென்னும் புத்த ஏற்பாட்டிற்கு விரோதமாய்ச் சுடவேண்டுமென்று கட்டாயப் படுத்தப்பட்டவனுமாயிருந்த படியால், இவனுக்கு இயமன், அதாவது எமனென்று குறிக்கப்பட்டதே தவிர வேறல்ல. இவ்வித மாறுபாடான ஈமக்கிரியைகளை ஏற்படுத்தி நடத்திவரும் அரியென்னுஞ் சூரிய அரசன், சந்திர அரசனைப் பார்க்கிலும் மிகவும் சமர்த்தும் தந்திரமும் பொருந்தினவனா யிருந்த படியால், அந்த ஈமக்கிரியை களை அங்கீகரித்தவனாய்ப் பூர்வ புத்த மார்க்கத்தையே யநுஷ்டித்து வந்தபடியால் இவனுக்கு அரிச்சந்திரனென்று பெயர் சூட்டப்பட்டதே தவிர வேறல்ல ஆயினும் அரியென்னும் அரசன் ஏற்பாட்டினால் உள்ளாந்திரத்தில் கிரியா தோஷ

முண்டென்று மதித்த அரிச்சந்திரனுக்கு விரோதியாய் தனக்குண்மையும் பிரியமு மான ஆரியபட்டன் அல்லது வசிட்டன் வராகமிரன் அல்லது விஸ்வாமித்திரனென்னும் இரண்டு சோதிட சாஸ்திரிகளி னேவுதலினால் சந்திர னென்னும் புத்த மார்க்கத்தினரசன் ஆண்டிருந்த பட்டணத்தை வஞ்சித்து அரி, சூரியன், ஆதித்தன், ஆரியன், எமன், வீரவாகு என்னும் பெயருடைய அரசன் சந்திரனைக் கீழ்ப்படுத்திக் கொண்டு இவ்வரசரின் பெண்டு பிள்ளைகளையும் பரம்பரை முழுமையும் தன் மும்மூர்த்தி மதத்தை யனுஷ்டிக்கும்படியாயும், இந்த சந்திர பரம்பரையில் பிணங்களைச் சுடுகின்றது வழக்கமில்லாதிருப்பினும் சுட பட வேண்டுமென்றும், தங்கள் பிணத்தை தாங்களே சுட வேண்டுமென்றும் பௌத்தரை மிகவுங் கஷ்டப்படுத்தினான்.

கேளும் எமது பிரிய சகோதரர்களே! அரியென்னுமரசன் சந்திரன் பட்டணத்தை வஞ்சனையால் அபகரித்ததுமன்றி அவர்களை எவ்வளவு கஷ்டப்படுத்தின போதிலும் தங்கள் சத்திய மென்னும் புத்த மார்க்கத்தையும், பிரேதஞ் சுடக்கூடா தென்னு முறுதியையும் மாற்றாமலிருந்தபடியினாலேயே சாத்திய கீர்த்தியென்றும் குறிக்கப்பட்டதே யொழிய வேறல்ல. இதற்குச் சாக்ஷி நாளதுவரையில் இந்த பரம்பரையானவர்கள் யாகாதி கிரியைகளைச் செய்யாமலும், பிணத்தை சுடாமலும் அரியென்னும் அரசனா லேற்படுத்தின வேதானுஷ்டானங் களின் மேற் கவலையில்லாமலும், அதைச்

செய்யப்பட்ட யிடங்களுக்கு போகாமலும், சுத்தப் பொய்யான கற்பனையால் ஏற்பட்ட வேத கோஷ்டங்கள் செவியிற் படாமலும், (தாங்கள் சற்குருவின் திருவாக்கின் பிரகாரம் இப்பெரிய உலகத்தை யெல்லாந் தாங்கி நிற்கின்ற வஸ்து யேகமென்று சகோதர ஐக்கியத்துடனே மிருகம் பு முதலியவைகளை பட்சியாதிருக் கின்றதே கண்காட்சியா யிருக்கின்றது.) இப்பால் சந்திரா யென்னப்பட்ட அரசன் மனைவியாகிய சந்திரவதியும் தன் குமாரன்லோகனும், பிராமணன் வீட்டில் அடிமைத்தொழில் செய்ததாக கூறுவது நாளதுவரையில், அதாவது கலியுகாதி 3044 கி.பி. 503 ஆங்கிலேய ஆண்டுக்கு முந்தி 56 வருடத்திலிருந்து அந்த பரம்பரைப் பெண்கள் தலைமுறை வழுவாது சாணந் தெளிக்கவும், முட்டை தட்டவும், நெல் குத்தவுமான அடிமைத் தொழிலை இக்காலத்திலுஞ் செய்துவருவதே கண்காக்ஷி யன்றோ ? இந்த சந்திர அரசனுடைய பாலகனையும் மாடுகன்று மேய்த்துக்கொண்டு வரும்படியாகவும், தற்பை கொய்து கொண்டு வரும்படி செய்ததைப்போலவே அந்தபரம்பரை பிள்ளைகள் நாளதுவரையில் மாடுகன்று மேய்த்துக்கொண்டு வீடு வரும் போது தற்பைப்புல்லு கட்டிக் கொண்டு வந்து வீடு சேர்கிறதுங் கண்காக்ஷி யல்லாவா? இந்த அரிச்சந்திரன் இயமனென்னும் புலையனுக்கு அடிமைப்பட்டு தானும் புலையனாய் பிணஞ்சுட்டதாய்ச் சொல்லுகின்ற படியால் இக்காலத்தில் தாங்கள் பிணத்தை மாத்திரஞ் சுடாது அயல் பிணத்தைச் சுடும் படிக்கான காரியத்தி லீடு பட்டு

ஜீவனஞ் செய்துவருவதே கண்காக்ஷி யல்லவா?

அப்படியென்றாலுமோ; இயமன் ஆதிமுதற்புலையனாயும் அந்தப் புலையனிடத்தில் அடிமைத்தொழிற் செய்த படியினாலேயே அரசனுக்கும் புலையனெனும் பேர் வந்ததைப் போல அந்த பரம்பரைக்கு மப்படியே வந்தது ஆகையால் ஆதிமுதல் இயமனுக்குப்பேர் ஆதித்தன், அரி, ஆரியன், சூரியனாகும். இத்தனை வஞ்சனைப் பேருங் கூடி திரண்டோர் வடிவான அரசனே புலையனென் பதற்கு இவன் சந்ததியே புலையரென்பதற்கும் அரிச்சந்திரன் சரித்திரமும், இன்னுமநேக சாஸ்திரங்களுமே போதுமான சாக்ஷியா யிருக்கின்றன. ஆகையால் எமது பிரிய சகோதரர் களே! பூர்வ குடிகளாகிய வர்கள் ஆதி எமப்புலையரும் அவர்களின் சந்ததியுமானவர்களின் சகவாச கிரியாசாரங்களை விட்டு, நன்முயற்சியினால், முன்போலவே சந்திர வம்மிசத்தவ ரென்று கடவுளுக்கும், அரசாங்கத்தாருக்கும், பூர்வகிரந்தப்படி இருதய சாக்ஷிக்கு சாத்தியமுள்ள ஏக சகோதரர்களாயும் வெளிவரும் படிக்கு, நமதொன்றான சைதன்னிய சாட்சாத் கடவுளைத் (புத்தரை) தியானித்து வருவோமாக.

## FREETAMILEBOOKS.COM

**மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்:**

மின்புத்தகங்களைப் படிப்பதற்கென்றே கையிலேயே வைத்துக் கொள்ளக்கூடிய பல கருவிகள் தற்போது சந்தையில் வந்துவிட்டன. Kindle, Nook, Android Tablets போன்றவை இவற்றில் பெரும்பங்கு வகிக்கின்றன. இத்தகைய கருவிகளின் மதிப்பு தற்போது 4000 முதல் 6000 ரூபாய் வரை குறைந்துள்ளன. எனவே பெரும்பான்மையான மக்கள் தற்போது இதனை வாங்கி வருகின்றனர்.

**ஆங்கிலத்திலுள்ள மின்புத்தகங்கள்:**

ஆங்கிலத்தில் லட்சக்கணக்கான மின்புத்தகங்கள் தற்போது கிடைக்கப் பெறுகின்றன. அவை PDF, EPUB, MOBI, AZW3. போன்ற வடிவங்களில் இருப்பதால், அவற்றை மேற்கூறிய கருவிகளைக் கொண்டு நாம் படித்துவிடலாம்.

**தமிழிலுள்ள மின்புத்தகங்கள்:**

தமிழில் சமீபத்திய புத்தகங்களெல்லாம் நமக்கு மின்புத்தகங்களாக கிடைக்கப்பெறுவதில்லை. ProjectMadurai.com எனும் குழு தமிழில் மின்புத்தகங்களை வெளியிடுவதற்கான ஓர் உன்னத சேவையில்

ஈடுபட்டுள்ளது. இந்தக் குழு இதுவரை வழங்கியுள்ள தமிழ் மின்புத்தகங்கள் அனைத்தும் PublicDomain-ல் உள்ளன. ஆனால் இவை மிகவும் பழைய புத்தகங்கள்.

சமீபத்திய புத்தகங்கள் ஏதும் இங்கு கிடைக்கப்பெறுவதில்லை.

**சமீபத்திய புத்தகங்களை தமிழில் பெறுவது எப்படி?**

அமேசான் கிண்டில் கருவியில் தமிழ் ஆதரவு தந்த பிறகு, தமிழ் மின்னூல்கள் அங்கே விற்பனைக்குக் கிடைக்கின்றன. ஆனால் அவற்றை நாம் பதிவிறக்க இயலாது. வேறு யாருக்கும் பகிர இயலாது.

சமீபகாலமாக பல்வேறு எழுத்தாளர்களும், பதிவர்களும், சமீபத்திய நிகழ்வுகளைப் பற்றிய விவரங்களைத் தமிழில் எழுதத் தொடங்கியுள்ளனர். அவை இலக்கியம், விளையாட்டு, கலாச்சாரம், உணவு, சினிமா, அரசியல், புகைப்படக்கலை, வணிகம் மற்றும் தகவல் தொழில்நுட்பம் போன்ற பல்வேறு தலைப்புகளின் கீழ் அமைகின்றன.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகச் சேர்த்து தமிழ் மின்புத்தகங்களை உருவாக்க உள்ளோம்.

அவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள் Creative Commons எனும் உரிமத்தின் கீழ் வெளியிடப்படும். இவ்வாறு வெளியிடுவதன் மூலம் அந்தப் புத்தகத்தை எழுதிய மூல ஆசிரியருக்கான உரிமைகள்

சட்டரீதியாகப் பாதுகாக்கப்படுகின்றன. அதே நேரத்தில் அந்த மின்புத்தகங்களை யார் வேண்டுமானாலும், யாருக்கு வேண்டுமானாலும், இலவசமாக வழங்கலாம்.

எனவே தமிழ் படிக்கும் வாசகர்கள் ஆயிரக்கணக்கில் சமீபத்திய தமிழ் மின்புத்தகங்களை இலவசமாகவே பெற்றுக் கொள்ள முடியும்.

### தமிழிலிருக்கும் எந்த வலைப்பதிவிலிருந்து வேண்டுமானாலும் பதிவுகளை எடுக்கலாமா?

கூடாது.

ஒவ்வொரு வலைப்பதிவும் அதற்கென்றே ஒருசில அனுமதிகளைப் பெற்றிருக்கும். ஒரு வலைப்பதிவின் ஆசிரியர் அவரது பதிப்புகளை “யார் வேண்டுமானாலும் பயன்படுத்தலாம்” என்று குறிப்பிட்டிருந்தால் மட்டுமே அதனை நாம் பயன்படுத்த முடியும்.

அதாவது “Creative Commons” எனும் உரிமத்தின் கீழ் வரும் பதிப்புகளை மட்டுமே நாம் பயன்படுத்த முடியும்.

அப்படி இல்லாமல் “All Rights Reserved” எனும் உரிமத்தின் கீழ் இருக்கும் பதிப்புகளை நம்மால் பயன்படுத்த முடியாது.

வேண்டுமானால் “All Rights Reserved” என்று விளங்கும் வலைப்பதிவுகளைக் கொண்டிருக்கும் ஆசிரியருக்கு அவரது

பதிப்புகளை “Creative Commons” உரிமத்தின் கீழ் வெளியிடக்கோரி நாம் நமது வேண்டுகோளைத் தெரிவிக்கலாம். மேலும் அவரது படைப்புகள் அனைத்தும் அவருடைய பெயரின் கீழே தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் நாம் அளிக்க வேண்டும்.

பொதுவாக புதுப்புது பதிவுகளை  உருவாக்குவோருக்கு அவர்களது பதிவுகள்  நிறைய வாசகர்களைச் சென்றடைய வேண்டும் என்ற எண்ணம் இருக்கும். நாம் அவர்களது படைப்புகளை எடுத்து இலவச மின்புத்தகங்களாக வழங்குவதற்கு  நமக்கு
அவர்கள் அனுமதியளித்தால், உண்மையாகவே அவர்களது படைப்புகள் பெரும்பான்மையான மக்களைச் சென்றடையும். வாசகர்களுக்கும் நிறைய புத்தகங்கள் படிப்பதற்குக் கிடைக்கும்

வாசகர்கள் ஆசிரியர்களின் வலைப்பதிவு முகவரிகளில் கூட அவர்களுடைய படைப்புகளை தேடிக் கண்டுபிடித்து படிக்கலாம். ஆனால் நாங்கள் வாசகர்களின் சிரமத்தைக் குறைக்கும் வண்ணம் ஆசிரியர்களின் சிதறிய வலைப்பதிவுகளை ஒன்றாக இணைத்து ஒரு முழு மின்புத்தகங்களாக உருவாக்கும் வேலையைச் செய்கிறோம். மேலும் அவ்வாறு உருவாக்கப்பட்ட புத்தகங்களை “மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்”-க்கு ஏற்ற வண்ணம் வடிவமைக்கும் வேலையையும் செய்கிறோம்.

**FREETAMILEBOOKS.COM**

இந்த வலைத்தளத்தில்தான் பின்வரும் வடிவமைப்பில் மின்புத்தகங்கள் காணப்படும்.

PDF for desktop, PDF for 6” devices, EPUB, AZW3, ODT

இந்த வலைதளத்திலிருந்து யார் வேண்டுமானாலும் மின்புத்தகங்களை இலவசமாகப் பதிவிறக்கம்(download) செய்து கொள்ளலாம்.

அவ்வாறு பதிவிறக்கம்(download) செய்யப்பட்ட புத்தகங்களை யாருக்கு வேண்டுமானாலும் இலவசமாக வழங்கலாம்.

இதில் நீங்கள் பங்களிக்க விரும்புகிறீர்களா?

நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் தமிழில் எழுதப்பட்டிருக்கும் வலைப்பதிவுகளிலிருந்து பதிவுகளை
எடுத்து, அவற்றை LibreOffice/MS Office போன்ற wordprocessor-ல் போட்டு ஓர் எளிய மின்புத்தகமாக மாற்றி எங்களுக்கு அனுப்பவும்.

அவ்வளவுதான்!

**மேலும் சில பங்களிப்புகள் பின்வருமாறு:**

1. ஒருசில பதிவர்கள்/எழுத்தாளர்களுக்கு அவர்களது படைப்புகளை “Creative Commons” உரிமத்தின்கீழ் வெளியிடக்கோரி மின்னஞ்சல் அனுப்புதல்

2. தன்னார்வலர்களால் அனுப்பப்பட்ட மின்புத்தகங்களின் உரிமைகளையும் தரத்தையும் பரிசோதித்தல்
3. சோதனைகள் முடிந்து அனுமதி வழங்கப்பட்ட தரமான மின்புத்தகங்களை நமது வலைதளத்தில் பதிவேற்றம் செய்தல்

விருப்பமுள்ளவர்கள் freetamilebooksteam@gmail.com எனும் முகவரிக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

**இந்தத் திட்டத்தின் மூலம் பணம் சம்பாதிப்பவர்கள் யார்?**

யாருமில்லை.

இந்த வலைத்தளம் முழுக்க முழுக்க தன்னார்வலர்களால் செயல்படுகின்ற ஒரு வலைத்தளம் ஆகும். இதன் ஒரே நோக்கம் என்னவெனில் தமிழில் நிறைய மின்புத்தகங்களை உருவாக்குவதும், அவற்றை இலவசமாக பயனர்களுக்கு வழங்குவதுமே ஆகும்.

மேலும் இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள், ebook reader ஏற்றுக்கொள்ளும் வடிவமைப்பில் அமையும்.

**இத்திட்டத்தால் பதிப்புகளை எழுதிக்கொடுக்கும் ஆசிரியர்/பதிவருக்கு என்ன லாபம்?**

ஆசிரியர்/பதிவர்கள் இத்திட்டத்தின் மூலம் எந்தவிதமான தொகையும் பெறப்போவதில்லை. ஏனெனில், அவர்கள் புதிதாக இதற்கென்று எந்தஒரு பதிவையும்  எழுதித்தரப்போவதில்லை.

ஏற்கனவே அவர்கள் எழுதி வெளியிட்டிருக்கும் பதிவுகளை எடுத்துத்தான் நாம் மின்புத்தகமாக வெளியிடப்போகிறோம்.

அதாவது அவரவர்களின் வலைதளத்தில் இந்தப் பதிவுகள் அனைத்தும் இலவசமாகவே கிடைக்கப்பெற்றாலும், அவற்றையெல்லாம் ஒன்றாகத் தொகுத்து ebook reader போன்ற கருவிகளில் படிக்கும் விதத்தில் மாற்றித் தரும் வேலையை இந்தத் திட்டம் செய்கிறது.

தற்போது மக்கள் பெரிய அளவில் tablets மற்றும் ebook readers போன்ற கருவிகளை நாடிச் செல்வதால் அவர்களை நெருங்குவதற்கு இது ஒரு நல்ல வாய்ப்பாக அமையும்.

**நகல் எடுப்பதை அனுமதிக்கும் வலைதளங்கள் ஏதேனும் தமிழில் உள்ளதா?**

உள்ளது.

பின்வரும் தமிழில் உள்ள வலைதளங்கள் நகல் எடுப்பதினை அனுமதிக்கின்றன.

1. http://www.vinavu.com
2. http://www.badriseshadri.in
3. http://maattru.com
4. http://www.kaniyam.com
5. http://blog.ravidreams.net

**எவ்வாறு ஒர் எழுத்தாளரிடம் CREATIVE COMMONS உரிமத்தின் கீழ் அவரது படைப்புகளை வெளியிடுமாறு கூறுவது?**

இதற்கு பின்வருமாறு ஒரு மின்னஞ்சலை அனுப்ப வேண்டும்.

**துவக்கம்**

உங்களது வலைத்தளம் அருமை (வலைதளத்தின் பெயர்).

தற்போது படிப்பதற்கு உபயோகப்படும் கருவிகளாக Mobiles மற்றும் பல்வேறு கையிருப்புக் கருவிகளின் எண்ணிக்கை அதிகரித்து வந்துள்ளது.

இந்நிலையில் நாங்கள் http://www.FreeTamilEbooks.com எனும் வலைதளத்தில், பல்வேறு தமிழ் மின்புத்தகங்களை வெவ்வேறு துறைகளின் கீழ் சேகரிப்பதற்கான ஒரு புதிய திட்டத்தில் ஈடுபட்டுள்ளோம்.

இங்கு சேகரிக்கப்படும் மின்புத்தகங்கள் பல்வேறு கணிணிக் கருவிகளான Desktop,ebook readers like kindl, nook, mobiles, tablets with android, iOS போன்றவற்றில் படிக்கும் வண்ணம் அமையும். அதாவது இத்தகைய கருவிகள் support செய்யும் odt, pdf, ebub, azw போன்ற வடிவமைப்பில் புத்தகங்கள் அமையும்.

இதற்காக நாங்கள் உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பெற விரும்புகிறோம். இதன் மூலம் உங்களது பதிவுகள் உலகளவில் இருக்கும் வாசகர்களின் கருவிகளை நேரடியாகச் சென்றடையும்.

எனவே உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பிரதியெடுப்பதற்கும் அவற்றை மின்புத்தகங்களாக மாற்றுவதற்கும் உங்களது அனுமதியை வேண்டுகிறோம்.

இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்களில் கண்டிப்பாக ஆசிரியராக உங்களின் பெயரும் மற்றும் உங்களது வலைதள முகவரியும் இடம்பெறும். மேலும் இவை “Creative Commons” உரிமத்தின் கீழ் மட்டும்தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் அளிக்கிறோம்.

http://creativecommons.org/licenses/

நீங்கள் எங்களை பின்வரும் முகவரிகளில் தொடர்பு கொள்ளலாம்.

e-mail : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM
FB : https://www.facebook.com/FreeTamilEbooks

G plus: https://plus.google.com/communities/108817760492177970948

நன்றி.

**முடிவு**

மேற்கூறியவாறு ஒரு மின்னஞ்சலை உங்களுக்குத் தெரிந்த அனைத்து எழுத்தாளர்களுக்கும் அனுப்பி அவர்களிடமிருந்து அனுமதியைப் பெறுங்கள்.

முடிந்தால் அவர்களையும் “Creative Commons License”-ஐ அவர்களுடைய வலைதளத்தில் பயன்படுத்தச் சொல்லுங்கள்.

கடைசியாக அவர்கள் உங்களுக்கு அனுமதி அளித்து அனுப்பியிருக்கும் மின்னஞ்சலைFREETAMILEBOOKSTEAM@GMAIL.COM எனும் முகவரிக்கு அனுப்பி வையுங்கள்.

**ஓர் எழுத்தாளர் உங்களது உங்களது வேண்டுகோளை மறுக்கும் பட்சத்தில் என்ன செய்வது?**

அவர்களையும் அவர்களது படைப்புகளையும் அப்படியே விட்டுவிட வேண்டும்.

ஒருசிலருக்கு அவர்களுடைய சொந்த முயற்சியில் மின்புத்தகம் தயாரிக்கும் எண்ணம்கூட இருக்கும். ஆகவே அவர்களை நாம் மீண்டும் மீண்டும் தொந்தரவு செய்யக் கூடாது.

அவர்களை அப்படியே விட்டுவிட்டு அடுத்தடுத்த எழுத்தாளர்களை நோக்கி நமது முயற்சியைத் தொடர வேண்டும்.

**மின்புத்தகங்கள் எவ்வாறு அமைய வேண்டும்?**

ஒவ்வொருவரது வலைத்தளத்திலும் குறைந்தபட்சம் நூற்றுக்கணக்கில் பதிவுகள் காணப்படும். அவை வகைப்படுத்தப்பட்டோ அல்லது வகைப்படுத்தப் படாமலோ இருக்கும்.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகத் திரட்டி ஒரு பொதுவான தலைப்பின்கீழ் வகைப்படுத்தி மின்புத்தகங்களாகத் தயாரிக்கலாம். அவ்வாறு வகைப்படுத்தப்படும் மின்புத்தகங்களை பகுதி-I பகுதி-II என்றும் கூட தனித்தனியே பிரித்துக் கொடுக்கலாம்.

**தவிர்க்க வேண்டியவைகள் யாவை?**

இனம், பாலியல் மற்றும் வன்முறை போன்றவற்றைத் தூண்டும் வகையான பதிவுகள் தவிர்க்கப்பட வேண்டும்.

**எங்களைத் தொடர்பு கொள்வது எப்படி?**

நீங்கள் பின்வரும் முகவரிகளில் எங்களைத் தொடர்பு கொள்ளலாம்.

- EMAIL : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM
- Facebook: https://www.facebook.com/FreeTamilEbooks
- Google Plus: https://plus.google.com/communities/108817760492177970948

**இத்திட்டத்தில் ஈடுபட்டுள்ளவர்கள் யார்?**

குழு – http://freetamilebooks.com/meet-the-team/

**SUPPORTED BY**

கணியம் அறக்கட்டளை http://kaniyam.com/foundation

# கணியம் அறக்கட்டளை




**தொலை நோக்கு – Vision**

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழல்

**பணி இலக்கு – Mission**

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப, தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும், அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

## தற்போதைய செயல்கள்

- கணியம் மின்னிதழ் – http://kaniyam.com
- கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இலவச தமிழ் மின்னூல்கள் – http://FreeTamilEbooks.com

## கட்டற்ற மென்பொருட்கள்

- உரை ஒலி மாற்றி – Text to Speech
- எழுத்துணரி – Optical Character Recognition
- விக்கிமூலத்துக்கான எழுத்துணரி
- மின்னூல்கள் கிண்டில் கருவிக்கு அனுப்புதல் – Send2Kindle
- விக்கிப்பீடியாவிற்கான சிறு கருவிகள்
- மின்னூல்கள் உருவாக்கும் கருவி
- உரை ஒலி மாற்றி – இணைய செயலி
- சங்க இலக்கியம் – ஆன்டிராய்டு செயலி
- FreeTamilEbooks – ஆன்டிராய்டு செயலி

- FreeTamilEbooks – ஐஓஎஸ் செயலி
- WikisourceEbooksReportஇந்திய மொழிகளுக்ககான விக்கிமூலம் மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்
- FreeTamilEbooks.com – Download counter மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்

### அடுத்த திட்டங்கள்/மென்பொருட்கள்

- விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்
- முழு நேர நிரலரை பணியமர்த்தி பல்வேறு கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்குதல்
- தமிழ் NLP க்கான பயிற்சிப் பட்டறைகள் நடத்துதல்
- கணியம் வாசகர் வட்டம் உருவாக்குதல்
- கட்டற்ற மென்பொருட்கள், கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் வளங்களை உருவாக்குபவர்களைக் கண்டறிந்து ஊக்குவித்தல்

- கணியம் இதழில் அதிக பங்களிப்பாளர்களை உருவாக்குதல், பயிற்சி அளித்தல்
- மின்னூலாக்கத்துக்கு ஒரு இணையதள செயலி
- எழுத்துணரிக்கு ஒரு இணையதள செயலி
- தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்
- http://OpenStreetMap.org ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்
- தமிழ்நாடு முழுவதையும் http://OpenStreetMap.org ல் வரைதல்
- குழந்தைக் கதைகளை ஒலி வடிவில் வழங்குதல்
- http://Ta.wiktionary.org ஐ ஒழுங்குபடுத்தி API க்கு தோதாக மாற்றுதல்
- http://Ta.wiktionary.org க்காக ஒலிப்பதிவு செய்யும் செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுத்துப் பிழைத்திருத்தி உருவாக்குதல்
- தமிழ் வேர்ச்சொல் காணும் கருவி உருவாக்குதல்

- எல்லா http://FreeTamilEbooks.com மின்னூல்களையும் Google Play Books, GoodReads.com ல் ஏற்றுதல்
- தமிழ் தட்டச்சு கற்க இணைய செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுதவும் படிக்கவும் கற்ற இணைய செயலி உருவாக்குதல் ( aamozish.com/Course_preface போல)

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

### வெளிப்படைத்தன்மை

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும் அனைவருக்கும் பொதுவானதாகவும், 100% வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும்.இந்த இணைப்பில் செயல்களையும், இந்த இணைப்பில் மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம்.

கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும் மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், GNU GPL, Apache, BSD, MIT, Mozilla ஆகிய உரிமைகளில் ஒன்றாக வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள் யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

# நன்கொடை

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும்.

பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உடனே விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**Kaniyam Foundation**
**Account Number : 606 1010 100 502 79**
**Union Bank Of India**
**West Tambaram, Chennai**
**IFSC – UBIN0560618**
**Account Type : Current Account**

**UPI செயலிகளுக்கான QR Code**




BHIM UPI Payments Accepted at
**Kaniyam Foundation**



**Account Number : 606101010050279, IFSC Code: UBIN0560618**

Scan and Pay using any UPI supported Apps

குறிப்பு: சில UPI செயலிகளில் இந்த QR Code வேலை செய்யாமல் போகலாம். அச்சமயம் மேலே உள்ள வங்கிக் கணக்கு எண், IFSC code ஐ பயன்படுத்தவும்.

Note: Sometimes UPI does not work properly, in that case kindly use Account number and IFSC code for internet banking.